# مقرر الدورة

# 4

# பாடப் புத்தகம்

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)

மீள்பரிசீலனை : எம். அஹ்மத் (அப்பாஸி)

ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

بسم الله الرحمن الرحيم

# தௌஹீத்

# 4


தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)

மீள்பரிசீலனை : எம். அஹ்மத் (அப்பாஸி)


# التوحيد

# 4


ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد



المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | வஸீலாத் தேடுதல் (1) | 45 நிமிடங்கள் |
| 2 | வஸீலாத் தேடுதல் (2) | 45 நிமிடங்கள் |
| 3 | சூனியம், சாஸ்திரம், குறி பார்த்தல் (1) | 45 நிமிடங்கள் |
| 4 | சூனியம், சாஸ்திரம், குறி பார்த்தல் (2) | 45 நிமிடங்கள் |
| 5 | புராதண இடங்கள், அடயாளங்கள், உயிருள்ள, மரணித்த நபர்கள் மூலம் பரகத் தேடுதல் | 45 நிமிடங்கள் |
| 6 | ஷரீஆவுக்கு மாற்றமாகத் தீர்ப்பு வழங்கல் (1) | 45 நிமிடங்கள் |
| 7 | ஷரீஆவுக்கு மாற்றமாகத் தீர்ப்பு வழங்கல் (2) | 45 நிமிடங்கள் |
| 8 | ஷரீஆவுக்கு மாற்றமாகத் தீர்ப்பு வழங்கல் (3) | 45 நிமிடங்கள் |
| 9 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 10 | நேசம் வைத்தலும் நீங்கிக் கொள்ளலும் (1) | 45 நிமிடங்கள் |
| 11 | நேசம் வைத்தலும் நீங்கிக் கொள்ளலும் (2) | 45 நிமிடங்கள் |
| 12 | மார்க்கத்தைப் பரிகாசித்தல் | 45 நிமிடங்கள் |
| 13 | சில வழிகெட்ட இயக்கங்கள் - காதியானிகள் | 45 நிமிடங்கள் |
| 14 | ஷீஆக்கள் (1) | 45 நிமிடங்கள் |
| 15 | ஷீஆக்கள் (2) | 45 நிமிடங்கள் |

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்

# தவஸ்ஸுல் (வஸீலாத் தேடுதல்)

தவஸ்ஸுல் என்பது வஸீலா (وسيلة) என்ற சொல்லில் இருந்து பிறந்ததாகும். وسيلة (வஸீலா), وصيلة (வசீலா) ஆகிய இரண்டு சொற்களும் பொதுவாக ஒரே கருத்தை தருகின்றன. வஸீலா என்பது நாடப்படுகின்ற ஒன்றை அடைவதற்கான ஒரு வழிமுறையாகும்.

## அனுமதிக்கப்பட்ட வஸீலா முறைகள் :

நாடப்படுகின்ற இலக்குகளை அடைய உதவும் உதவி சாதனங்கள் அல்லது காரணிகள் இரண்டு வகைப்படும் :

**முதலாவது வகை** : இறை திருப்தியையும் சுவனத்தையும் அடைவதற்காக செய்யப்படும் வணக்க வழிபாடுகள் (செயற்பாடுகள்). எனவேதான் நாம் அனைத்து வணக்கங்களும் சுவர்க்கத்தில் நுழைவிக்கின்ற, நரகத்தில் இருந்து ஈடேற்றத்தை தருகின்ற வஸீலா என்று கூறுகிறோம்.

**இரண்டாவது வகை** : பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்படுவதற்காக மேற்கொள்ளப்படுகின்ற வஸீலா. (உதவி தேடல்) அதாவது: எங்களுடைய பிரார்த்தனைகளை இறைவன் அங்கீகரிப்பதற்காக ஏதாவதொன்றை நாம் அவன் முன் நிறுத்தி பிரார்த்திக்கின்றதையே இந்த இரண்டாவது வகை வஸீலா சுட்டிக் காட்டுகின்றது.

இதனை பல பிரிவுகளாக பிரிக்கலாம் :

1. **இறைவனின் திருநாமங்களைக் கொண்டு வஸீலாத் தேடுதல் :** இதில் பொதுவாக இறைவனின் திருநாமங்களை கொண்டும், அவனது குறிப்பிட்ட ஒரு நாமத்தைக் கொண்டும் வஸீலா தேடலாம்.

பொதுவாக இறைவனின் திருநாமங்களைக் கொண்டு வஸீலா தேடுவதற்கு உதாரணமாக பின்வரும் ஆதாரத்தை குறிப்பிடலாம். இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் அறிவிக்கும் இடர், கஷ்ட நேரத்தில் ஓதும் துஆவை எடுத்துக் கொள்ளலாம். அந்த துஆ பின்வருமாறு அமைந்துள்ளது:

*“இறைவா! நிச்சயமாக நான் உனது அடியான், உன்னுடைய அடிமையின் (ஆதமின்) மகன். உன்னுடைய அடிமையின் (ஹவ்வாவின்) மகன். என்னுடைய நெற்றிமுடி உன்னுடைய கையிலே இருக்கிறது. என்னிலே உன்னுடைய தீர்வே*

*அமுல்படுத்தப்படுகிறது. என் விடயத்தில் உனது தீர்ப்பு நீதமானதே. ஆகவே உனக்கு நீயே சூட்டிக்கொண்ட அல்லது உனது வேதத்தில் இறக்கி வைத்த அல்லது உனது படைப்புகளில் எதற்காவது நீ அறிவித்துக் கொடுத்த அல்லது உனது மறைவான ஞானத்தில் நீ தக்க வைத்திருக்கும் ஒவ்வொரு பெயரைக் கொண்டும், குர்ஆனை எனது இதயத்திற்கு குளிர்ச்சியாகவும் எனது உள்ளத்திற்கு ஒளிமயமாகவும் என் கவலையை நீக்கக்கூடியதாகவும் என் இடரையும் பதட்டத்தையும் போக்கக்கூடியதாகவும் ஆக்குவாயாக! என்று கேட்கிறேன்". (அஹ்மத் 3712)*

இந்த ஹதீஸிலிருந்து **"உனக்கே உரிய அனைத்து பெயர்களைக் கொண்டும்"** என்ற கூற்றையே ஆதாரமாக கூறலாம். சில வேளைகளில் நாம், *இறைவா! உன்னுடைய அழகிய திருநாமங்களைக் கொண்டு உன்னிடம் கேட்கின்றேன்* என்று கூறுகின்றோம். இவ்வகையான துஆவிற்கு கீழ்வரும் அல்குர்ஆன் வசனத்தை ஆதாரமாகக் கூறலாம்.

﴿وَلِلَّهِ ٱلْأَسْمَآءُ ٱلْحُسْنَىٰ فَٱدْعُوهُ بِهَا﴾ الأعراف: ١٨٠

*அல்லாஹ்விற்கு அழகிய திருநாமங்கள் உள்ளன. அதனைக் கொண்டே அவனை அழையுங்கள்'' (அல் - அஃராப் : 180)*

அல்லாஹ்வின் குறிப்பிட்ட ஒரு பெயரைக் கொண்டு வஸீலா தேடுவதற்கு உதாரணமாக கீழ்வரும் கூற்றுக்களை எடுத்துக் கொள்ளலாம்.

*பிழை பொறுப்பாளனே! என் பிழைகளை பொறுப்பாயாக! அன்பாளனே! என் மீது இரக்கம் காட்டுவாயாக! அதே போல் நீ மன்னிப்பாளன், மன்னிப்பை விரும்புகிறவன். ஆகவே என்னை மன்னிப்பாயாக!*

2. **அல்லாஹ்வின் பண்புகள் மூலம் அவனிடம் வஸீலா தேடுதல்.**

இதிலும் ஒரு குறிப்பிட்ட பண்பை வைத்து அல்லது பொதுவான அவனது பண்புகளை வைத்து வஸீலா தேடலாம். அவனது செயற்பாடுகள் அனைத்தும் அவனது பண்புகளாகும். பொதுவாக அவனது பண்புகளை வைத்து வஸீலா தேடுவதற்கு பின்வரும் உதாரணத்தை குறிப்பிடலாம். *இறைவா! உனது அழகிய திருநாமங்களைக் கொண்டும் உனது உயர்ந்த பண்புகளைக் கொண்டும் நான் உன்னிடம் கேட்கிறேன்''.* அவனது குறிப்பிட்ட ஒரு பண்பை வைத்துக் கேட்பதற்கு பின்வரும் உதாரணத்தைக் குறிப்பிடலாம்.

**أَعُوذُ بعزَّة الله وَقُدْرَته من شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ**

*நான் காணுகின்ற, நான் தவிர்ந்து கொள்ள வேண்டிய தீங்கை விட்டும் அல்லாஹ்வின் கண்ணியத்தைக் கொண்டும் அவனது சக்தியைக் கொண்டும் பாதுகாவல் தேடுகிறேன்.*

அவனது செயற்பாடுகளை வைத்து வஸீலா தேடுவதற்கு பின்வரும் உதாரணத்தை குறிப்பிடலாம்:

اَللهُمَّ صَلِّ عَلَى مُحَمَّد وعَلَى آل مُحَمَّد كَما صَلَّيْتَ عَلَى إبْرَاهِيْم وعَلَى آل إبْرَاهِيْمَ.

*யா அல்லாஹ்! இப்ராஹிம் (அலை) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மீதும் அருள் புரிந்தது போன்று முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மீதும் அருள் புரிவாயாக!*

இங்கே நாம் இறைவனிடத்தில் நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் அல்லாஹ் அருள் புரிந்தது போன்று முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் அருள் புரியுமாறு கேட்கின்றோம். இது இறைவனுடைய செயலை முன்வைத்தே அவனிடம் கேட்கிறோம்.

3. **அல்லாஹ்வை ஈமான் கொள்வதின் மூலம் அவனிடம் வஸீலாத் தேடல்.**

அதாவது, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஈமான் கொள்வதின் மூலமாக மனிதன் அல்லாஹ்வை நெருங்குதல். அவன், யா அல்லாஹ்! உன்னையும் உனது தூதரையும் ஈமான் கொண்டதின் காரணமாக உன்னிடத்திலே இன்னின்ன விஷயங்களை கேட்கிறேன் என்று அல்லாஹ்விடம் வினவுகின்றான். இது அனுமதிக்கப்பட்ட வஸீலா முறையாகும்.

இதற்கு ஆதாரமாக பின்வரும் இறைவசனங்களைக் குறிப்பிடலாம்:

﴿ إِنَّ فِي خَلْقِ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ وَٱخْتِلَٰفِ ٱلَّيْلِ وَٱلنَّهَارِ لَءَايَٰتٍ لِّأُو۟لِى ٱلْأَلْبَٰبِ ﴿١٩٠﴾ ٱلَّذِينَ يَذْكُرُونَ ٱللَّهَ قِيَٰمًا وَقُعُودًا وَعَلَىٰ جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِى خَلْقِ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هَٰذَا بَٰطِلًا سُبْحَٰنَكَ فَقِنَا عَذَابَ ٱلنَّارِ ﴿١٩١﴾ رَبَّنَآ إِنَّكَ مَن تُدْخِلِ ٱلنَّارَ فَقَدْ أَخْزَيْتَهُۥ ۖ وَمَا لِلظَّٰلِمِينَ مِنْ أَنصَارٍ ﴿١٩٢﴾ رَّبَّنَآ إِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِى لِلْإِيمَٰنِ أَنْ ءَامِنُوا۟ بِرَبِّكُمْ فَـَٔامَنَّا ۚ رَبَّنَا فَٱغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّـَٔاتِنَا وَتَوَفَّنَا مَعَ ٱلْأَبْرَارِ ﴾ آل عمران: ١٩٠ - ١٩٣

*நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியை படைத்திருப்பதிலும் இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோருக்கு பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அறிவுடைய) அத்தகையோர் நின்ற நிலையிலும் உட்கார்ந்த நிலையிலும் தங்கள் விலாப்புறங்கள் மீது (சாய்ந்து)ம் அல்லாஹ்வையே நினைத்து வானங்கள் மற்றும்*

*பூமியின் படைப்பை பற்றியும் சிந்தித்து எங்கள் இரட்சகனே! நீ இவற்றை வீணுக்காக படைக்கவில்லை, நீ மிகத்தூயவன். நரக நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக! (என்றும்) எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ எவரை (நரக) நெருப்பில் புகுத்தினாயோ அவரை நிச்சயமாக நீ இழிவுபடுத்தி விட்டாய். இன்னும் அநியாயக்காரர்களுக்கு உதவி செய்வோர்(ஒருவரும்) இல்லை (என்றும்) எங்கள் இரட்சகனே! உங்கள் இரட்சகனை விசுவாசியுங்கள் என்று (எங்களை) விசுவாசத்தின்பால் அழைத்தோரின் அழைப்பை நிச்சயமாக நாங்கள் செவியுற்று நாங்களும் (அவ்வாறே) விசுவாசம் கொண்டோம். எங்கள் இரட்சகனே! ஆதலால் எங்கள் குற்றங்களை மன்னிப்பாயாக! எங்களுடைய தீமைகளை எங்களை விட்டு நீக்கியும் விடுவாயாக! மேலும் (முடிவில்) நல்லோர்களுடன் எங்களை மரணிக்க செய்வாயாக! என்றும் கூறக்கூடியவர்கள். (ஆல இம்ரான் : 190 – 193)*

நபிகளாரை ஈமான் கொள்வதனை மன்னிப்பு பெறுவதற்கான வஸீலாவாக அமைத்துக் கொண்டார்கள். அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஈமான் கொள்வதின் மூலமாக வஸீலா தேடுவதும் அல்லாஹ்வின் மீது அன்பு வைப்பதைக் கொண்டும் அவனது தூதரின் மீது அன்பு வைப்பதைக் கொண்டும் வஸீலா தேடுவதும் அனுமதிக்கப்பட்டுள்ளது. ஏனெனில் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைப்பது பிழை பொறுப்பாளனிடமிருந்து பாவ மீட்சியை தேடித்தர காரணமாக அமைகின்றது. அதே போன்று அல்லாஹ்வினதும் அவனது தூதரினதும் அன்பானது பாவமீட்சிக்கு காரணமாக அமைகின்றது. எனவே அல்லாஹ்விடத்தில் இவைகளினூடான வஸீலாத் தேடுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

4. **அழைப்பாளன் தன்னுடைய நிலைமையை முறையிட்டு அல்லாஹ்விடம் வஸீலா தேடுதல்.**

எவ்விதமான விஷயங்களையும் குறிப்பிடாமல் தன்னுடைய நிலைமையை மாத்திரம் சொல்லி அல்லாஹ்விடம் வஸீலா தேடுதல். யா அல்லாஹ்! நான் உன்னிடத்தில் தேவையுடையவனாக இருக்கிறேன். நான் உன்னிடத்தில் கைதியாய் அடிமையாய் இருக்கிறேன். இன்னும் இத்தகைய வாசகங்களை பயன்படுத்தி அல்லாஹ்விடம் வஸீலா தேடுவதை உதாரணமாக குறிப்பிடலாம். இதற்கு ஆதாரமாக மூஸா(அலை) அவர்கள் இரு பெண்மண்களின் ஆட்டுமந்தைக்கு நீர் வார்த்துவிட்டு பின்பு நிழல் பக்கமாக சென்று பின்வருமாறு கூறியதை ஆதாரமாகக் கொள்ளலாம்.

﴿رَبِّ إِنِّي لِمَآ أَنزَلۡتَ إِلَيَّ مِنۡ خَيۡرٖ فَقِيرٞ﴾ القصص: ٢٤

*என் இறைவா! எனக்கு நீ வழங்கும் நன்மையில் தேவையுடையவனாக இருக்கிறேன். (அல்-கஸஸ் : 24)*

இங்கே அவர் எதனையும் குறிப்பிடாமல் தன்னுடைய தேவையைக் கேட்கிறார்.

ஒரு மனிதன் தனது நிலைமையை வர்ணித்து கேட்பதானது அவன் அருளையும் அன்பையும் நலவையும் பெறுவதற்கு போதுமானதாகும். குறிப்பாக அன்பாளர்களுக்கெல்லாம் அன்பாளனான அல்லாஹ்விடத்தில் இப்படி கேட்பதானது மிக ஏற்றமானதாகும்.

**5. எவருடைய பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும் என எதிர்பார்க்கப்படுகிறதோ அவரின் பிரார்த்தனையின் ஊடாக வஸீலா தேடுதல்.**

இதற்கு ஆதாரமாக பின்வரும் நபி மொழியைக் குறிப்பிடலாம். நபி(ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை தினத்தன்று பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு மனிதர் அங்கே நுழைந்து ரஸூல் (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! சொத்துக்கள் அழிந்துவிட்டன, அனைத்து வழி வகைகளும் அறுபட்டன. எனவே எங்களுக்காக அல்லாஹ்விடத்தில் மழை பொழியுமாறு பிரார்த்தியுங்கள் என்றார். அப்பொழுது நபியவர்கள் தனது இரு கரங்களையும் உயர்த்தி, இறைவா! எங்களுக்காக மழை பொழிவிப்பாயாக! எங்களுக்காக மழை பொழிவிப்பாயாக!! எங்களுக்காக மழை பொழிவிப்பாயாக!!! என்று மூன்று முறை பிரார்த்தித்தார்கள்.

இது பற்றி அனஸ்(ரழி) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள் :

அல்லாஹ்வின் மீது ஆணையாக நாங்கள் வானத்தில் எந்தவொரு மேகக்கூட்டத்தையோ மழை முகில்களையோ காணவில்லை. மதீனாவின் எந்தவொரு மலைப்பகுதியிலோ அல்லது வீட்டின் உச்சி பகுதியிலோ மேகக்கூட்டங்கள் வருவதை காணவில்லை. ஆனால் அவருக்கு பின்னால் கேடயத்தை போன்ற அளவு மேகக்கூட்டம் வந்து நடு வானத்தை அடைந்ததும் அது விரிவடைந்து மழை பொழிய ஆரம்பித்தது. நபி(ஸல்) அவர்கள் தனது தாடியிலிருந்து மழைநீர் வடிந்த நிலையிலே மிம்பரிலிருந்து இறங்கினார்கள். (புஹாரி 1014, முஸ்லிம் 897)

6. **தான் செய்த நல்ல செயல்களைக் கொண்டு அல்லாஹ்விடத்தில் வஸீலா தேடுதல்.**

மனிதன் தனது நல்ல செயலை காரணம் காட்டி பிரார்த்தனையில் ஈடுபடுகிறான். அது அவனது வேண்டுதல் அங்கீகரிக்கப்படுவதற்கு காரணமாக அமைகிறது. இதற்கு உதாரணமாக நபியவர்கள் கூறிய மூன்று குகைவாசிகளுடைய சம்பவத்தைக் கூறலாம்.

அச்சம்பவம் பின்வருமாறு :-

பனூ இஸ்ரவேலர்களுடைய காலத்தில் மூன்று பேர் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது இடைவழியில் ஒரு குகையில் இரவை கழிக்க நேரிட்டது. மூவரும் அக்குகையினுள் நுழைந்தனர். அல்லாஹ் அவனுடைய ஞானத்தின் மூலம் அவர்களை சோதிப்பதற்காகவும் அவனுடைய அடியார்களுக்கு படிப்பினைக்காகவும் ஒரு பாறாங்கல்லை விழச்செய்து அக்குகை வாயிலை அடைத்துவிட்டான். அவர்கள் அக்கல்லை அகற்ற முயன்றனர், ஆனால் அவர்களால் முடியவில்லை. இறுதியில் ஒவ்வொருவரும் தாம் செய்த நல்ல செயல்பாடுகளை முன் வைத்து அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் மட்டுமே அக்கல்லை அகற்ற முடியும் என்ற முடிவிற்கு வந்தனர். ஒவ்வொருவரும் தாம் செய்த நல்ல செயல்பாடுகளை முன் வைத்து அல்லாஹ்விடம் பிரார்த்திக்க ஆரம்பித்தனர்.

முதலாமவர் : இறைவா! எனக்கு வயது முதிர்ந்த தாயும் தகப்பனும் இருந்தனர். நான் ஆட்டிலிருந்து பால் கறந்தால் அவர்களுக்கு கொடுக்காத வரையில் வேறு யாருக்கும் கொடுப்பதில்லை. ஒருநாள் நான் விறகு தேடிச்சென்று சற்று தாமதித்து வந்தேன். அவ்வேளை அவர்களிருவரும் தூங்கியிருந்தனர். நான் யாருக்கும் கொடுக்காமல் அவர்கள் எழுந்திரிக்கும் வரை பாலை வைத்துக் கொண்டு காத்திருந்தேன். அவர்கள் காலையில்தான் எழுந்தனர். இறைவா! நான் இதை உனக்காக செய்திருந்தால் இக்கல்லை எங்களை விட்டும் அகற்றுவாயாக! என்று பிரார்த்தித்தார். அக்கல் சற்று அகன்றது, எனினும் வெளியே வர முடியாமல் இருந்தது.

இரண்டாமவர் : இறைவா! எனது சிற்றப்பாவிற்கு ஒரு மகள் இருந்தாள். நான் அவளை மிகவும் விரும்பினேன். ஆனால் அவள் மறுத்து விட்டாள். கடுமையான வறட்சி ஏற்பட்டபோது உதவிதேடி அவள் என்னிடத்தில் வந்தாள். நான் அவளை மீண்டும் தவறாக நடக்க அழைத்தேன். அவளை வாட்டிய வறுமையின் காரணமாக அவள் உடன்பட்டாள். நான் அவளுடன் தவறாக நடத்தையில் ஈடுபட ஆரம்பித்த போது, நீ அல்லாஹ்வை பயந்து கொள்! எந்தவொரு முத்திரையையும் அதன் உரிமை இல்லாமல் அகற்றிவிடாதே! என்று எச்சரித்தாள். உலகிலேயே அவள் எனக்கு மிகவும் விருப்பமானவளாக இருந்தும் நான் தவிர்ந்து கொண்டேன். அவளுடைய தேவையையும் நிறைவேற்றினேன். அதன் மூலம் பத்தினித் தனத்தையும் குடும்பத்துடன் சேர்ந்து நடத்தலையும் பாதுகாத்தேன். இறைவா! இதை உனக்காக செய்திருந்தால் எங்களுக்கு நிவாரணம் அளிப்பாயாக! என்று கூறினார். அக்கல் இன்னும் சற்று அகன்றது. எனினும் யாருக்கும் வெளியேற முடியாமல் இருந்தது.

மூன்றாமவர் : இறைவா! எனக்கு அதிகமான வேலையாட்கள் இருந்தனர். அவர்கள் அனைவருக்கும் உரிய கூலியை கொடுத்து விட்டேன். ஆனால் ஒருவர் மட்டும் அதனை எடுக்காமல் சென்றுவிட்டார். அவருடைய கூலியை பயன்படுத்தி வியாபாரம் செய்தேன். அதன் மூலம் நிறைய ஒட்டகங்களும் ஆடுகளும் மாடுகளும் அடிமைகளும் கிடைத்தன. பிறகு ஒருநாள் அக்கூலிக்காரன் தனது கூலியை கேட்டு வந்தான். இதோ இங்கிருக்கும் ஒட்டகங்கள், ஆடுகள், மாடுகள், அடிமைகள் அனைத்தும் உன்னுடையது தான் எனக் கூறினேன். அதற்கவர் நீ அல்லாஹ்வை பயந்து கொள்! என்னை பரிகசிக்காதே! என்று கூறினார். நான் உன்னை பரிகசிக்கவில்லை. இதுதான் உன்னுடைய கூலி என விபரத்தை கூறினேன். அப்பொழுது அவர் எதனையும் வைக்காமல் அனைத்தையும் கொண்டு போய்விட்டார். நான் அவருக்கு கூலியை மட்டும் கொடுத்திருந்தாலும் அவர் கொண்டு போய் இருப்பார். எனினும் அமானிதம் என்பதற்காகவே அக்கூலியின் மூலம் விருத்தியடைந்த அனைத்தையும் கொடுத்தேன். இறைவா! இதனை உனக்காக செய்திருந்தால் எங்களுக்கு நிவாரணம் அளிப்பாயாக! என்று கூறினார். அக்கல் மேலும் சிறுது அகன்றது. அம்மூவரும் வெளியே சென்றனர். (ஆதாரம் : புகாரி 2215, முஸ்லிம் 2743)

ஒருவன் *இறைவா! நான் எனது பெற்றோருக்கு செய்த உபகாரத்தின் பிரகாரம் எனது குழந்தைகளும் எனக்கு உபகாரம் செய்ய அருள்பாலிப்பாயாக* என்று கூறினால் இது ஷரீயத் அனுமதித்த வஸீலா முறையாகும். இது நற்செயல்களைக் கொண்டு வஸீலா தேடுவதாகும்.

## தடுக்கப்பட்ட வஸீலா முறைகள் :

வஸீலா தேட முடியாத முறை எதுவென்றால் மார்க்கம் அனுமதிக்காத தடுக்கப்பட்ட வஸீலா முறையாகும். ஊதாரணமாக, நபிகளாரைக் கொண்டோ அவர்களின் கண்ணியத்தைக் கொண்டோ வஸீலா தேடுவதாகும். உண்மையிலேயே இது வஸீலாவாக இருக்க முடியாது. அதனால் நமக்கு எவ்வித பிரயோஜனமும் ஏற்படாது. அல்லாஹ்விடத்தில் ரஸூல் (ஸல்) அவர்களுக்கு கண்ணியமும் மதிப்பும் உள்ளது. அதன் மூலம் நபியவர்கள் தான் பிரயோஜனம் அடைவார்கள். வேறுயாரும் அதன்மூலம் பிரயோஜனம் அடைய முடியாது. நபியவர்களின் கண்ணியத்தின் மூலம் வஸீலா தேட முடியாது என்கின்ற போது அவர்களைக் கொண்டே வஸீலா தேடுவதென்பது அறவே முடியாது என்பது தெளிவாகின்றது. தற்காலத்தில் நபியவர்களைக் கொண்டு வஸீலா தேடமுடியாது என்பதற்கு ஆதாரமாக உமர் (ரழி) அவர்களுடைய காலத்தில் ஏற்பட்ட சம்பவத்தைக் குறிப்பிடலாம். உமர் (ரழி) அவர்களுடைய காலத்தில் நடந்த சம்பவத்தைக் குறிப்பிடலாம். அவர்களுடைய காலத்தில் ஸஹாபாக்களுக்கு வறட்சி ஏற்பட்டது. அப்பொழுது அவர் ஸஹாபாக்களை

அழைத்துக் கொண்டு மழை வேண்டி பிரார்த்திக்க சென்றார். இறைவா! எமது நபியின் (துஆவின்) மூலம் உன்னிடத்தில் வஸீலா தேடினோம். அதன் மூலம் நீ மழை பொழிவித்தாய்!. தற்போது உனது நபியின் சிறிய தந்தையின் (துஆவின்) மூலமாக வஸீலா தேடுகிறோம். எங்களுக்கு மழை பொழிவிப்பாயாக எனக் கேட்டார்கள். அப்பொழுது அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப் (ரழி) அவர்கள் மழை வேண்டி பிரார்த்தித்தார்கள். அப்பொழுது ஸஹாபாக்களுக்கு மழை பொழிவிக்கப்பட்டது. (புஹாரி : 1010) இந்த ஹதீஸின் மூலமாக நபி(ஸல்) அவர்களின் துஆவின் மூலம் ஸஹாபாக்கள் எவ்வாறு வஸீலா தேடினார்கள் என்பது தெளிவாகின்றது. அதாவது ஸஹாபாக்கள் நபி(ஸல்) அவர்களின் துஆவின் மூலமே வஸீலா தேடினார்களேயன்றி அவர்களைக் கொண்டு வஸீலா தேடவில்லை. அவ்வாறு அவர்களைக் கொண்டோ, அவர்களுடைய கண்ணியத்தைக் கொண்டோ மழை தேடியிருந்தால் அப்பாஸ் (ரலி) அவர்களை அழைத்து வரவேண்டிய தேவையிருக்காது, ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் மரணித்தாலும் அவர்களுடைய பதவியும் கண்ணியமும் அல்லாஹ்விடத்தில் இருந்து கொண்டேதானிருக்கும். அவ்வாறிருக்கும் போது அப்பாஸ் (ரலி) அவர்களின் பிரார்த்தனை அவசியமற்றது.

இணைவைப்பாளர்கள் தங்களது சிலைகள், சிற்பங்கள் மூலமும், அறிவிலிகள் தங்களது நேசக்காரர்கள் மூலமும் செய்யும் வஸீலா ஷிர்க்கானதாகவே கருதப்படும். நாம் அதனை வஸீலா என்றோ நூதனம் என்றோ கருத முடியாது. மாறாக அதனை ஷிர்க்கின் அடித்தளம் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் இத்தகைய வஸீலா தேடுபவர்கள் தங்கள் தேடல்களை நிறைவேற்றும் காரணகர்த்தாவென்று எவர்களை கருதுகிறார்களோ அவர்களிடத்திலே பிராத்திக்கிறார்கள். ஒரு மனிதர் தான் நேசக்காரர் என கருதுபவரிடத்தில் வந்து அல்லாஹ்வின் நேசக்காரரே! என்னைக் காப்பாற்றுங்கள்! எனக் கூறுகிறார். அதே போன்று நபியவர்களின் குடும்பத்தினரே! என்னை காப்பாற்றுங்கள்! எனவும் அல்லாஹ்வின் தூதரே! என்னை காப்பாற்றுங்கள்! எனவும் கூறுகின்றனர். இதனையும் நாம் வஸீலாவாக கருத முடியாது. மாறாக இது ஷிர்க்காகும். அல்லாஹ்வுடன் இணையாளர்களை கூட்டு சேர்த்ததனால் இது ஷிர்க்கை ஏற்படுத்திவிட்டது.

மேலும் இது புத்தியில் மடமையை ஏற்படுத்திவிட்டது என்பது பற்றி அல் குர்ஆன் பின் வருமாறு குறிப்பிடுகிறது:

﴿ وَمَنْ أَضَلُّ مِمَّن يَدْعُواْ مِن دُونِ ٱللَّهِ مَن لَّا يَسْتَجِيبُ لَهُۥٓ إِلَىٰ يَوْمِ ٱلْقِيَٰمَةِ وَهُمْ عَن دُعَآئِهِمْ غَٰفِلُونَ ﴾

الأحـ قاف: ٥

*மேலும் மறுமைநாள் வரை (அழைத்தாலும்) தனக்கு பதிலளிக்க முடியாத அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பவர்களை விட வழிகெட்டவர்கள் யார்? அவர்களோ இவர்களுடைய அழைப்பை அறிய முடியாது. ( அல் அஹ்காப் : 5)*

﴿وَإِذَا حُشِرَ ٱلنَّاسُ كَانُواْ لَهُمۡ أَعۡدَآءٗ وَكَانُواْ بِعِبَادَتِهِمۡ كَٰفِرِينَ﴾ الأحقاف: ٦

*இன்னும் மனிதர்கள்(மறுமையில்) ஒன்று திரட்டப்பட்டால் (அழைக்கப்பட்டவர்களான) அவர்கள் இவர்களுக்கு விரோதிகளாக இருப்பர். இவர்கள் (தங்களை) அவர்கள் வணங்கிக் கொண்டிருந்ததையும் நிராகரித்து விடுவர். (அல் அஹ்காப் : 6)*

இப்படியாக அழைக்கப்படுபவர்களை எதற்கும் இயலாதவர்கள் என்றும் மறுமைநாள் வரை இவர்கள் அழைத்தபோதிலும் அவர்கள் பதிலளிக்கப் போவதில்லை என்றும் அல்லாஹ் வர்ணித்துள்ளான். அது போல் தங்களை யார் அழைக்கிறார்கள் என்று கூட அறியாத அதுபற்றி ஒன்றையும் உணராதவர்கள் என்றும் அழைக்கப்படுபவர்களை அல்லாஹ் வர்ணித்துள்ளான். உண்மையான தேவைகளை வேண்டி நிற்கிற மறுமைநாளில் மனிதர்கள் எழுப்பப்படும் பொழுது (அழைக்கப்பட்டவர்களான) அவர்கள் இவர்களுக்கு எதிராக இருப்பதுடன் அவர்கள் வணங்கப்பட்டதையும் மறுத்துவிடுவர். இப்படியானவைகளுக்கு உதாரணங்களாக நேசக்காரர்களிடத்திலும் சிலைகளிடத்திலும் பிரார்த்திப்பதை குறிப்பிடலாம். இது போன்றவற்றை வஸீலா என்று கூற முடியாது. மாறாக, மார்க்கத்தை விட்டும் வெளியேற்றும் ஷிர்க்காகவே அது அமையும் என்பதாக அல்லாஹ் பின்வருமாறு எச்சரிக்கிறான்.

﴿وَمَن يَدۡعُ مَعَ ٱللَّهِ إِلَٰهًا ءَاخَرَ لَا بُرۡهَٰنَ لَهُۥ بِهِۦ فَإِنَّمَا حِسَابُهُۥ عِندَ رَبِّهِۦٓۚ إِنَّهُۥ لَا يُفۡلِحُ ٱلۡكَٰفِرُونَ﴾ المؤمنون: ١١٧

*மேலும், (நபியே!) எவன் அல்லாஹ்வுடன் வேறு கடவுளை அழைக்கிறானோ அவனிடத்தில் அது பற்றி எவ்வித ஆதாரமும் இல்லை. அவனுடைய கணக்கெல்லாம் அவனுடைய இரட்சகனிடத்தில்தான் இருக்கிறது. நிச்சயமாக நிராகரிப்பாளர்கள் வெற்றிபெற மாட்டார்கள். (அல் மு.ஃமினூன் : 117)*

இங்கே அல்லாஹ் இத்தகைய அழைப்பாளர்களை (அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பவர்களை) கா.ஃபிர்கள் என்று நாமம் சூட்டியுள்ளான்.

# சூனியம், சாஸ்திரம் பார்த்தல், குறி சொல்லல்

இவை அனைத்தும் தடை செய்யப்பட்ட ஷைத்தானிய செயற்பாடுகளின் கூட்டச் சேர்க்கையாகும். இது இஸ்லாமிய அகீதாவை நாசப்படுத்தக் கூடியதும் பாழ்படுத்தக் கூடியதுமாகும். ஏனெனில் இவை அனைத்தும் அல்லாஹ்விற்கு இணை வைக்கும் செயற்பாடுகளின் மூலமாகவே மேற்கொள்ளப் படுகின்றன.

## சூனியம்

சூனியம் என்பது மறைமுகமாக அற்ப காரணிகளை வைத்து செய்யப்படுகின்ற ஒரு கலையாகும். பார்வைகளால் அறிய முடியாத விதத்தில் மறைமுகமாக மேற்கொள்ளப்படும் செயற்பாடுகளின் காரணமாகவே இதற்கு சூனியம் என பெயர் சூட்டப்பட்டுள்ளது. மந்திரித்தல், குறிப்பிட்ட சில வார்த்தைகள், வைத்தியம் மேற்கொள்ளல், நெருப்பு மூட்டும் செயற்பாடுகள் போன்றவைகளை இது குறிக்கும். இது யதார்த்தமான ஒன்று. சூனியத்தினால் சில தாக்கங்கள் ஏற்படுகின்றன. அவைகளில் சில உடலிலும் உள்ளத்திலும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. அவைகளின் மூலமாக நோய்வாய்ப்படலாம், கணவன் மனைவிக்கு மத்தியில் பிரிவினை ஏற்படுத்தப்படலாம். இந்த தாக்கங்கள் அனைத்தும் இறைவனின் நாட்டத்தின் பிரகாரம் அவனது நியதிக்கு உட்பட்ட விதத்திலேயே நடைபெறுகின்றன. இவை அனைத்தும் ஷைத்தானிய செயற்பாடுகளாகும். இவைகளில் அதிகமானவைகள் இறைவனுக்கு இணைகற்பிக்கும் செயல்பாடுகளினால் தீய ஆத்மாக்களை பயன்படுத்தி மேற்கொள்ளப் படுகின்றது. எனவே தான் அல்லாஹ் இந்த செயற்பாடுகளை அவனுக்கு இணைகற்பிக்கும் செயல்பாடுகளுடன் தொடர்பு படுத்தி கூறியிருக்கிறான். இதனை நபி (ஸல்) அவர்கள் நீண்டதொரு ஹதீஸிலே பின்வருமாறு கூறிக்காட்டினார்கள் :

*நாசப்படுத்தும் ஏழு பெரும்பாவங்களை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள் என்றார்கள். அதற்கு ஸஹாபாக்கள் அவை எவை? என வினவிய போது, அல்லாஹ்விற்கு இணைவைப்பதும் சூனியம் செய்வதும் இதில் அடங்கும் என்றார்கள். (புஹாரி : 5764)*

இவை இரண்டு விதத்தில் இணைவைக்கும் செயற்பாட்டில் அடங்கும் :

1. சூனியக்காரர்களின் உதவியாளர்களாக இருக்க ஷைத்தான்களுடன் தொடர்பு வைத்து அவர்களை பயன்படுத்தி அவர்கள் விரும்புகின்றவற்றின் மூலமாக அவர்களை நெருங்குதல். சூனியம் ஷைத்தான்கள் கற்பித்த செயல்,

﴿وَلَٰكِنَّ ٱلشَّيَٰطِينَ كَفَرُواْ يُعَلِّمُونَ ٱلنَّاسَ ٱلسِّحْرَ﴾ البقرة: ١٠٢

*என்றாலும் ஷைத்தான்களே மக்களுக்கு சூனியத்தை கற்பித்து இறைவனை நிராகரித்தனர். (அல் பகரா : 102)*

2. மறைமுகமான அறிவு இருக்கிறது என்று வாதாடி, அதிலே அல்லாஹ்வுக்கு இணைகற்பித்தல். இது தெளிவான நிராகரிப்பும் வழிகேடுமாகும். இதனை மேற்கொள்வோருக்கு மறுமையில் எந்தவொரு பயனும் கிடைக்காது.

﴿وَلَقَدْ عَلِمُوا۟ لَمَنِ ٱشْتَرَىٰهُ مَا لَهُۥ فِى ٱلْءَاخِرَةِ مِنْ خَلَٰقٍ﴾ البقرة: ١٠٢

*அதனை விலைக்கு வாங்கியோருக்கு மறுமையில் எந்த பயனும் இல்லை என்பதை உறுதியாக அவர்கள் அறிந்து வைத்துள்ளனர். (அல் பகரா : 102)*

மேற்சொன்ன விதத்தில் இது இருக்குமாயின் அது இறை நிராகரிப்பும் ஏகத்துவத்திற்கு முரணான இணைவைக்கும் செயற்பாடுமாகும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. பெரும் ஸஹாபாக்கள் கொலை செய்தது போன்று இதனை மேற்கொள்பவர்களை கொலை செய்வது கடமையாகும். மக்கள் சூனியத்திலும் சூனியக்காரர்கள் விடயத்திலும் பொடுபோக்காக இருக்கிறார்கள்.

இந்த சூனியம் பண்டைய காலத்திலிருந்தே உருவான ஒன்றாகும். நபி மூஸா (அலை) அவர்கள் காலத்திற்கு முன்பே பாபிலோனயர்கள் இதில் பிரபலமடைந்திருந்தார்கள். அதற்குப் பின் பாரசீகர்களிடமும் எகிப்தியரிடமும் இந்துக்களிடமும் ஊடுறுவியது. யூத கிறிஸ்தவர்களிடமும் இந்த சூனியம் இருந்ததுடன் அவர்களின் மூலமாக அரேபியர்களிடமும் ஊடுறுவியது.

நபி (ஸல்) அவர்கள் கூட இந்த சூனியத்தால் பாதிக்கப்பட்டார்கள். என்றாலும் அது அவர்களுக்கு அருளப்படும் வஹீயில் எவ்வித தாக்கத்தையும் செலுத்தவில்லை. ஏனெனில் இந்த வஹீயைப் பாதுகாக்க அல்லாஹ் பொறுப்பெடுத்துள்ளான்.

(பார்க்க : புஹாரி : 3268, 5763, 5765, 5766, 6063, 6391 முஸ்லிம் : 2189)

மு.ஃ.தஸிலாக்களையும் அஹ்லுஸ்ஸுன்னாவைச் சேர்ந்த சிலரையும் தவிர ஏனைய அனைத்து முஸ்லிம்களும் சூனியத்தில் யதார்த்தம் உள்ள பகுதியும் கற்பனையான பகுதியும் இருப்பதாகவும், அல்லாஹ்வின் உத்தரவின் படி அதனால் தாக்கம் செலுத்த முடியுமெனவும் ஏற்றுக் கொள்கின்றனர்.

ஏனெனில் யதார்த்தம் இல்லாத, தாக்கம் செலுத்த முடியாத ஒன்றை நற்செயல்களை அழிக்கும் பெரும்பாவங்களிலென்றாக நபியவர்கள் கூறியிருக்க மாட்டார்கள். அத்துடன் இது போன்ற யதார்த்தம் இல்லாத வெறும் கற்பனையான ஒரு

விடயத்தைச் செய்தவனுக்குரிய தீர்ப்பாக அவன் காபிர் என்றோ, அவனுக்குரிய தண்டனையாக கொலை செய்வதையோ மார்க்கம் வழங்கியிருக்கமாட்டாது.

﴿وَمَا كَفَرَ سُلَيْمَٰنُ وَلَٰكِنَّ ٱلشَّيَٰطِينَ كَفَرُواْ يُعَلِّمُونَ ٱلنَّاسَ ٱلسِّحْرَ﴾ ال بقرة: ١٠٢

*ஆனால் ஸுலைமான் ஒருபோதும் நிராகரித்தவர் அல்லர். ஷைத்தான்கள் தாம் நிராகரிப்பவர்கள். அவர்கள்தாம் மனிதர்களுக்குச் சூனியத்தைக் கற்றுக்கொடுத்தார்கள் (அல் பகரா : 102).*

﴿وَمَا يُعَلِّمَانِ مِنْ أَحَدٍ حَتَّىٰ يَقُولَآ إِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا تَكْفُرْ﴾ ال بقرة: ١٠٢

*ஆனால் அவர்கள் இருவரும் ""நிச்சயமாக நாங்கள் சோதனையாக இருக்கிறோம் (இதைக் கற்று) நீங்கள் நிராகரிக்கும் கா.்.பிர்கள் ஆகிவிடாதீர்கள்"" என்று சொல்லி எச்சரிக்காத வரையில், எவருக்கும் இ(ந்த சூனியத்)தைக் கற்றுக் கொடுக்கவில்லை. (அல் பகரா : 102).*

எனவே மேற்கூறப்பட்ட வசனங்களின் அடிப்படையில் யதார்த்தமில்லாத, தாக்கம் செலுத்த முடியாத வெறும் கற்பனையான ஒரு விடயத்தை கற்கவோ கற்றுக்கொடுக்கவோ முடியாது, அவ்வாறான ஒன்றைக் கற்பதால் அல்லது கற்றுக்கொடுப்பதால் காபிராகவும் மாட்டான் என்பது தெளிவாகப் புரிகின்றது. யதார்த்தமுள்ள ஒன்றைத்தான் கற்கவோ கற்றுக்கொடுக்கவோ சாத்தியப்படும். இதில் மு.்.தஸிலாக்களைத் தவிர வேறுயாரும் மாறுபடவில்லை.

## சாஸ்திரம் பார்த்தல், குறி சொல்லுதல்

இவை இரண்டும் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு மறைவான அறிவு உண்டு என்று வாதாடுவதாகும். இவற்றிற்கு உதாரணமாக புவியில் என்ன ஏற்படும்? என்ன நிகழும்? என்றும், காணாமல் போன பொருள் பற்றியும் அறிவிப்பதைக் குறிப்பிடலாம். இவைகள் வானத்திலே ஒட்டு கேட்கக்கூடிய ஷைத்தான்களை பயன்படுத்துவதின் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன.

﴿هَلْ أُنَبِّئُكُمْ عَلَىٰ مَن تَنَزَّلُ ٱلشَّيَٰطِينُ ۝٢٢١ تَنَزَّلُ عَلَىٰ كُلِّ أَفَّاكٍ أَثِيمٍ ۝٢٢٢ يُلْقُونَ ٱلسَّمْعَ وَأَكْثَرُهُمْ كَٰذِبُونَ﴾

الشعراء: ٢٢١ - ٢٢٣

*விசுவாசிகளே! ஷைத்தான்கள் எவர் மீது இறங்குகின்றனர் என்பதை அறிவிக்கட்டுமா? (செயலால்) பாவியான (சொல்லால்) அதிகமாக பொய் கூறும் ஒவ்வொருவரின் மீதும் அவர்கள் இறங்குகின்றனர். தாங்கள் கேள்விப்பட்டதை (அப்பொய்யர்களின் காதுகளில்) போடுகின்றார்கள். அவர்களில் பெரும்பாலானோர் (பெரும்) பொய்யர்களே! (அஷ் ஷுஅறா : 221-223)*

ஷைத்தான்கள் மலக்குமார்களின் பேச்சுக்களிலிருந்து சிலவற்றை ஒட்டுக்கேட்டு அதனை குறிபார்ப்பவர்களின் காதிலே செலுத்துகின்றனர். அக்குறிகாரர்கள் இந்த பேச்சுடன் இன்னும் நூறு பொய்களை கலந்து மக்களுக்கு சொல்கிறார்கள். வானத்திலிருந்து செவிமடுக்கப்பட்ட பேச்சின் காரணமாக குறிகாரன் சொல்பவற்றை மக்கள் உண்மைபடுத்துகிறார்கள். மறைமுகமான அறிவு இறைவனுக்கு மாத்திரமே உண்டு. யாராவது ஒருவன் சாஸ்திரம் பார்ப்பதின் மூலமாகவோ அல்லது இது போன்ற ஏனைய விடயங்களின் மூலமாகவோ ஏனையவர்களுக்கும் இதுபோன்ற மறைமுகமான அறிவுண்டு என வாதிட்டால் அல்லது இப்படி வாதிடுபவனை உண்மைப்படுத்தினால், இறைவனுக்கு மாத்திரம் உள்ள ஒரு விடயத்தில் ஷிர்க் வைத்துவிட்டான். சாஸ்திரம் பார்ப்பது ஷிர்க் தவிர வேறொன்றுமில்லை. ஏனெனில் அது அவர்களை ஷைத்தான்கள் விரும்புகின்றவற்றினூடாக நெருங்குவதாகும்.

அல்லாஹ்வின் ஞானத்தில் அவனுக்கு இணைவைப்பதினூடாக "ருபூபிய்யத்" சார்ந்த ஷிர்க்காகவும் சில வணக்க வழிபாடுகளினூடாக அல்லாஹ் அல்லாதவர்களை நெருங்குவதனால் "உலூஹிய்யத்" சார்ந்த ஷிர்க்காகவும் கணிக்கப்படுகிறது.

நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் :

*எவன் சாஸ்திரக்காரனிடம் சென்று அவன் சொல்பவற்றை உண்மைபடுத்தினால் அவன் முஹம்மத்(ஸல்) அவர்கள் மீது இறக்கப்பட்டதை நிராகரித்து விட்டான். (அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி). ஆதாரம் : அபூதாவூத் 3906, அஹ்மத் 9536)*

மேற்கண்ட நபிமொழி சாஸ்திரக்காரனிடம் சென்று அவன் சொல்வதை உண்மைப் படுத்துபவனுடைய நிலையாகும். அவன் என்ன சொல்கின்றான் என்று பார்க்கச் செல்பவனுடைய 40 நாட்களுடைய தொழுகைகள் ஏற்கப்பட மாட்டாது என்று பிறிதொரு நபிமொழியில் இடம்பெற்றுள்ளது. எனவே சாஸ்திரக்காரனிடம் அறவே செல்லமுடியாது என்பதே இஸ்லாத்தின் தீர்ப்பாகும்.

எனினும் சாஸ்திரக்காரனுடைய பொய்களை சமூகத்திற்கு உணர்த்துவதற்காக இஸ்லாத்தின் அடிப்படைகளைத் திறன்படக் கற்ற, கொள்கையில் உறுதியுள்ள ஒருவருக்கு அவனிடம் சென்று அவனுடைய பொய்களை அம்பலப்படுத்த முடியும். இது சில சந்தர்ப்பங்களில் கடமையாகக் கூட மாறலாம். மேற்கண்ட நபிமொழிகளின் எச்சரிக்கைகளில் இவர் அடங்கமாட்டார்.

## விழிப்புணர்வு செய்ய வேண்டியதும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியதுமான விடயங்கள்:

சூனியக்காரர்களும் சாஸ்திரக்காரர்களும் குறி சொல்பவர்களும் மக்கள் மத்தியில் வைத்தியர்களின் தோற்றத்தில் வந்து சில வர்ணனைகளைக் கூறி அதன் மூலம் ஓர் ஆட்டையோ அல்லது ஒரு கோழியையோ அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அறுக்குமாறு ஏவுவார்கள். வீடுகள், பெட்டிகள் போன்றவற்றில் வைக்கப்படும் விதத்திலும் கழுத்தில் தொங்கவிடப்படும் விதத்திலும் தகடுகளையும் பாதுகாவல்களையும் எழுதுவார்கள். இன்னும் சிலர் காணாமல் போன பொருள் இருக்கும் இடம் பற்றியும் மறைவானவற்றை அறிவிக்கும் தோற்றத்திலும் வருவார்கள். இவர்களிடத்தில் மூடர்கள் வந்து காணாமல் போன பொருள் பற்றி வினவுவார்கள். அவ்வேளை அவர்கள் அவை இருக்கும் இடம் பற்றி அறிவிப்பார்கள் அல்லது ஷைத்தானிய தோழர்கள் மூலம் அதனை வரவழைத்துக் கொடுப்பார்கள். வேறு சிலர் கராமத்துகள் இருக்கக்கூடிய வலியின் தோற்றத்தில் வருவார்கள். உதாரணமாக, அவர்கள் நெருப்பில் நுழைவார்கள். அந்நெருப்பு எவ்வித பாதிப்பையும் ஏற்படுத்தாது. அதே போன்று கண்கட்டி வித்தைகளும் இதில் உள்ளடங்கும். இவைகளின் யதார்த்தம் ஷைத்தானின் செயற்பாட்டினால் உருவாகும் வெறும் சூனியமேயாகும். இவர்களினால் ஃபித்னாவே ஏற்படுகின்றன. ஃபிர்அவ்னின் சூனியக்காரர்கள் கயிறுகளாலும் தடிகளாலும் மேற்கொண்ட விடயங்களை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

ரிபாஇய்யா தரீக்காவின் (பதாஇஹிய்யாக்கள்) சூனியக்காரர்களுடன் ஏற்பட்ட விவாதத்தின் போது ஷேகுல் இஸ்லாம் இப்னு தைமியா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள் : பதாஇஹிய்யாக்களின் ஷேய்ஹ் சப்தமிட்டு கூறினார், “எங்களிடம் அவ்வாறு இவ்வாறெல்லாம் பல விடயங்கள் உள்ளன. நெருப்பு போன்ற வழமைக்கு மாற்றமான விடயங்களுக்கு சொந்தக்காரர்கள் நாங்கள்” என வாதிட்டார்கள். வழமைக்கு மாற்றமான விடயங்கள் செய்வதற்கு தகுதியானவர்கள் அவர்கள் மாத்திரம் எனவும் வாதிட்டார்கள். அதற்கு ஷேகுல் இஸ்லாம் அவர்கள் கூறினார்கள், நானும் சப்தமிட்டு கூறினேன், இந்த பூமியின் கிழக்கிலிருந்து மேற்கு வரையுள்ள அனைத்து அஹ்மதியாக்களையும் பார்த்து கூறுகின்றேன், நெருப்பில் நீங்கள் எது செய்தாலும் நானும் செய்து காட்டுவேன். யார் எரிகிறாரோ அவர் தோற்றவராவார். சிலவேளை அவருக்கு அல்லாஹ்வின் சாபமும் உண்டு. ஆனாலும் இவை அனைத்தும் நம்முடைய உடலை சோப்பு மற்றும் வெந்நீரால் கழுகியதன் பின்தான் நடைபெறும் எனவும் கூறினார். தலைவர்களும் மக்களும் இதுபற்றி என்னிடம் கேட்டார்கள். நான் அவர்களுக்கு நெருப்புடன் சேருவதில் சில தந்திரங்கள் உண்டு. தவளையின் எண்ணெய், எலுமிச்சை தோல், ஒருவிதமான கல் (இதை சூடோ குளிரோ தாக்காது) போன்றவற்றின் மூலம் அவர்கள் இவ்வாறு செய்கிறார்கள் எனக் கூறினார். மக்கள் அதனை செவியுற்று சப்தமிட்டனர். அவர் அதனை நிரூபிக்கச் சொன்னார்.

எங்களிருவருடைய உடல்களிலும் கந்தகம்(நெருப்பு திரி) பூசப்பட்டு ஒரு பாயில் சுற்றப்பட வேண்டும் எனக்கூறி நீ எழுந்திரு என சொன்னேன். அவன் தனது உடைகளை களைவது போல நடித்து தனது கையை நீட்டினான். நான் கல்லாலும் வெந்நீராலும் கழுவும் வரை அவ்வாறு களைய முடியாது எனக் கூறினேன். வழமையாக அவர்கள் ஊகத்தையே பயன்படுத்துவர். அவர் யார் தலைவரை விரும்புகிறாரோ அவர் ஒரு பலகையை அல்லது விறகுக்கட்டையை எடுத்து வரவும் எனக்கூறினார். அதற்கு நான் இது விடயத்தை நீட்டுவதும் கூட்டத்தை பிரிப்பதுமாகும். இதன் மூலம் விடயம் நடைபெறாது, மாற்றமாக ஒரு விளக்கு ஏற்றப்படும். அதில் என்னுடைய விரலும் உன்னுடைய விரலும் கழுவியதன் பின்னால் நுழைவிக்கப்பட வேண்டும். யாருடைய விரல் எரிந்ததோ அவருக்கு அல்லாஹ்வின் சாபம் உண்டு. அல்லது அவர் தோற்றவராவர் என்று கூறினேன். நான் இதைக் கூறியதும் அவர் நிலைகுலைந்து இழிவாகிவிட்டார். இது போன்ற மறைமுகமான தந்திரங்களை உபயோகித்து பொய்யர்கள் பொய்யுரைக்கின்றனர் என்பதை தெளிவுபடுத்தவே இச்சம்பவம் கூறப்பட்டது.

## உயிருள்ள, மரணித்த மனிதர்கள் மற்றும் அடையாள சின்னங்கள் போன்றவற்றினை கொண்டு பரக்கத் தேடுதல்

படைப்பினங்களின் மூலமாக பரக்கத்தை நாடுவது என்பது நவீன நூதனங்களில் உள்ளதாகும். மேலும் இது சிலை வணக்கத்தை ஒத்த ஒரு செயல்பாடாகும். பரக்கத்தை நாடுவது என்பது ஒரு விஷயத்தில் நன்மையை நிரந்தரமாக ஆக்குமாறும் அதை அதிகப்படுத்துமாறும் வேண்டுவதாகும். ஒரு விஷயத்தில் நன்மையை நிரந்தரமாக ஆக்குவதும் அதை அதிகப்படுத்துவதும் இவை அனைத்திற்கும் ஆற்றல் மிக்க, சக்தி மிக்க அந்த அல்லாஹ்வால் மட்டுமே முடியும். அவன்தான் பரக்கத்தை வழங்குகிறான். அது நிரந்தரமாக இருப்பதற்கும் வழி செய்கிறான். படைப்பினங்களினால் பரக்கத்தை வழங்கவோ அதனை நிரந்தரமாக ஒருவனிடத்தில் தங்க செய்யவோ முடியாது. உயிருள்ள மற்றும் மரணித்த மனிதர்கள், அடையாள சின்னங்கள், இடங்கள் போன்ற விடயங்கள் மூலமாக பரக்கத்தை நாடுவது அனுமதிக்கப்பட்ட ஒரு விடயமல்ல. ஏனெனில், இவைகள் பரக்கத்தை அளிக்கின்றது என்று நம்புவதினால் ஷிர்க் ஏற்படுகிறது. அல்லது இறைவனிடமிருந்து பரக்கத்தை பெறுவதற்கு வழி வகுக்கின்றது என்று நம்புவதினால் இது ஷிர்க்கிற்கு வழிவகுக்கும் ஒரு செயல்பாடாக அமைகின்றது.

ஸஹாபாக்கள் ரஸூல் (ஸல்) அவர்களின் முடியை வைத்தும் அவர்களின் உமிழ்நீரை வைத்தும் அவர்களின் ஏனைய உறுப்புகளை வைத்தும் பரக்கத் பெற்றதை பொறுத்தமட்டில் ரஸூல் (ஸல்) அவர்கள் ஸஹாபாக்கள் மத்தியில் உயிருடன் இருந்த

நேரத்தில் அவர்களுக்கு மாத்திரம் உரிய ஒரு சிறப்பம்சமாகும். ஏனெனில் ஸஹாபாக்கள் ரஸூல் (ஸல்) அவர்களின் மரணத்திற்கு பின்னால் அவர்களுடைய கப்ரிலோ அறையிலோ பரக்கத்தை வேண்டக்கூடியவர்களாக இருக்கவில்லை. ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுத இடங்களையோ அவர்கள் அமர்ந்த இடங்களையோ பரக்கத் பெறும் நோக்குடன் நாடிச் செல்லவில்லை. அபுபக்கர் (ரலி) உமர் (ரலி) போன்ற பெரும்பெரும் ஸஹாபாக்கள் உயிருடன் இருக்கும் போதோ அல்லது மரணித்ததின் பின்னாலோ மக்கள் அவர்களிடத்தில் பரக்கத் பெறவில்லை. ஹிரா குகைக்கு தொழுவதற்கோ அல்லது பிரார்த்தனையில் ஈடுபடுவதற்கோ செல்லவில்லை. மேலும் ஸஹாபாக்கள் மூஸா (அலை) அவர்கள் இறைவனுடன் பேசிய தூர் மலைக்கு சென்று அங்கே தொழுகையிலோ பிரார்த்தனையிலோ ஈடுபடவில்லை. அல்லது நபிமார்களின் கண்ணியம் இருக்கிறதென்று சொல்லக் கூடிய ஏனைய மலைசார்ந்த இடங்களை நோக்கியோ நபிமார்களின் ஏதாவது ஒரு நபியின் அடையாள சின்னத்தை வெளிப்படுத்தும் கட்டிடத்தை நோக்கியோ பயணம் செய்யவில்லை. அதே போன்று நபி(ஸல்) அவர்கள் மதீனா நகரில் அல்லது மக்கா நகரில் எப்பொழுதும் தொழுது வந்த இடத்தையோ அல்லது அவர்கள் தொழுதுவந்த ஏனைய இடங்களையோ முன்னோர்களில் எவரும் தொட்டுப் பார்க்கவுமில்லை, முத்தமிடவுமில்லை. புனிதமான நபிகளார் (ஸல்) அவர்கள் தொழுத அவர்களுடைய இரு பாதங்களும் பட்ட இடத்தையும் தொட்டுப் பார்க்கவோ, முத்தமிடவோ ஷரீஅத் அனுமதிக்காத போது, ஏனையவர்கள் தொழுது தூங்கிய இடங்களை பற்றி என்னவென்று சொல்வது? நிர்பந்தத்தின் காரணமாகக் கூட இப்படி ஏதாவதொன்றை தொட்டு பார்ப்பதோ, முத்தமிடுவதோ நபிகளாரின் ஷரீஅத்தில் இல்லை என்று அறிஞர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

## ஷரீஆவிற்கு மாற்றமாக தீர்ப்பு வழங்குதல்

உயிர், சொத்துக்கள், ஏனைய உடைமைகள், வழக்குகள், அடிப்படையான விஷயங்கள், பேச்சுகள் போன்றவற்றில் ஏற்படும் கருத்து வேறுபாடுகளின் போது இறை வேதத்தின் பாலும் அவனின் தூதரின் வழிகாட்டலின் பாலும் மீள்வது, இஸ்லாமிய ஷரீஆவை திருப்தியுடன் ஏற்றுக்கொள்வது, அவனது சட்டங்களுக்கு கட்டுப்படுவது, அவனுக்கு மட்டும் வணக்க வழிபாடுகளை நிறைவேற்றுவது போன்ற விடயங்கள் அனைத்தும் அல்லாஹ்வை ஈமான் கொள்ளும் விடயத்தில் உள்ளடங்கும். அல்லாஹ் தீர்ப்பளிப்பவன். அவனிடமிருந்தே நாம் தீர்ப்பை பெற வேண்டும். அல்லாஹ் இறக்கி வைத்ததை கொண்டு தீர்ப்பளிப்பது நீதிபதிகள் மீது கடமையாகும். அதே போன்று குடிமக்கள் தங்களுக்கு ஏற்படுகின்ற பிரச்சனைகளின் போது இறைவேதத்தின் பாலும் நபிகளாரின் வழிகாட்டலின் பாலும் மீள்வது அவர்களின் மீது கடமையாகும்.

அல்லாஹ் ஆட்சியாளர்கள் பற்றி குறிப்பிடும் போது :

﴿إِنَّ ٱللَّهَ يَأۡمُرُكُمۡ أَن تُؤَدُّواْ ٱلۡأَمَٰنَٰتِ إِلَىٰٓ أَهۡلِهَا وَإِذَا حَكَمۡتُم بَيۡنَ ٱلنَّاسِ أَن تَحۡكُمُواْ بِٱلۡعَدۡلِ﴾ ال نساء: ٥٨

*(விசுவாசிகளே! உங்களிடம் நம்பி ஒப்படைக்கப்பட்ட) அமானிதங்களை அவற்றின் சொந்தக்காரர்களிடம் நீங்கள் ஒப்படைத்து விடுமாறும் மனிதர்களுக்கிடையில் நீங்கள் தீர்ப்பு கூறினால் (பாரபட்சமின்றி) நீதமாகவே தீர்ப்பளிக்குமாறும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகிறான். (அன்னிஸா : 58)*

குடிமக்களைப் பற்றி குறிப்பிடும்போது:

﴿يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ أَطِيعُواْ ٱللَّهَ وَأَطِيعُواْ ٱلرَّسُولَ وَأُوْلِي ٱلۡأَمۡرِ مِنكُمۡۖ فَإِن تَنَٰزَعۡتُمۡ فِي شَيۡءٖ فَرُدُّوهُ إِلَى ٱللَّهِ وَٱلرَّسُولِ إِن كُنتُمۡ تُؤۡمِنُونَ بِٱللَّهِ وَٱلۡيَوۡمِ ٱلۡأٓخِرِۚ ذَٰلِكَ خَيۡرٞ وَأَحۡسَنُ تَأۡوِيلًا﴾ ال نساء: ٥٩

*விசுவாசங்கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வுக்கு கட்டுபடுங்கள். அதிகாரம் உடைய (தலை)வர்களுக்கும் கட்டுபடுங்கள். ஆனால் ஏதாவதொரு விடயத்தில் நீங்கள் பிணங்கி கொண்டால் அதனை அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் ஒப்படைத்து விடுங்கள். மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசங்கொண்டவர்களாக இருந்தால் இதுதான் நன்மையாகவும் மிக அழகான முடிவாகவும் இருக்கும். (அன்னிஸா : 59)*

பின்பு அல்லாஹ் இறக்கியதை விட்டுவிட்டு வேறு ஒன்றினூடாக தீர்ப்பு வழங்குவதும் விசுவாசங்கொள்வதும் ஒன்று சேரமாட்டாது என்று தெளிவு படுத்துகிறான் :

﴿أَلَمۡ تَرَ إِلَى ٱلَّذِينَ يَزۡعُمُونَ أَنَّهُمۡ ءَامَنُواْ بِمَآ أُنزِلَ إِلَيۡكَ وَمَآ أُنزِلَ مِن قَبۡلِكَ يُرِيدُونَ أَن يَتَحَاكَمُوٓاْ إِلَى ٱلطَّٰغُوتِ وَقَدۡ أُمِرُوٓاْ أَن يَكۡفُرُواْ بِهِۦۖ وَيُرِيدُ ٱلشَّيۡطَٰنُ أَن يُضِلَّهُمۡ ضَلَٰلَۢا بَعِيدٗا﴾ ال نساء: ٦٠

*(நபியே!) உம்மீது இறக்கப்பட்டதையும் உமக்கு முன்னர் இறக்கி வைக்கப்பட்டவற்றையும் மெய்யாகவே தாங்கள் விசுவாசிப்பதாக வாதிடுபவர்களை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் தாகூத்தை (ஷைத்தானை) நிராகித்து விட வேண்டும் என திட்டவட்டமாக கட்டளையிட்ட நிலையில் அவனை தீர்ப்பு கூறுபவனாக ஆக்க நாடுகிறார்கள். அந்த ஷைத்தானோ அவர்களை வெகுதூரமான வழிகேட்டில் தள்ளிவிட விரும்புகிறான். (அன்னிஸா : 60)*

﴿وَإِذَا قِيلَ لَهُمۡ تَعَالَوۡاْ إِلَىٰ مَآ أَنزَلَ ٱللَّهُ وَإِلَى ٱلرَّسُولِ رَأَيۡتَ ٱلۡمُنَٰفِقِينَ يَصُدُّونَ عَنكَ صُدُودٗا﴾ ال نساء: ٦١

*மேலும் (நியாயம் பெற) அல்லாஹ் அருளியதன் பாலும் (அவனது) தூதரின் பாலும் நீங்கள் வாருங்கள் என்று சொல்லப்பட்டால் அந்த வேடதாரிகள் (முனாபிக்குகள்) உம்மைவிட்டு முற்றிலும் புறக்கணித்து விடுவதையே நீர் காண்பீர். (அன்னிஸா : 61)*

﴿فَكَيْفَ إِذَآ أَصَٰبَتْهُم مُّصِيبَةٌۢ بِمَا قَدَّمَتْ أَيْدِيهِمْ ثُمَّ جَآءُوكَ يَحْلِفُونَ بِٱللَّهِ إِنْ أَرَدْنَآ إِلَّآ إِحْسَٰنًا وَتَوْفِيقًا﴾ ال نساء: ٦٢

*(நபியே!) அவர்களின் கரங்கள் முற்படுத்திய (பாவத்)தின் காரணமாக அவர்களுக்கு ஒரு துன்பம் ஏற்பட்டால் எவ்வாறு அவர்களின் நிலமை இருக்கும்? பின்னர் அவர்கள் நாங்கள் நன்மையையும் ஒற்றுமையையும் தவிர வேறெதையும் நாங்கள் நாடவில்லை என்று அல்லாஹ்வைக் கொண்டு சத்தியம் செய்தவர்களாக உம்மிடம் வருகிறார்கள். (அன்னிஸா : 62)*

﴿أُو۟لَٰٓئِكَ ٱلَّذِينَ يَعْلَمُ ٱللَّهُ مَا فِى قُلُوبِهِمْ فَأَعْرِضْ عَنْهُمْ وَعِظْهُمْ وَقُل لَّهُمْ فِىٓ أَنفُسِهِمْ قَوْلًۢا بَلِيغًا﴾ ال نساء: ٦٣

*அவர்கள் எத்தகையோரென்றால் அவர்களின் இதயங்களில் இருப்பவற்றை அல்லாஹ் அறிவான். ஆகவே (நபியே!) நீர் அவர்களை புறக்கணித்து விடுவீராக! மேலும் அவர்களுக்கு நல்லுபதேசம் செய்வீராக! அவர்களின் உள்ளங்களில் நுழையும்படி தெளிவாக எடுத்துக் கூறுவீராக! (அன்னிஸா : 63)*

﴿ وَمَآ أَرْسَلْنَا مِن رَّسُولٍ إِلَّا لِيُطَاعَ بِإِذْنِ ٱللَّهِ ۚ وَلَوْ أَنَّهُمْ إِذ ظَّلَمُوٓا۟ أَنفُسَهُمْ جَآءُوكَ فَٱسْتَغْفَرُوا۟ ٱللَّهَ وَٱسْتَغْفَرَ لَهُمُ ٱلرَّسُولُ لَوَجَدُوا۟ ٱللَّهَ تَوَّابًا رَّحِيمًا﴾ ال نساء: ٦٤

*அல்லாஹ்வின் கட்டளைக்கு கீழ்படிவதற்காகவேயன்றி (மனிதர்களிடம்) நாம் தூதர்களில் எவரையும் அனுப்பவில்லை. ஆகவே அவர்கள் எவரும் தங்களுக்கு தாங்களே அநியாயம் செய்து கொண்டு உம்மிடம் வந்து அல்லாஹ்வின் மன்னிப்பைக் கோரி அவர்களுக்காக (அல்லாஹ்வின்) தூதராகிய (நீரும்) மன்னிப்பு கேட்டிருந்தால் அல்லாஹ்வை மன்னிப்பவனாகவும் மிக்க கருணையுடையவனாகவும் அவர்கள் கண்டிருப்பார்கள். (அன்னிஸா : 64)*

﴿فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّىٰ يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا۟ فِىٓ أَنفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا۟ تَسْلِيمًا﴾ ال نساء: ٦٥

*உமது இரட்சகன் மீது சத்தியமாக அவர்கள் தங்களுக்கு மத்தியில் ஏற்படும் பிரச்சனையின் போது ரஸூல்(ஸல்) அவர்களிடம் தன்னுடைய பிரச்சனையை*

*முறையிட்டு அந்த தீர்ப்பை மனதிருப்தியுடன் எற்றுக்கொள்ளாமல் அவர்களுக்கு மாறு செய்தால் அவனிடம் ஈமான் இல்லை என்று தெளிவுபடுத்துகிறான். (அன்னிஸா:65)*

இங்கே அல்லாஹ், மனிதன் தனது பிரச்சினையின் போது ரஸுல் (ஸல்) அவர்களிடம் தன்னுடைய பிரச்சினையை முறையிட்டு, அந்த தீர்ப்பை மனதிருப்தியுடன் ஏற்றுக் கொள்ளாமல், அவர்களுக்கு மாறு செய்தால் அவனிடம் ஈமான் இல்லை என்று தெளிவுபடுத்துகிறான். அவ்வாறே அல்லாஹ் இறக்கிய வேதத்தைக் கொண்டு தீர்ப்பளிக்காதவர்களை காபிர்கள் என்றும் அநியாயக்காரர்கள் என்றும் பாவிகள் என்றும் அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

﴿وَمَن لَّمْ يَحْكُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلْكَٰفِرُونَ﴾ المائدة: ٤٤

*எவர்கள் அல்லாஹ் இறக்கியதைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள் காபிர்கள்(இறைமறுப்பாளர்கள்) (அல்மாயிதா : 44)*

﴿وَمَن لَّمْ يَحْكُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلظَّٰلِمُونَ﴾ المائدة: ٤٥

*எவர்கள் அல்லாஹ் இறக்கியதைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள் அநியாயக்காரர்கள் (அல்மாயிதா : 45)*

﴿وَمَن لَّمْ يَحْكُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلْفَٰسِقُونَ﴾ المائدة: ٤٧

*எவர்கள் அல்லாஹ் இறக்கியதைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள் பாவிகள் (அல்மாயிதா : 47)*

அல்லாஹ் இறக்கியதைக் கொண்டு தீர்ப்பு வழங்கவேண்டும். அதேபோன்று அறிஞர்களுக்கு மத்தியில் காணப்படுகின்ற இஜ்திஹாத் ரீதியான அனைத்து பிரச்சனைகளின் போது ஒருவருக்கொருவர் அல்லாஹ் இறக்கியதைக் கொண்டே தீர்ப்பு தேட வேண்டும். ஓர் அறிஞருடைய கருத்திலோ ஒரு மத்ஹபுடைய கருத்திலோ பிடிவாதமாக இருக்காமல் அல் குர்ஆனும் அஸ் ஸுன்னாவும் சுட்டிக்காட்டுகின்றவற்றையே ஏற்றுக்கொள்ள வேண்டும். ஒரு சில இஸ்லாமிய நாடுகள் தனியார் சட்டங்களில் மட்டுமே இஸ்லாமிய சட்டங்களை பின்பற்றுகின்றன. இதுபோல் அன்றி அனைத்து விடயங்களிலும் இஸ்லாமிய ஷரீஆவை பின்பற்ற வேண்டும்.

அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான் :

﴿يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ ٱدْخُلُواْ فِى ٱلسِّلْمِ كَآفَّةً وَلَا تَتَّبِعُواْ خُطُوَٰتِ ٱلشَّيْطَٰنِ ۚ إِنَّهُۥ لَكُمْ عَدُوٌّ مُّبِينٌ﴾ البقرة: ٢٠٨

*நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் தீனுல் இஸ்லாத்தில் முழுமையாக நுழைந்துவிடுங்கள். தவிர ஷைத்தானுடைய அடிச்சவடுகளை நீங்கள் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் ஆவான். (அல் பகரா : 208)*

மேலும் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿أَفَتُؤْمِنُونَ بِبَعْضِ ٱلْكِتَٰبِ وَتَكْفُرُونَ بِبَعْضٍ﴾ البقرة: ٨٥

*நீங்கள் வேதத்தில் சிலவற்றை விசுவாசித்து இன்னும் சிலவற்றை நிராகரிக்கின்றீர்களா? (அல் பகரா : 85)*

அதே போன்று மத்ஹபுகளை பின்பற்றக் கூடியவர்கள் தங்களது இமாம்களின் கூற்றுக்களை அல் குர்ஆன் அல் ஸுன்னாவுடன் தொடர்புபடுத்தி பார்க்க வேண்டும். அவைகள் குர்ஆன் ஸுன்னாவுக்கு ஒத்திருப்பின் அதனை எடுக்க வேண்டும். முரணாக இருப்பின் எவ்வித பக்கசார்போ பிடிவாதமோ இன்றி விட்டுவிட வேண்டும். குறிப்பாக அகீதா விடயங்களில் இவ்வாறு நடங்து கொள்ள வேண்டும். இதனையே இமாம்களும் உபதேசித்து இருக்கிறார்கள். இதுவே அவர்களின் வழிமுறையுமாகும். இதற்கு மாற்றமாக நடக்கின்றவன் தன்னை இமாம்களை பின்பற்றுகிறவன் என்று பறைசாற்றிக் கொண்டாலும் அவன் இமாம்களை பின்பற்றுபவனல்ல. மாறாக அவன் அல்லாஹ் அல் குர்ஆனில் குறிப்பிடும் கூட்டத்தில் அடங்குவான்.

﴿ٱتَّخَذُوٓاْ أَحْبَارَهُمْ وَرُهْبَٰنَهُمْ أَرْبَابًا مِّن دُونِ ٱللَّهِ وَٱلْمَسِيحَ ٱبْنَ مَرْيَمَ﴾ التوبة: ٣١

*அவர்கள் அல்லாஹ்வை விட்டும் தம் பாதிரிகளையும், தம் சந்நியாசிகளையும் மர்யமுடைய மகனாகிய மஸீஹையும் தெய்வங்களாக்கிக் கொள்கின்றனர் (அத் தௌபா : 31)*

இவ்வசனம் கிறிஸ்தவர்களை மட்டும் குறிக்காது. மாறாக அவர்களை போல செயல்படும் அனைவரையும் இது குறிக்கும். யாரேனும் மக்கள் மத்தியில் அல்லாஹ் இறக்கி வைக்காததைக் கொண்டு தீர்ப்பு வழங்குவதன் மூலம் அல்லது தனது மனம் போன போக்கில் தனது விருப்பத்தின் படி வாழ்வதன் மூலம் அல்லாஹ் அவனது தூதர் ஏவியதற்கு மாற்றமாக நடந்தால் அவன் தன்னை ஒரு மூ.ஃமின் என்று சொல்லிக் கொண்டாலும் அவனது கழுத்திலிருந்து இஸ்லாம், ஈமான் எனும் கயிறு அவிழ்ந்து விடுகிறது. அவர்கள் வாதாடுகின்ற (போலி) ஈமானிய வாதாட்டத்தை அல்லாஹ் பொய்ப்பித்து மறுக்கிறான். ( يَزْعُمُوْنَ) என்ற வார்த்தையின் மூலம் அவர்களின் ஈமானை மறுக்கிறான். பொதுவாக ( يَزْعُمُوْنَ) என்ற சொல் பொய் வாதாட்டங்களை வாதாடுபவனுக்கே பயன்படுத்தப்படுகிறது. அவன் ஒன்றை வாதாடுவான், அவனது செயல்பாட்டிலே அதற்கு மாற்றமானவனாக இருப்பான். இதன்

மூலம் அவனது வாதாட்டம் பொய்யாகின்றது. இதனை இறைவனின் வார்த்தை உறுதிப்படுத்துகிறது.

﴿وَقَدۡ أُمِرُوٓاْ أَن يَكۡفُرُواْ بِهِۦ﴾ النساء: ٦٠

*அவர்கள் அவனை நிராகரித்து விடவேண்டும் என ஏவப்பட்டுள்ளார்கள். (அன்னிஸா : 60)*

ஏனெனில் ஷைத்தானை மறுப்பது தவ்ஹீதின் ஒரு தூணாகும். ஸூரத்துல் பகரா சொல்வதைப் போல ஒருவன் இந்த தூணை அடைந்து கொள்ளாவிட்டால் அவன் தவ்ஹீத்வாதியாக மாறமாட்டான். அத்தவ்ஹீத் ஈமானின் அடிப்படையாகும். இது அனைத்து செயல்பாடுகளையும் சீர் செய்யும். இது இல்லாவிடின் அனைத்து செயல்பாடுகளும் சீர்கெட்டுவிடும். இதனை அல்குர்ஆன் தெளிவு படுத்துகின்றது.

﴿فَمَن يَكۡفُرۡ بِٱلطَّٰغُوتِ وَيُؤۡمِنۢ بِٱللَّهِ فَقَدِ ٱسۡتَمۡسَكَ بِٱلۡعُرۡوَةِ ٱلۡوُثۡقَىٰ لَا ٱنفِصَامَ لَهَا﴾ البقرة: ٢٥٦

*யார் தாகூத்தை(ஷைத்தானை) நிராகரித்துவிட்டு அல்லாஹ்வை விசுவாசிக்கின்றாரோ அவர் திட்டமாக அறுந்து போகாத பலமான கயிற்றை பற்றிக் கொண்டார். (அல் பகரா : 256)*

ஏனெனில் தாகூத்தை வெறுப்பதானது ஈமானின் பண்பாகும். அல்லாஹ் இறக்கி வைத்ததை வைத்து தீர்ப்பு வழங்காமல் இருப்பவனுக் ஈமான் இல்லையென்பது, அல்லாஹ்வின் மார்க்கத்தைக் கொண்டு தீர்ப்பு வழங்குவது ஈமானும் அடிப்படைக் கொள்கையும் அல்லாஹ்வை வணங்குவதுமாகும் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது. மனித சீர்திருத்தத்திற்கும் அமைதிக்கும் இறை சட்டம் மிகவும் பொருத்தமதனது என்பதற்காக மாத்திரம் அதனை வைத்து தீர்ப்பு வழங்கக் கூடாது. ஒரு சில மனிதர்கள் இந்த கோணத்தில் மட்டும் கவனம் செலுத்தி முதலாவது பகுதியை மறந்து விடுகின்றனர். இறைவணக்கம் நோக்கமின்றி சொந்த நலத்திற்காக மட்டும் ஷரீஅத்தை நடைமுறை படுத்துவதை அல்லாஹ் குறையாக் கூறுகின்றான்.

﴿وَإِذَا دُعُوٓاْ إِلَى ٱللَّهِ وَرَسُولِهِۦ لِيَحۡكُمَ بَيۡنَهُمۡ إِذَا فَرِيقٞ مِّنۡهُم مُّعۡرِضُونَ ۝٤٨ وَإِن يَكُن لَّهُمُ ٱلۡحَقُّ يَأۡتُوٓاْ إِلَيۡهِ مُذۡعِنِينَ﴾

النور: ٤٨ - ٤٩

*மேலும் தம்மிடையே(விவகாரம் ஏற்பட்டு அது பற்றிய) தீர்ப்பு பெற அல்லாஹ்விடமும் அவன் தூதரிடமும் (வரும் படி) அழைக்கப்பட்டால், அவர்களில் ஒரு பிரிவினர் (அவ்வழைப்பை) புறக்கணிக்கிறார்கள். ஆனால் அவர்கள் பக்கம் உண்மை(நியாயம்) இருக்குமானால் வழிபட்டவர்களாக அவரிடம் வருகிறார்கள் (அந்நூர் : 48,49)*

அவர்கள் தங்களது மனம் நாடுகின்றதை தவிர வேறு எதற்கும் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. தங்களது இச்சைக்கு மாற்றமாக, புறம்பாக நடக்கமாட்டார்கள். ஏனெனில் ரஸூல் (ஸல்) அவர்களிடம் தீர்ப்பு பெறுவதின் மூலம் அல்லாஹ் அல்லாதவனுக்கு வணக்கம் செலுத்த மாட்டார்கள்.

## அல்லாஹ் இறக்கி வைக்காததை வைத்து தீர்ப்பு வழங்குபவனின் நிலை

அல்லாஹ் கூறுகிறான் :

﴿وَمَن لَّمْ يَحْكُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ فَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْكَٰفِرُونَ﴾ الم ائدة: ٤٤

*யார் அல்லாஹ் இறக்கி வைத்ததை வைத்து தீர்ப்பு வழங்கவில்லையோ அவர்கள் காபிர்கள் தான் (அல் மாயிதா : 44)*

அல்லாஹ் இறக்கி வைக்காததை வைத்து தீர்ப்பு வழங்குவது குப்ராகும் என்று இவ்வசனம் குறிப்பிடுகின்றது. இந்த குப்ருக்கு இரண்டு நிலைகள் உள்ளன :

1. மார்க்கத்தை விட்டு நீக்கும் பெரிய குப்ர்.

2. மார்க்கத்தை விட்டு நீக்காத சிறிய குப்ர்.

**பெரிய குப்ராகும் சந்தர்ப்பங்கள் :**

1. அல்லாஹ் இறக்கி வைத்ததை கொண்டு தீர்ப்பு செய்தல் கடமை இல்லை என்று நினைத்தல்

2. தனது இஷ்டத்தின் பிரகாரம் வாழலாம் என்று நினைத்தல்.

3. இறை சட்டத்தை இழிவு படுத்துதல்.

4. ஏனைய சட்டங்களும் நியதிகளும் இதனைவிட சிறந்தது என்றோ இது காலத்திற்கு பொருந்தாது என்றோ நினைத்தல்.

5. அல்லாஹ் இறக்கி வைக்காததை வைத்து தீர்ப்பு வழங்குவதன் மூலம் காபிர்களையும் முனா∴பிக்குகளையும் திருப்திபடுத்த நாடுதல்.

**சிறிய குப்ராகும் சந்தர்ப்பம் :**

அல்லாஹ் இறக்கி வைத்ததைகொண்டு தீர்ப்பு வழங்குவது கடமை என தெரிந்து கொண்டு அதற்கு மாற்றமாக நடத்தல்.

**கூலி வழங்கப்படும் சந்தர்ப்பம் :**

தனது முழு முயற்சியையும் பயன்படுத்தி இறைசட்டத்தை அறிந்து கொள்ள முடியாத நிலையில் தவறாக தீர்ப்பு வழங்கி விட்டால் அவனுக்கு அவனது இஜ்திஹாதின் காரணமாக ஒரு கூலியுண்டு. அவனது தவறு மன்னிக்கப்படும்.

இது குறிப்பான பிரச்சனைகளுக்குரிய சட்டமாகும். பொதுவான பிரச்சனைக்குரிய சட்டம் அதனை விட்டு வேறுபடும். ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமியா அவர்கள் குறிப்பிடுகிறார்கள் :

- ஒருவன் ஞானியாக இருக்கிறான், ஆனால் அல்லாஹ் இறக்காததைக் கொண்டு தீர்ப்பு வழங்குகிறான். அவன் நரகத்திற்கு செல்வான்.
- ஒருவன் அறிஞனாக இருக்கிறான் ஆனால் அவன் அறிந்த சத்தியத்திற்கு மாற்றமாக தீர்ப்பு வழங்குகிறான். அவனும் நரகில் நுழைவான்.

நீதியின்றியும் அறிவற்ற நிலையிலும் தீர்ப்பு வழங்கினால் அவன் நரகில் இருக்க மிகத்தகுதியானவன். இது ஒரு மனிதனின் பிரச்சனையின் போதுள்ள சட்டமாகும்.

பொதுவான முஸ்லிம்களின் விடயங்களில் சத்தியத்தை அசத்தியமாகவும், ஸுன்னாவை பித்ஆவாகவும், பித்ஆவை ஸுன்னாவாகவும், நன்மையை தீமையாகவும், தீமையை நன்மையாகவும் தீர்ப்பு வழங்குகிறவன், அல்லாஹ்வும் அவனது தூதரும் ஏவியதை தடுக்கின்றவன், அல்லாஹ்வும் அவனது தூதரும் தடுத்தவற்றை ஏவுகிறவன் ஆகியோருக்கு அகிலங்களின் அல்லாஹ் நபிமார்களின் கடவுள், இவ்வுலகினதும் மறுமையினதும் புகழுக்குரிய தீர்ப்பு நாளின் அதிபதி வேறு ஒரு அமைப்பில் சட்டம் வழங்குகிறான்.

﴿لَهُ ٱلۡحُكۡمُ وَإِلَيۡهِ تُرۡجَعُونَ﴾ القصص: ٨٨

*அவனிடத்திலே தீர்ப்பு காணப்படுகின்றது. அவனிடமே நீங்கள் அனைவரும் மீளுவீர்கள் (அல் கஸஸ் : 88)*

﴿هُوَ ٱلَّذِيٓ أَرۡسَلَ رَسُولَهُۥ بِٱلۡهُدَىٰ وَدِينِ ٱلۡحَقِّ لِيُظۡهِرَهُۥ عَلَى ٱلدِّينِ كُلِّهِۦۚ وَكَفَىٰ بِٱللَّهِ شَهِيدٗا﴾ الفتح: ٢٨

*அவனே தன் தூதரை நேரான வழியைக் கொண்டும் சத்திய மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பியருளினான். சகல மார்க்கங்களையும் விட அதை மேலோங்க செய்வதற்காக. (இதற்கு) அல்லாஹ் சாட்சியாக இருப்பதே போதுமானது. (அல் பத்ஹ் : 28)*

மேலும் அல்லாஹ் அவனது தூதருக்கு இறக்கி வைத்ததை கொண்டு தீர்ப்பு வழங்குவது கடமையில்லை என நம்பினால் அவன் காபிர் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அல்லாஹ் இறக்கி வைத்ததை பின்பற்றாமல் தான் காணுகின்றதை நீதி எனக்கருதி மக்கள் மத்தியில் தீர்ப்பு வழங்கினால் அவன் காபிராவான். அல்லாஹ் எந்தவொரு சமூகத்தையும் நீதியின்றி தீர்ப்பு வழங்கும்படி ஏவவில்லை. தங்களது பெரியோர்கள் நீதியென கருதியவற்றையே பின்பற்றுகின்றனர். தங்களை முஸ்லிம்கள் எனச் சொல்பவர்களில் அதிகமானோர் அல்லாஹ் இறக்கியதையன்றி தங்களது முன்னோர்களின் பழக்க வழக்கங்களை வைத்து தீர்ப்பு வழங்குகிறார்கள். தலைவர்கள் கட்டளை இடுகின்றவர்களாக இருக்கின்றனர். குர்ஆனையும் ஸுன்னாவையும் உற்று நோக்காமல் இந்த சட்டத்தையே பின்பற்ற வேண்டும் எனக் கருதுகிறார்கள். இது இறை நிராகரிப்பாகும். அதிகமானவர்கள் இஸ்லாத்தை தழுவுகிறார்கள், ஆனால் நடைமுறையில் உள்ள வழமையான சட்டத்தையே தீர்ப்பு வழங்க பயன்படுத்துகிறார்கள். அல்லாஹ் இறக்கி வைத்ததை வைத்து மட்டும் தான் தீர்ப்பு வழங்க வேண்டும் என தெரிந்தாலும் அதனை கடைபிடிக்க மாட்டார்கள். மாறாக அல்லாஹ் இறக்கியதற்கு மாற்றமாக தீர்ப்பு வழங்குவதினூடாக காபிர்களாக இருக்கின்றனர்.

ஷைய்ஹ் முஹம்மத் இப்னு இப்ராஹிம் அவர்கள் கூறுகிறார்கள், நம்பிக்கை இருக்கின்ற நிலையில் இறைவனின் தீர்ப்பில்லாத ஒன்றை தீர்ப்பாக எடுப்பது சிறிய குப்ராகும். அவன் ஒரு பாவி. இறைவனின் சட்டம் நீதமானதாகும். இறைநியதிகளை ஒழுங்கமைக்க வேண்டும் எனக் கூறுவதும் அதனை தரம் குறைந்ததாக நோக்குவதும் குப்ராகும். நாங்கள் தவறிழைத்து விட்டோம் என்று சொல்லிக் கொண்டாலும் சரியே! இறைவனின் சட்டம் நீதமானது.

இப்னு இப்ராஹிம் அவர்கள் எப்பொழுதும் தொடர்புபடாத கிளைச் சட்டங்களையும் எப்பொழுதும் தொடர்பு படுகின்ற சட்டங்களையும் பிரித்து நோக்குகிறார்கள். பொதுவாக இது மார்க்கத்தை விட்டு தூரமாக்குகின்ற குப்ர் ஆகும் எனக் கூறுகிறார்கள். ஏனெனில் மனித சட்டங்களை இதற்கு பதிலாக பயன்படுத்துவது மனித சட்டங்கள் இறைசட்டங்களை விட சிறந்தது என சுட்டிக் காட்டுகின்றது. எனவே இது தவ்ஹீதை இல்லாமல் ஆக்குகின்ற மார்க்கத்தை விட்டு நீக்குகின்ற பெரிய குப்ராகும்.

## நேசம் வைத்தலும் நீங்கிக் கொள்ளலும்

நேசம் வைத்தல் (அல் வலாஉ) : இது தாம் விரும்பக் கூடியவர்களுடன் உள்ரங்கமாகவும் வெளிரங்கமாகவும் நேசம் வைத்தல், மரியாதையுடன் நடந்து கொள்ளல், சங்கை படுத்தல், உதவி புரிதல் போன்றவற்றைக் குறிக்கும்.

பின்வரும் அல்குர்ஆன் வசனம் இது பற்றி குறிப்பிடுகின்றது.

﴿ ٱللَّهُ وَلِيُّ ٱلَّذِينَ ءَامَنُواْ يُخْرِجُهُم مِّنَ ٱلظُّلُمَٰتِ إِلَى ٱلنُّورِۖ وَٱلَّذِينَ كَفَرُوٓاْ أَوْلِيَآؤُهُمُ ٱلطَّٰغُوتُ يُخْرِجُونَهُم مِّنَ ٱلنُّورِ إِلَى ٱلظُّلُمَٰتِۗ أُوْلَٰٓئِكَ أَصْحَٰبُ ٱلنَّارِۖ هُمْ فِيهَا خَٰلِدُونَ ﴾ البقرة: ٢٥٧

அல்லாஹ் விசுவாசிகளுக்கு பாதுகாவலன். அவன் அவர்களை இருளிலிருந்து ஒளியின்பால் வெளிப்படுத்துகிறான். இறை நிராகரிப்பாளர்களின் பாதுகாவலர்கள் தாகூத்(ஷைத்தான்கள்)தான். அவர்கள் இவர்களை ஒளியிலிருந்து இருளின் பால் வெளிப்படுத்துகிறார்கள். இவர்கள் நரகவாசிகள். அதில் என்றென்றும் நிரந்தரமாக இருப்பார்கள். (அல் பகரா : 257)

காபிர்களுடன் நேசம் வைத்தல் என்றால் அவர்களின் பால் நெருங்கி சொல், செயல், எண்ணம் போன்றவைகளின் மூலமாக நமது நேசத்தை வெளிக்காட்டலாகும்.

நீங்கிக்கொள்ளல் (அல் பராஉ) : உபதேசம், அச்சமூட்டி எச்சரிக்கை செய்து தெளிவுபடுத்தியதன் பின் அவர்களுடன் பகைமை கொண்டு தூரமாக விலகிக் கொள்ளலை குறிக்கும். ஷெய்ஹுல் இஸ்லாம் இப்னு தைமியா (ரஹ்) அவர்கள் பதாவா என்ற புத்தகத்தில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :

அல்லாஹ்வுக்காக நேசம் வைத்தலும் விரோதம் கொள்ளலும் மூ.ஃமின்கள் மீது கடமையாகும். ஒரு மூ.ஃமின் அநியாயம் செய்திருந்தாலும் அவனுடன் நேசம் வைக்க வேண்டும். ஏனெனில் அநியாயம் ஒருபோதும் ஈமானிய நேசத்தை இல்லாமலாக்கி விடாது. ஏனெனில் இறைவன் பின்வருமாரு கூறுகிறான் :

﴿وَإِن طَآئِفَتَانِ مِنَ ٱلْمُؤْمِنِينَ ٱقْتَتَلُواْ فَأَصْلِحُواْ بَيْنَهُمَا﴾ الحجرات: ٩

விசுவாசிகளில் இரு கூட்டத்தினர் சண்டை செய்து கொண்டால் அவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள். (அல் ஹுஜுராத் : 9). யுத்தம், வரம்பு மீறல் என்பவைகள் இருந்தும் கூட அவர்களை(மூமின்களை) அல்லாஹ் சகோதரர்களாக ஆக்கியுள்ளான். அவர்கள் மத்தியில் நல்லிணக்கத்தை ஏற்படுத்துமாறும் ஏவியுள்ளான். ஒரு மூ.ஃமின் உனக்கு அநியாயம் செய்து வரம்பு மீறியிருந்தாலும் அவனை நேசிப்பது கடமையாகும். ஓர் இறைநிராகரிப்பாளர் உனக்கு ஏதும் தந்து நல்லது

செய்திருந்தாலும் அவனை (அவனுடைய இறைநிராகரிப்புக்காக) வெறுத்து நடக்க வேண்டும். நிச்சயமாக அல்லாஹ் மார்க்கம் முழுவதும் அவனுக்கே ஆகுவதற்காக வேதங்களையும் தூதரையும் அனுப்பி வைத்தான். எனவே அத்தூதரை சார்ந்தவர்களுடன் நேசமும் அவரது எதிரிகளுடன் விரோதமும் கொள்ள வேண்டும். கூலி, கண்ணியம் என்பவைகள் அவரை சார்ந்தவர்களுக்கும் இழிவு, தண்டனை என்பவைகள் அவரது எதிரிகளுக்கும் வழங்கப்படும்.

ஒரு மனிதரிடத்தில் கெட்ட, நல்ல விடயங்கள், பாவம், கட்டுப்படுதல், மாறு செய்தல், ஸுன்னா, பித்ஆ (நூதனம்) ஆகிய விடயங்கள் ஒன்று சேருமிடத்து அவனிடமுள்ள நல்ல விடயங்களின் அளவிற்கேற்ப நேசத்தை பெற்றுக்கொள்வான். அதேவேளை அவனிடமுள்ள கெட்ட விடயங்களின் அளவிற்கேற்ப விரோதத்திற்கும் ஆளாவான். ஒரே நபரிடத்தில் கண்ணியத்தையும் இழிவையும் ஏற்படுத்தக் கூடிய விடயங்கள் ஒன்று சேரலாம். உதாரணமாக திருடனைப் போல. அவன் திருடியதற்காக கை துண்டிக்கப்பட்டு அவனது தேவைக்கேற்ப பைத்துல் மாலிலிருந்து உதவி வழங்கப்படும். இதுதான் அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅத்தினர்களின் வழிமுறையாகும். இதில் கவாரிஜிகள், மு∴தஸிலாக்கள், அவர்களை சார்ந்தவர்கள் முரண்படுகிறார்கள். (மஜ்மூ∴ பதாவா : பாகம் 20, பக்கம் 208,209)

அல்லாஹ்வையும் அவன் தூதரையும் பகைத்துக் கொண்டிருப்பவர்கள் தங்களது நெருங்கிய உறவினர்களாக இருந்த போதிலும் அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஅத்தினர் அவர்களை விட்டு நீங்கி விடுவார்கள்.

﴿ لَّا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْـَٔاخِرِ يُوَآدُّونَ مَنْ حَآدَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَلَوْ كَانُوٓا۟ ءَابَآءَهُمْ أَوْ أَبْنَآءَهُمْ أَوْ إِخْوَٰنَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ ﴾ المجادلة: ٢٢

*அல்லாஹ்வையும் மறுமைநாளையும் விசுவாசிப்பவர்கள், அல்லாஹ்வையும் அவன் தூதரையும் பகைத்துக் கொண்டிருப்பவர்களுடன் நேசமாக நடக்கமாட்டார்கள். அவர்கள் தங்களது பெற்றோர்களாயினும் அல்லது புதல்வர்களாயினும் அல்லது தங்கள் சகோதரர்களாயினும் அல்லது தங்கள் குடும்பத்தவர்களாயினும் சரியே(நேசம் கொள்ள மாட்டார்கள்) (அல் முஜாதலா : 22)*

﴿ وَٱلْمُؤْمِنُونَ وَٱلْمُؤْمِنَٰتُ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ ﴾ التوبة: ٧١

*விசுவாசங்கொண்ட ஆண்களும் விசுவாசங்கொண்ட பெண்களும் அவர்களில் சிலர் சிலருக்கு உற்ற நேசர்களாக இருக்கின்றனர். (அத்தவ்பா : 71)*

## நேசம் வைத்தல், நன்னடத்தை என்பவற்றிற்கு இடையிலான வேறுபாடுகள்

நேசம் வைத்தல் என்பது ஒரு விடயம் நன்னடத்தை என்பது வேறு ஒரு விடயம். இதற்கு பின்வரும் அல்குர்ஆன் வசனம் சான்றாகவுள்ளது.

﴿لَّا يَنْهَىٰكُمُ ٱللَّهُ عَنِ ٱلَّذِينَ لَمْ يُقَٰتِلُوكُمْ فِى ٱلدِّينِ وَلَمْ يُخْرِجُوكُم مِّن دِيَٰرِكُمْ أَن تَبَرُّوهُمْ وَتُقْسِطُوٓا۟ إِلَيْهِمْ﴾ الممتحنة: ٨

*உங்களின் மார்க்க விடயங்களில் போராடாத உங்களை உங்களது வீடுகளிலிருந்து வெளியேற்றாதவர்களுக்கு நீங்கள் நலவு செய்வது அவர்களுடன் நீதமாக நடப்பது என்பவற்றை அல்லாஹ் உங்களுக்கு தடுக்கவில்லை. (அல் மும்தஹினா : 8)*

இதிலிருந்து உதவி புரிவது, அன்பு செலுத்துவது என்பவற்றில் ஏற்படும் நேசம் என்பது வேறு. இறைநிராகரிப்பாளர்களான குடும்பத்தினர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுதல், இனபந்துகளை பேணி நடந்து கொள்ளுதல், அவர்களுக்காக செலவிடல் என்பது வேறு என்பது தெளிவாகிறது.

﴿وَوَصَّيْنَا ٱلْإِنسَٰنَ بِوَٰلِدَيْهِ حَمَلَتْهُ أُمُّهُۥ وَهْنًا عَلَىٰ وَهْنٍ وَفِصَٰلُهُۥ فِى عَامَيْنِ أَنِ ٱشْكُرْ لِى وَلِوَٰلِدَيْكَ إِلَىَّ ٱلْمَصِيرُ ﴿١٤﴾ وَإِن جَٰهَدَاكَ عَلَىٰٓ أَن تُشْرِكَ بِى مَا لَيْسَ لَكَ بِهِۦ عِلْمٌ فَلَا تُطِعْهُمَا ۖ وَصَاحِبْهُمَا فِى ٱلدُّنْيَا مَعْرُوفًا ۖ وَٱتَّبِعْ سَبِيلَ مَنْ أَنَابَ إِلَىَّ ۚ ثُمَّ إِلَىَّ مَرْجِعُكُمْ فَأُنَبِّئُكُم بِمَا كُنتُمْ تَعْمَلُونَ﴾ لقمان: ١٤ - ١٥

*நாம் மனிதனுக்கு தன் பெற்றோர் (இருவருக்கும் நலம் செய்ய வேண்டியது) பற்றி வஸியத்து செய்(து போதித்)தோம், அவனுடைய தாய் பலஹீனத்தின் மேல் பலஹீனம் கொண்டவளாக (கர்ப்பத்தில்) அவனை சுமந்தாள், இன்னும் அவனுக்கு பால்குடி மறத்த(லி)ல் இரண்டு வருடங்கள் ஆகின்றன, ஆகவே நீ எனக்கும் உன் பெற்றோர்க்கும் நன்றி செலுத்துவாயாக என்னிடமே உன்னுடைய மீளுதல் இருக்கிறது''.*

*ஆனால் நீ எது பற்றி அறிவு(ஆதாரம்) பெற்றவனாக இல்லையோ அதனை எனக்கு இணையாக வைக்குமாறு உன்னை அவ்விருவரும் வற்புறுத்தினால் அப்போது நீ அவ்விருவருக்கும் வழிபட வேண்டாம். ஆனால் இவ்வுலக வாழ்க்கையில் அவ்விருவருடனும் அழகிய முறையில் உறவு வைத்துக் கொள். (யாவற்றிலும்) என்னையே நோக்கி நிற்போரின் வழியையே நீ பின்பற்றுவாயாக! பின்னர் உங்கள் (அனைவருடைய) மீளுதலும் என்னிடமேயாகும். நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்பதை (அப்போது) நான் உங்களுக்கு அறிவிப்பேன். (லுக்மான் : 14,15)*

﴿ وَٱعْبُدُوا۟ ٱللَّهَ وَلَا تُشْرِكُوا۟ بِهِۦ شَيْـًٔا ۖ وَبِٱلْوَٰلِدَيْنِ إِحْسَـٰنًا وَبِذِى ٱلْقُرْبَىٰ وَٱلْيَتَـٰمَىٰ وَٱلْمَسَـٰكِينِ
وَٱلْجَارِ ذِى ٱلْقُرْبَىٰ وَٱلْجَارِ ٱلْجُنُبِ وَٱلصَّاحِبِ بِٱلْجَنۢبِ وَٱبْنِ ٱلسَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَـٰنُكُمْ ۗ إِنَّ ٱللَّهَ لَا
يُحِبُّ مَن كَانَ مُخْتَالًا فَخُورًا ﴾ النساء: ٣٦

*மேலும் அல்லாஹ்வையே வழிபடுங்கள், அவனுடன் எதனையும் இணை வைக்காதீர்கள். மேலும் தாய், தந்தையருக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் அண்டை வீட்டிலுள்ள உறவினர்களுக்கும் அருகிலுள்ள அண்டை வீட்டாருக்கும் (பிரயாணம், தொழில்) போன்றவற்றில் கூட்டாளிகளாக இருப்போருக்கும் வழிப்போக்கர்களுக்கும் உங்களிடமுள்ள அடிமைகளுக்கும் அன்புடன் உபகாரம் செய்யுங்கள். நிச்சயமாக அல்லாஹ் கர்வமுடையோராக இருப்பவர்களை நேசிப்பதில்லை. (அன்னிஸா : 36)*

**காபிர்களுடனான நேசத்திற்கான சில எடுத்துகாட்டுகள் :**

1. பேச்சு, உடை போன்றவற்றில் அவர்களை பின்பற்றுதல்

مَنْ تَشَبَّهَ بِقَوْمٍ فَهُوَ مِنْهُمْ

*யார் பிற கலாச்சாரத்திற்கு ஒப்பாக நடக்கிறானோ அவன் அந்த சமூகத்தை சேர்ந்தவனாவான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி), ஆதாரம் : அபூ தாவூத் 4033.

2. மார்க்கத்தைப் பாதுகாப்பதற்காக வேண்டி இஸ்லாமிய நாடுகளுக்கு செல்லாமல் இறை நிராகரிப்பாளர்களின் நாடுகளில் வாழ்தல்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿ إِنَّ ٱلَّذِينَ تَوَفَّىٰهُمُ ٱلْمَلَـٰٓئِكَةُ ظَالِمِىٓ أَنفُسِهِمْ قَالُوا۟ فِيمَ كُنتُمْ ۖ قَالُوا۟ كُنَّا مُسْتَضْعَفِينَ فِى ٱلْأَرْضِ ۚ قَالُوٓا۟ أَلَمْ تَكُنْ أَرْضُ ٱللَّهِ
وَٰسِعَةً فَتُهَاجِرُوا۟ فِيهَا ۚ فَأُو۟لَـٰٓئِكَ مَأْوَىٰهُمْ جَهَنَّمُ ۖ وَسَآءَتْ مَصِيرًا ﴿٩٧﴾ إِلَّا ٱلْمُسْتَضْعَفِينَ مِنَ ٱلرِّجَالِ وَٱلنِّسَآءِ وَٱلْوِلْدَٰنِ لَا
يَسْتَطِيعُونَ حِيلَةً وَلَا يَهْتَدُونَ سَبِيلًا ﴿٩٨﴾ فَأُو۟لَـٰٓئِكَ عَسَى ٱللَّهُ أَن يَعْفُوَ عَنْهُمْ ۚ وَكَانَ ٱللَّهُ عَفُوًّا غَفُورًا ﴾ النساء: ٩٧ - ٩٩

*தமக்கு தாமே அநீதி இழைத்துக் கொண்டவர்களுடைய உயிர்களை மலக்குமார்கள் கைப்பற்றும் போது (அவர்களிடம்) நீங்கள் எதில் இருந்தீர்கள்? என்று கேட்பார்கள். அதற்கவர்கள், நாங்கள் பூமியில் பலவீனர்களாக இருந்தோம் என்று (பதில்) கூறுவார்கள். அதற்கு (மலக்குகள்) நீங்கள் இருந்த இடத்திலிருந்த வேறு ஓர் இடத்திற்கு (ஹிஜ்ரத்) செல்ல அல்லாஹ்வின் பூமி விசாலமானதாக இருக்கவில்லையா?*

*என்று சொல்வார்கள். இத்தகையோர் தங்குமிடம் நரகம் தான். செல்லுமிடங்களில் மிகக் கெட்ட இடமும் இதுவேயாகும். (ஆனால்) ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் என்பவர்களில் பலவீனமானவர்களை தவிர வேறு யாரும் எவ்வித தந்திரத்தையும் பயன்படுத்த சக்தி பெறமாட்டார்கள். (அந்நரகிலிருந்து வெளியேற) எந்த வழியையும் அறிய மாட்டார்கள். அல்லாஹ் அத்தகைய அவர்களை மன்னிக்கக்கூடும். இன்னும் அல்லாஹ் மன்னிப்பவனாகவும் பிழை பொறுப்பவனாகவும் இருக்கிறான். (அன்னிஸா : 97 - 99)*

இங்கே அல்லாஹ் ஹிஜ்ரத் மேற்கொள்ள முடியாத பலவீனர்களைத் தவிர வேறு யாருக்கும் இறைநிராகரிப்பாளர்களின் நாட்டில் வாழ்வதற்கு அனுமதியளிக்கவில்லை. அவ்வாறே இறைநிராகரிப்பாளர்களின் நாட்டில் இஸ்லாத்தை பரப்புதல், அல்லாஹ்வின் பால் மக்களை அழைக்கின்ற அழைப்பு பணி போன்ற மார்க்க நலனுக்காக தங்குகின்றவர்களுக்கும் அனுமதியளிக்கப் பட்டுள்ளன.

3. உள அமைதி பெறுவதற்கும் மன ஆறுதலுக்காகவும் இறை நிராகரிப்பாளர்களின் நாட்டிற்கு பணயம் மேற்கொள்ளுதல். கல்வி கற்றல், வியாபாரம், நோய் நிவாரணம் போன்ற நிர்பந்தத்தின் போதே தவிர ஏனைய நேரங்களில் தடுக்கப்பட்டுள்ளது. அதுவும் தனது மார்க்கத்தை வெளிரங்கமாகக் கடைபிடித்து, இஸ்லாத்தை கண்ணியமாகக் காட்டி, தீமையான விவகாரங்களிலிருந்து தூரமாகி, இருக்க முடியுமென்றால் மாத்திரமே இது போன்ற அந்நிய நாடுகளுக்கு பயணிக்க முடியும்.

4. முஸ்லிம்களுக்கு எதிராக இறை நிராகரிப்பாளர்களுக்கு உதவி, ஒத்தாசைகள் புரிவது, அவர்களுக்கு சார்பாகப் பேசுவது, அவர்களை புகழ்வது. இவை இஸ்லாத்தை முறிக்கக்கூடிய, ரித்தத் (இஸ்லாத்தை விட்டு வெளியேற்றல்) ஏற்படுத்தும் காரணங்களிலுள்ளதாகும்.

5. இறை நிராகரிப்பாளர்களிடம் உதவி தேடுதல், அவர்களை உறுதியாக நம்புதல், முஸ்லிம்களின் இரகசியங்கள் காணப்படுகின்ற பதவிகளை அவர்களுக்கு ஒப்படைத்தல், அவர்களை அந்தரங்க செய்தியாளர்களாகவும் ஆலோசகர்களாகவும் எடுத்துக் கொள்ளுதல்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تَتَّخِذُواْ بِطَانَةً مِّن دُونِكُمْ لَا يَأْلُونَكُمْ خَبَالًا وَدُّواْ مَا عَنِتُّمْ قَدْ بَدَتِ ٱلْبَغْضَآءُ مِنْ
أَفْوَٰهِهِمْ وَمَا تُخْفِى صُدُورُهُمْ أَكْبَرُ ۚ قَدْ بَيَّنَّا لَكُمُ ٱلْـَٔايَـٰتِ ۖ إِن كُنتُمْ تَعْقِلُونَ ﴿١١٨﴾ هَـٰٓأَنتُمْ أُوْلَآءِ تُحِبُّونَهُمْ وَلَا يُحِبُّونَكُمْ

وَتُؤْمِنُونَ بِٱلْكِتَٰبِ كُلِّهِۦ وَإِذَا لَقُوكُمْ قَالُوٓا۟ ءَامَنَّا وَإِذَا خَلَوْا۟ عَضُّوا۟ عَلَيْكُمُ ٱلْأَنَامِلَ مِنَ ٱلْغَيْظِ ۚ قُلْ مُوتُوا۟ بِغَيْظِكُمْ ۗ إِنَّ ٱللَّهَ
عَلِيمٌۢ بِذَاتِ ٱلصُّدُورِ ﴿١١٩﴾ إِن تَمْسَسْكُمْ حَسَنَةٌ تَسُؤْهُمْ وَإِن تُصِبْكُمْ سَيِّئَةٌ يَفْرَحُوا۟ بِهَا ﴾ آل عمران: ١١٨ - ١٢٠

*விசுவாசிகளே! உங்களது அந்தரங்க செய்திகளை அறிபவர்களாக உங்(கள் இனத்தவர்)களையன்றி மற்றவர்களை எடுத்துக் கொள்ள வேண்டாம். அவர்கள் உங்களுக்கு தீங்கு செய்வதில் எவ்வித குறையும் செய்வதில்லை. நீங்கள் துன்புறுவதை அவர்கள் விரும்புகிறார்கள். அவர்களுடைய வாய்களிலிருந்தே அவர்களுடைய கடுமையான வெறுப்பு வெளிப்பட்டுவிட்டது. உங்களை பற்றி அவர்கள் தங்களது நெஞ்சங்களில் மறைத்து வைத்திருப்பவைகளோ மிகப் பெரிதாகும். நீங்கள் அறிவுள்ளவர்களாக இருந்தால், நாம் உங்களுக்கு அவர்களின் அடையாளங்களை தெளிவுபடுத்தி விட்டோம். (விசுவாசிகளே!) தெரிந்து கொள்ளுங்கள்! நீங்கள் அவர்களை விரும்புகின்றீர்கள். ஆனால், அவர்கள் உங்களை விரும்புவதில்லை. இன்னும் நீங்கள் வேதங்கள் அனைத்தையும் விசுவாசிக்கின்றீர்கள். அவர்கள் உங்களை சந்தித்தால் நாங்கள் விசுவாசிக்கின்றோம் என்று சொல்கின்றனர். (உங்களை விட்டு விலகி) அவர்கள் தனித்து விட்டால் உங்கள் மீதுள்ள கோபத்தின் காரணமாக (தங்களது) விரல் நுனிகளை கடித்துக் கொள்கிறார்கள். ஆகவே, (நபியே! அவர்களிடம்) கூறுங்கள், உங்கள் கோபத்திலே நீங்கள் மரணித்து விடுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் நெஞ்சங்களில் உள்ளவற்றை நன்கறிந்தவன். உங்களுக்கு ஏதும் நன்மை ஏற்பட்டால் அது அவர்களை வருந்த செய்கிறது. உங்களுக்கு ஏதும் தீமை ஏற்பட்டால் அதற்காக மகிழ்ச்சி அடைகிறார்கள். (ஆல இம்ரான் : 118 - 120)*

6. வரலாறுகளை (ஆண்டு கணிப்பீடுகளை) அவர்களது வரலாறுகளை (ஆண்டு கணிப்பீடுகளை) வைத்து கணிப்பிடல். குறிப்பாக கிறிஸ்துவ வருடம் போன்ற அவர்களுடைய பெருநாட்கள், விழாக்களை வைத்து கணிக்கப்படுகின்ற ஆண்டு கணிப்பீட்டு முறை.

7. அவர்களது பெருநாள் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ளுதல் அல்லது அதனை மேற்கொள்வதற்காக உதவி புரிதல், அக்கொண்டாட்டங்கள் நிமித்தமாக அவர்களை வாழ்த்துதல் அல்லது அங்கு செல்லுதல்.

8. அவர்களுடைய கலாச்சார நாகரிக விஷயங்களை வைத்து போற்றி புகழ்தல். அவர்களுடைய பிழையான கொள்கை, கோட்பாடுகள், தீங்கு விளைவிற்கும் அவர்களது மதம் என்பவற்றை உற்று நோக்காமல் அவர்களுடைய பண்பாடுகள், திறமைகளை வைத்து ஆச்சரியப்படுதல். இதன் அர்த்தம் முஸ்லிம்கள் அவர்களுடைய இராணுவ அமைப்பு முறைகள், ஆகுமாக்கப்பட்ட பொருளாதார திட்டங்கள் உற்பத்தி நடவடிக்கைகள் போன்ற சக்தி மிக்க விடயங்களை எடுத்துக் கொள்ளக்கூடாது

என்பதல்ல. மாறாக அத்தகைய விடயங்களை பெற்றுக் கொள்ளுமாறு வேண்டப் பட்டிருக்கிறோம். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَأَعِدُّواْ لَهُم مَّا ٱسۡتَطَعۡتُم مِّن قُوَّةٍ﴾ الأنفال: ٦٠

*அவர்களுக்காக(அவர்களுடன் போர் செய்வதற்காக) உங்களுக்கு முடியுமான அளவில் பலத்தை தயார்படுத்திக் கொள்ளுங்கள் (அன்பால் : 60)*

அல்லாஹ் மற்றொரு இடத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறான்:

﴿قُلۡ مَنۡ حَرَّمَ زِينَةَ ٱللَّهِ ٱلَّتِيٓ أَخۡرَجَ لِعِبَادِهِۦ وَٱلطَّيِّبَٰتِ مِنَ ٱلرِّزۡقِ﴾ الأعراف: ٣٢

*(நபியே!) அல்லாஹ் தன் அடியார்களுக்கு வெளிப்படுத்தியிருக்கும் அலங்காரத்தையும் உணவு வகைகளில் நல்லவற்றையும் தடுத்தவன் யார்? எனக் கேட்பீராக! (அல் அ:'ராப் 32).*

9. அவர்களது பெயர்களை தமக்குப் பெயர்களாக வைத்துக் கொள்ளல்.

10. அவர்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுதல், அவர்களுக்குக் கருணை காட்டப் பிரார்த்தித்தல். அல்லாஹ் கூறுகிறான் :

﴿مَا كَانَ لِلنَّبِيِّ وَٱلَّذِينَ ءَامَنُوٓاْ أَن يَسۡتَغۡفِرُواْ لِلۡمُشۡرِكِينَ وَلَوۡ كَانُوٓاْ أُوْلِي قُرۡبَىٰ مِنۢ بَعۡدِ مَا تَبَيَّنَ لَهُمۡ أَنَّهُمۡ أَصۡحَٰبُ ٱلۡجَحِيمِ﴾ التوبة: ١١٣

முஷ்ரிக்குகள் (இணைவைப்பவர்கள்) தம் நெருங்கிய உறவினர்களாக இருப்பினும், நிச்சயமாக அவர்கள் நரகவாதிகள் என்று தெளிவாக்கப்பட்ட பின் அவர்களுக்காக மன்னிப்புக்கோருவது நபிக்கும், ஈமான் கொண்டவர்களுக்கும் தகுதியானதல்ல. (அத் தௌபா : 113)

# மார்க்கத்தை பரிகாசம் செய்தல்

அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَئِن سَأَلْتَهُمْ لَيَقُولُنَّ إِنَّمَا كُنَّا نَخُوضُ وَنَلْعَبُ ۚ قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنتُمْ تَسْتَهْزِئُونَ﴾

التوبة: ٦٥

*(நபியே!) நீர் அவர்களிடம் வினவுவீர்களாயின் நாங்கள் வீண் பேச்சிலும் விளையாட்டிலும் மூழ்கியிருந்தோம் என்று கூறுவார்கள். (நபியே!) அவர்களிடம் அல்லாஹ்வையும் அவனது வசனங்களையும் அவனது தூதரையுமா நீங்கள் பரிகசிக்கின்றீர்கள் என்று கேட்பீராக! (அத்தவ்பா : 65)*

நபி(ஸல்) அவர்கள் கொண்டு வந்ததில் ஏதாவதொன்றை பரிகாசம் செய்தால் அது இறை நிராகரிப்பை ஏற்படுத்தும் என்பது முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவாகும். அவர் அதன் மூலம் உண்மையில் அதை நாடாமல் வாயளவில் சொன்னாலும் சரியே!

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து இப்னு ஜரீர், இப்னு ஹாதிம், அபூ ஷேய்ஹ் ஆகியோர் அறிவிக்கின்றார்கள், ஒரு மனிதர் தபூக் யுத்தத்தில் ஒருநாள் ஒரு மஜ்லிஸில் சொன்னார். நாங்கள் இத்தகைய மனிதர்களை கண்டதில்லை. இவர்கள் யுத்தத்தில் கோழைகளாகவும் நாவினால் பொய்யர்களாகவும் வயிறு நிரப்புவதை விரும்புபவர்களாகவும் இருக்கின்றனர். அப்பொழுது அதே மஜ்லிஸில் இன்னொரு மனிதர் நீ பொய் சொல்கிறாய், நீ ஒரு முனா∴பிக், நான் இதனை ரஸுூல் (ஸல்) அவர்களிடம் அறிவிப்பேன் என்றார். அது ரஸுூல் (ஸல்) அவர்களிடம் எத்தி வைக்கப்பட்டது. அப்பொழுது அருள்மறை வசனம் இறங்கியது. அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள், அம்மனிதர் ரஸுூல் (ஸல்) அவர்களின் ஒட்டகத்தின் கடிவாளத்தை பிடித்தவராக நின்றார். அதே நேரத்தில் கல் ஒன்று அவரை தாக்கி காயப்படுத்தியது. அவர் சொன்னார், அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் விளையாடிக் கொண்டும் அரட்டையடித்துக் கொண்டும் இருந்தோம். அப்பொழுது ரஸுூல் (ஸல்) அவர்கள் பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

﴿قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنتُمْ تَسْتَهْزِئُونَ﴾ التوبة: ٦٥

நபி(ஸல்) அவர்கள் கொண்டு வந்த ஷரீயத், அறிவு, அவர்களுடைய குடும்பம் போன்ற விடயங்களில் ஏதாவதொன்றை ஏளனம் செய்தல், அல்லாஹ்வின் கூலி, தண்டனை விடயங்களில் ஏளனம் செய்தல், நன்மையை ஏவி தீமையை தடுக்கின்றவர்களை ஏளனம் செய்தல், கடமையான, உபரியான தொழுகைகளை தொழுபவரை ஏளனம் செய்தல், தாடி வைத்தவர்களை ஏளனம் செய்தல், வட்டியுடன்

தொடர்பு வைக்காதவர்களை ஏளனம் செய்தல் இத்தகையோர் தான் இறைநிராகரிப்பாளர்கள் ஆவார்கள். இறைவனின் மார்க்கத்தை நபி(ஸல்) அவர்கள் கொண்டு வந்ததை ஏளனம் செய்கின்றவர்களுடன் போராடுவது முஸ்லிம்கள் மீது கடமையாகும். அவர்கள் மக்களுக்கு மிக நெருக்கமானவர்களாக இருந்தாலும் சரியே (அவர்களுடன் போராட வேண்டும்). அவர்கள் இவ்வாறான பேச்சுக்களை தவிர்ந்து கொள்ளாத வரையில் முஸ்லிம்கள் அவர்களுடன் அமராமல் இருக்க வேண்டும். இதனை அல்லாஹ் இப்படி சொல்கிறான்:

﴿وَقَدْ نَزَّلَ عَلَيْكُمْ فِي ٱلْكِتَٰبِ أَنْ إِذَا سَمِعْتُمْ ءَايَٰتِ ٱللَّهِ يُكْفَرُ بِهَا وَيُسْتَهْزَأُ بِهَا فَلَا تَقْعُدُوا۟ مَعَهُمْ حَتَّىٰ يَخُوضُوا۟ فِي
حَدِيثٍ غَيْرِهِۦٓ ۚ إِنَّكُمْ إِذًا مِّثْلُهُمْ ۗ إِنَّ ٱللَّهَ جَامِعُ ٱلْمُنَٰفِقِينَ وَٱلْكَٰفِرِينَ فِي جَهَنَّمَ جَمِيعًا﴾ ال نساء: ١٤٠

*அல்லாஹ்வுடைய வசனங்களை அவை நிராகரிக்கப் படுவதையோ அல்லது பரிகசிக்கப் படுவதையோ நீங்கள் செவியுற்றால் அவர்கள் இது தவிர்ந்த வேறு விஷயங்களில் ஈடுபடும் வரையில் நீங்கள் அவர்களுடன் உட்கார வேண்டாம் என அல்லாஹ் இவ்வேதத்தில் இறக்கி வைத்துள்ளான். அவ்வாறு உட்கார்ந்தால் நீங்களும் அவர்களை போன்றுதான் ஆவீர்கள். அல்லாஹ் முனாபிக்குகள் (வேஷதாரிகள்), இறை நிராகரிப்பாளர்கள் ஆகியோரை நரகில் ஒன்று சேர்ப்பான். (அன்னிஸா : 140).*

## வழி கெட்ட இயக்கங்கள்

**இஸ்லாத்தில் ஏற்படும் பிரிவுகள் பற்றிய முன்னறிவிப்பு :**

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள், *யஹூதிகள் 71 பிரிவினராக பிரிந்தனர். கிறிஸ்தவர்கள் 72 பிரிவினராக பிரிந்தனர். எனது சமூகம் 73 பிரிவினர்களாக பிரிவார்கள். அதில் ஒரு கூட்டத்தை தவிர மற்றவைகள் எல்லாம் நரகில் நுழையும். (அப்பொழுது ஸஹாபாக்கள்) அல்லாஹ்வின் தூதரே! அந்த கூட்டம் யார்! எனக் கேட்டார்கள். அதற்கு (நபியவர்கள்) நானும் எனது ஸஹாபாக்களும் எதன் மீது இருக்கிறோமோ அதில் இருப்பவர்கள்தான்* என்றார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

ஆதாரம் : அபூ தாவூத் 4599, திர்மிதீ 2641, இப்னு மாஜ∴ 3992.

மேற்கண்ட நபிமொழியில் உள்ள பிரிவுகள் என்பது கொள்கை (அகீதா) அடிப்படையில் பிரிந்து சென்றவர்களையே குறிக்கும். மாறாக மார்க்க சட்ட திட்டங்களில் (பிக்ஹு) ஏற்படும் கருத்து வேறுபாடல்ல என்பது குறிப்பிடத்தக்கது.

ஏனெனில் மார்க்க சட்டங்களில் ஏற்படும் கருத்து வேறுபாடுகளைப் பிரிவுகள் என்று கூற முடியாது. நபித்தோழர்களுக்கு மத்தியிலும் இவ்வாறு கருத்து வேறுபாடுகள் இடம்பெற்றுள்ளன. அதன் காரணமாக நபித்தோழர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து சென்றார்கள் என்று யாரும் கூறுவதில்லை, கூறவும் முடியாது. அதே போன்று பின்னால் வந்த மார்க்க அறிஞர்களுக்கு மத்தியிலும் இவ்வாறு கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. நபித்தோழர்களோ அல்லது பின்னால் வந்த அறிஞர்களோ அவர்களுக்கு மத்தியில் யாரும் யாரையும் காபிர் என்றோ வழிகேடன் என்றோ குற்றம் சுமத்தவில்லை. எனவே அடிப்படைக் கொள்கையில் ஏற்படும் பிரிவுகளைத்தான் இந்நபிமொழி சுட்டிக்காட்டுகின்றது என்பது தெளிவானதே.

**இஸ்லாத்தில் வழிகெட்ட பிரிவுகள் தோன்றிய வரலாறு :**

இறைவன் கூறுகிறான் :

﴿إِنَّ هَٰذِهِۦٓ أُمَّتُكُمْ أُمَّةً وَٰحِدَةً وَأَنَا۠ رَبُّكُمْ فَٱعْبُدُونِ﴾ الأنبياء: ٩٢

நிச்சயமாக உங்கள் “உம்மத்து” - சமுதாயம் - (வேற்றுமை ஏதமில்லா) ஒரே சமுதாயம் தான் மேலும் நானே உங்கள் இறைவன். ஆகையால், என்னையே நீங்கள் வணங்குங்கள். (அல் அந்பியா : 92)

நபி (ஸல்) அவர்கள் உருவாக்கிய இஸ்லாமிய சமூகம் மேற்கண்ட வசனத்தின் அடிப்படையில் வேற்றுமையில்லாத ஒற்றுமையான சமூகமாகவே இருந்தது. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் அனைத்து நபித்தோழர்களும் ஒரே தலைமையின் ஒரே சமூகமாகவே இருந்தனர். அவர்கள் மரணித்ததும் ஆட்சிபீடமேறிய முதலாம் கலீபா அபூபக்ர் (ரலி) அவர்களுடைய காலத்திலும், இரண்டாம் கலீபா உமர் (ரலி) அவர்களின் காலத்திலும், மூன்றாம் உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தின் முதல் பகுதியிலும் இஸ்லாமிய சமூகம் ஒரே தலைமையின் கீழ் ஒற்றுமையாகவே இருந்தது.

பின்னர் ஏற்பட்ட சில அரசியல் பிரச்சினைகளால் இஸ்லாமிய ஆட்சிக்கெதிரான முதல் கிளர்ர்ச்சி எகிப்து, கூபா, பஸரா போன்ற பகுதிகளில் இருந்து வந்தவர்களால் உருவானது. அதன் விளைவாக அச்சமயம் ஆட்சியிலிருந்த உஸ்மான் (ரலி) அவர்கள் அநியாயமாகக் கெலை செய்யப்பட்டார்கள். தொடர்ந்து ஆட்சிபீடமேறிய நான்காம் கலீபா அலீ (ரலி) அவர்கள் உஸ்மான் (ரலி) அவர்களின் கொலையாளர்களைப் பலி வாங்குவதை சில காரணங்களுக்காக தாமதப்படுத்தினார்கள். அதனை ஏற்றுக்கொள்ளாத முஆவியா (ரலி) அவர்கள் ஷாம் (ஸிரியா) பகுதியில் தனயாட்சி நடாத்த முற்பட்டார்கள். இதனால் இருவருக்குமிடையில் ஸிப்பீன் யுத்தம் நடைபெற்றது.

இந்த யுத்த முடிவில்தான் இஸ்லாத்தின் முதல் பிரிவு உருவானது. அலீ (ரலி) அவர்களின் படையிலிருந்து சில கிளர்ச்சியாளர்கள் வெளிநடப்புச் செய்து பிரிந்து சென்றனர். அவர்கள்தாம் இஸ்லாத்தின் முதல் பிரிவு கவாரிஜ்கள். அதே சந்தர்ப்பத்தில் நாம் அலீ (ரலி) அவர்களின் பிரிவு என்று கூறிக்கொண்டு அவர்களை அளவுக்கதிகமாக உயர்த்திய ஷீஆக்கள் தோற்றம் பெற்றனர்.

தொடர்ந்து இறைவனின் விதியில் கருத்துவேறுபாடுபட்டு கதரிய்யாக்கள் ஜபரிய்யாக்கள் என்று இரு பிரிவினர் தோன்றினார்கள். அதே போன்று அல்லாஹ்வின் பெயர்கள் பண்புகள் விடயத்தில் ஜஹுமிய்யாக்கள், மு.·.தஸிலாக்கள், அஷாஇராக்கள், மாதுரீதிய்யாக்கள் போன்ற பிரிவுகள் தோற்றம் பெற்றன.

இறைநம்பிக்கை விடயத்தில் முர்ஜிஆக்கள் என்ற ஒரு பிரிவு தோற்றம் பெற்றது. அதே போன்று பல அடிப்படைக்கொள்கைகளில் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்ட ஸூபிய்யாக்கள் உருவாகி இஸ்லாத்தில் பல நூதனங்கள் உருவாகக் காரணமாக இருந்தனர்.

இஸ்லாத்தில் உருவான அனைத்து வழிகெட்ட இயக்கங்களுக்கும் அப்துல்லாஹ் பின் ஸப.·. என்ற யூதனின் சூழ்ச்சி முக்கிய பங்கு வகிக்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

## சில வழிகெட்ட இயக்கங்கள்

### காதியானிகள்:

இந்த இயக்கம் இந்திய நாட்டிலே ஆங்கில காலணித்துவத்தின் திட்டமிடலின் கீழ் கி.பி.1900ம் ஆண்டு இஸ்லாத்தின் பெயரில் காலணித்துவவாதிகளை எதிர்கொள்ளக்கூடாது என்பதற்காக, முஸ்லிம்களை குறிப்பாக ஜிஹாதிய கடமையிலிருந்தும், முஸ்லிம்களை அவர்களுடைய மார்க்கத்தை விட்டும் தூரமாக்கும் நோக்குடனும் உருவாக்கப்பட்டது. இதனை மிர்ஸா குலாம் அஹ்மத் என்பவன் ஸ்தாபித்தான். மார்க்கத்திற்கும் நாட்டிற்கும் மோசடி செய்வதில் பிரபலமான குடும்பத்தை சேர்ந்தவன். அவன், அவனை பின்பற்றுகின்றவர்கள் மத்தியில் பல நோய்களால் பீடிக்கப்பட்டவனாகவும் புகைத்தலுக்கு அடிமையானவனாகவும் அறிமுகமாகியிருந்தான்.

**இந்த இயக்கத்தின் சிந்தனைகள், கொள்கைகள் :**

- மிர்ஸா குலாம் என்பவன் வாக்களிக்கப்பட்ட நபி ஈஸா என்று நம்புகிறார்கள்.
- அல்லாஹ் தொழுகிறான், நோன்பு நோற்கிறான், தூங்குகிறான், விழிக்கின்றான், எழுதுகிறான், கையொப்பமிடுகிறான், தவறு செய்கிறான், உடலுறவு கொள்கிறான் என்று நம்புகிறார்கள். ஆனால், இவர்கள் சொல்வதை விட்டும் அல்லாஹ் உயர்ந்தவன் தூய்மையானவன்.
- காதியானி தன்னுடைய அல்லாஹ் ஆங்கிலேயன் என நினைக்கிறான். ஏனெனில் அல்லாஹ் அவனுடன் ஆங்கிலத்தில் கதைக்கிறான்.
- ஜிப்ரீல்(அலை) அவர்கள் மிர்ஸா குலாமின் மீது இறங்குகிறார், அவருக்கு வஹி அறிவிக்கிறார், அவருடைய இல்ஹாமத்துகள் (உதிப்புக்கள்) அல்குர்ஆனை போன்றது என நம்புகிறார்கள்.
- ஜிஹாதை இல்லாதொழித்தல். ஆங்கில அரசாங்கத்திற்குக் கண்மூடித்தனமாகக் கட்டுப்படல் வேண்டும். ஏனெனில், அவர்களின் நினைப்பின் படி ஆங்கில அரசாங்கமே அல்குர்ஆனின் கட்டளையின் பிரகாரம் தலைவராக இருக்க வேண்டும்.
- காதியானிகளை ஏற்றுக்கொள்ளும் வரையில் அனைத்து முஸ்லிம்களும் இறைநிராகரிப்பாளர்கள் ஆவார்கள். அதே போன்று காதியானி அல்லாத ஒருவரைத் திருமணம் செய்பவன் அல்லது திருமணம் செய்து வைப்பவன் இறை நிராகரிப்பாளன் ஆவான்.
- மதுபானம், அபின், புகைத்தல், போதை பொருட்கள் என்பனவற்றை ஆகுமாக்குகிறார்கள்.
- நபித்துவம் முஹம்மது (ஸல்) அவர்களுடன் முடிவடையவில்லை. மாறாக அது தொடர்ந்து கொண்டிருக்கிறது, அல்லாஹ் சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப ரஸூல்மார்களை அனுப்புகிறான். மிர்ஸா குலாம் சிறந்த நபியாவார் என காதியானிகள் நம்புகின்றனர்.
- காதியானிகளுக்கு இஸ்ரவேலர்களுடன் நெருங்கிய தொடர்பு உண்டு. இவர்களுக்காக பாடசாலைகள், மையஸ்தளங்கள் திறக்கப்பட்டுள்ளன. இவர்கள் அதிகமாக இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் காணப்படுகிறார்கள்.

இஸ்லாத்தின் பெயரால் இவ்வியக்கம் உருவானதாலையே இதனை இஸ்லாத்தில் வழிகெட்ட இயக்கங்களுடன் இங்கு சேர்க்கப்பட்டுள்ளது. அவ்வாறின்றி காதியானிகளுக்கும் இஸ்லாத்திற்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பதை மேற்கண்ட அவர்களது கொள்கைகளின் மூலம் அறிந்து கொள்ளலாம். மு∴தஸிலாக்கள், அஷாஇராக்கள் போன்று இவர்கள் இஸ்லாத்தின் வழிகொட்ட இயக்கமல்ல. மாறாக இவர்கள் காபிர்களாகவே கணிக்கப்படுகின்றனர் என்பதை இங்கு புரிந்து கொள்வது அவசியமாகும்.

## ஷீஆக்கள்

**அறிமுகம் :**

இஸ்லாத்தின் ஆரம்ப காலங்களில் தோன்றிய நெறிதவறிய இயக்கங்களில் ஷீஆக்கள் பிரதானமானவர்கள்.

'ஷீஆ' என்ற அரபுப்பதம் அடிப்படையில் பின்பற்றுபவர்கள், உதவியாளர்கள் போன்ற கருத்தைக் குறிக்கின்றது. பிரிவு, கூட்டம், உதவியாளர், ஒன்றைப் போன்றது ஆகிய கருத்துக்களில் இச்சொல் அல்குர்ஆனில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'ஷீஆக்கள்' என்றால் யார்? என்று வரைவிலக்கணப்படுத்துவதில் அறிஞர்களுக்கு மத்தியில் கருத்துவேற்றுமை உள்ளது. அதில் மிக வலுவானதாகப் பின்வரும் கூற்றை எடுக்கலாம் : 'ஷீஆ என்பது, ஏனைய கலீபாக்களைவிட அலீ (ரலி) அவர்களை மேம்படுத்தி, நபியவர்களின் குடும்பத்தினர் (அஹ்லுல் பைத்தினர்)தான் ஆட்சிக்குத் தகுதியானவர்கள் என்பதுடன் ஏனைய ஆட்சிகளெல்லாம் செல்லுபடியற்றவை என்று கருதும் ஒவ்வொருவரும் ஷீஆவே.

**தோற்றமும் வளர்ச்சியும் :**

ஹிஜ்ரி 36ல் நடைபெற்ற ஸிப்∴பீன் போரைத் தொடர்ந்து ஒரு புறம் கவாரிஜ்கள் அலீ (ரலி) அவர்களுக்கெதிராக வெளிநடப்புச் செய்தபோது, மறுபுறம் அவர்களுக்கு சார்பாக பக்கபலமாக இருந்தவர்களே பிற்காலத்தில் ஷீஆக்களாக அறியப்பட்டனர். எனவே ஷீஆக்கள் ஹிஜ்ரி 35, 36களில் கூபாவில் தோன்றியுள்ளனர்.

யமன் நாட்டிலிருந்து இஸ்லாமியப் போர்வையில் மதீனா வந்த அப்துல்லாஹ் பின் ஸப∴ என்ற யூதனே இவ்வியக்கம் தோன்ற பிரதான காரணமாகும். உஸ்மான் (ரலி) அவர்களின் படுகொலை தொடக்கம் ஷீஆக்களின் அனைத்து வழிகெட்ட சிந்தனைகளுக்கும் சொந்தக்காரன் இவனென்றால் அது மிகையாது.

ஆரம்பத்தில் அரசியல் நோக்கில் அலீ (ரலி) அவர்களுக்க ஆதரவளித்த இவர்கள் அடுத்தகட்டமாக ஏனைய 3 கலீபாக்களைவிட அலீ (ரலி) அவர்களை மேம்படுத்தும் நிலைக்குச் சென்றனர். இதனை அலீ (ரலி) அவர்களே கண்டித்துள்ளார்கள். அதன்பின் அப்துல்லாஹ் பின் ஸப.்.வின் விசக்கருத்துக்கள் ஷீஆக்களிடையே பரவ ஆரம்பித்தது. ஸஹாபாக்களில் ஒரு சிலரைத்தவிர ஏனையோரைத் தூற்றவும், காபிராக்கவும் ஆரம்பித்து, இறுதிக்கட்டமாக அலீ (ரலி) அவர்களைக் கடவுளாக்கும் நிலைக்கே சென்று இஸ்லாத்தை விட்டும் வெளியேறும் நிலைக்குச் சென்றுவிட்டார்கள். இக்கருத்துடைய பலரை அலீ (ரலி) அவர்கள் தண்டனை கொடுத்துக் கொலை செய்தார்கள்.

**ஷீஆக்களின் பெயர்கள் :**

1. ஷீஆ : இப்பெயர் கொண்டே அவர்கள் பிரபலமடைந்துள்ளனர். இதில் அவர்களுடைய அனைத்துப் பிரிவும் உள்ளடங்கும்.

2. ஸைதிய்யா : ஹுஸைன் (ரலி) அவர்களின் பேரப்பிள்ளையான ஸைத் பின் அலீயைச் சார்ந்தவர்கள் என்ற அடிப்படையில் இப்பெயர் வந்தது.

3. ராபிழா : மேற்கண்ட ஸைத் பின் அலீ 'கலீபாக்களைத் திட்ட வேண்டாம்' என்று விடுத்த கோரிக்கையை ஏற்க மறுத்ததால் ராபிழா என்ற பெயர் உருவானது.

**ஷீஆக்களின் பிரிவுகள் :**

ஷீஆக்கள் பல பிரிவினர்களாகப் பிரிந்துள்ளனர். சில அறிஞர்கள் இவர்கள் 70 பிரிவினராக உள்ளனர் என்றும் கூறியுள்ளனர். அப்பிரிவுகளை ஆய்வு செய்து பார்க்கும் போது அனைத்துப் பிரிவுகளும் ஒரே தரத்திலில்லையென்பது புலனாகின்றது. அதிக தாக்கம் செலுத்தும் பிரதான 3 பிரிவுகளை இங்கு சற்று அலசுவோம்.

1. **அஸ்ஸபஇய்யா :**

அப்துல்லாஹ் பின் ஸப.். என்ற யூதனைப் பின்துயர்ந்தவர்களே ஸபஇய்யாக்கள் எனப்படுகின்றனர். அஹ்லுல் பைத்தினர் மீது கொண்ட போலியான நேசத்தை தனது விசக்கருத்துக்களை விதைக்க ஆயுதமாகப் பயன்படுத்தினான். ஹிஜாஸ் மாகாணம் (மக்கா, மதீனா, ஜித்தா, தாஇப்) மற்றும் பஸரா, கூபா, ஸிரியா, எகிப்து போன்ற பகுதிகளில் உஸ்மான் (ரலி) அவர்களுக்கெதிரான கருத்துக்களை பரத்தி ஒரு புரட்சியை ஏற்படுத்தி அவர்கள் அநியாயமாகக் கொலை செய்யப்படக் காரணமாயிருந்தான்.

அலீ (ரலி) அவர்கள்தான் ஆட்சிக்கென நபியவர்களால் வஸிய்யத் செய்யப்பட்டவரென்றும், அவர்கள் மறுபிறவியெடுத்து வருவார்களென்றும், அவர்களிடம்

கடவுள்த்தன்மை இருப்பதாகவும், அவர்கள் கொலை செய்யப்படவில்லை, மாறாக வானிற்கு ஏறியுள்ளார்களென்றும் வாதாடிக் கொண்டிருந்தான். இந்த ஸபஇய்யாக்களின் கருத்துக்களுக்கும் அஹ்லுல்பைத்தினருக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதனைச் செவியுற்ற அலீ (ரலி) அவர்கள்கூட அக்கூட்டத்தினருக்குத் தண்டனை வழங்கினார்கள்.

2. **ஸைதிய்யாக்கள் :**

ஹுஸைன் (ரலி) அவர்களுடைய புதல்வர் ஸைனுல் ஆப்தீன் அலீ பின் ஹுஸைன் அவர்களுடைய காலத்தில் ஷீஆக்கள் அஹ்லுல்பைத் விடயத்தில் அளவுகடந்து செல்ல ஆரம்பித்தனர். இவர்கள் அதனைக் கண்டிக்கும் போக்கைக் கொண்டிருந்தனர். இந்த அலீ பின் ஹுஸைனுக்குப் பல குழந்தைகள் உள்ளனர். அவர்களில் ஸைத், முஹம்மத், உமர் போன்றவர்கள் பிரபலமானவர்கள். ஸைனுல் ஆப்தீனுக்குப் பின் இமாமத்திற்குத் தகுதியாகனவர் யார்? ஸைத்தா ? அல்லது முஹம்மதா? என்பதில் ஷீஆக்கள் மத்தியில் பிரச்சினை உருவானது. ஒரு பிரிவினர் ஸைத் பின் அலீதான் தகுதியானவர் என்று ஒரு கூட்டாத்தார் வாதாடினர். அவர்கள்தான் ஸைதிய்யாக்கள். யமன் நாட்டிலே இவர்கள் அதிகமாக வசிக்கின்றனர். இப்பிரிவின் ஆரம்பத்தவர்கள் ஸஹாபாக்களைத் தூற்றாமல் நடுநிலை வகித்தார்கள். அதனால் அஹ்லுஸ்ஸுன்னாக்களுக்கு மிக நெருக்கமான ஷீஆப் பிரிவு இந்த ஸைதிய்யாக்கள் என்று சில அறிஞர்கள் எழுதி வைத்திருந்தனர். ஆனால் தற்காலத்திலுள்ள ஸைதிய்யாக்கள் நிலைமாறி ராபிழாக்களுடைய கொள்கையையே ஸஹாபாக்கள் விடயத்தில் கடைபிடிக்கின்றனர்.

3. **ராபிழாக்கள் :**

'ர.்.ப்ழ்' என்ற அரபு மூலச்சொல்லிலிருந்தே 'ராபிழா' என்ற பெயர் உருவானது. ர.்.ப்ழ் என்றால் ஒன்றை விட்டுவிடுதல், புறக்கணித்தல் என்பதாகும். 'அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) உட்பட பெரும்பான்மையான ஸஹாபாக்களை மறுத்து, கிலாபத் நபியவர்களுடைய வஸிய்யத் பிரகாரம் அலீ (ரலி) அவர்களுக்கும் அவர்களின் வம்சத்தினருக்கும்தான் அமைய வேண்டும், ஏனையோருடைய கிலாபத் செல்லுபடியற்றது' என்ற கொள்கையைக் கடைபிடிப்பவர்களே ராபிழாக்கள் எனப்படுகின்றனர்.

**இஸ்னாஅஷரிய்யாக்கள் :**

ராபிழாக்கள் பல பிரிவினர்களாகப் பிரிந்து சென்றனர். அவர்களில் பிரதானமானவர்களும், தற்காலத்தில் பெரும்பான்மை ஷீஆக்களாகவும் இருப்பவர்கள் 12 இமாம்களை முதன்மைப்படுத்தும் இஸ்னாஅஷரிய்யாக்களாகும். ஈரான், இராக், பாகிஸ்தான் போன்ற நாடுகளில் இருக்கும் ஷீஆக்கள் இப்பிரிவினரே. இந்தியா இலங்கை போன்ற முஸ்லிம்கள் சிறுபான்மையாக வசிக்கும் நாடுகளில்கூட இவர்களுடைய ஊடுருவல் உள்ளது. அவர்கள் முதன்மைப்படுத்தும் அந்த 12 இமாம்களும் பின்வருமாறு :

1. அலீ பின் அபீதாலிப் (ரலி). 2. ஹஸன் பின் அலீ (ரலி). 3. ஹுஸைன் பின் அலீ (ரலி). 4. அலீ பின் ஹுஸைன் பின் அலீ. 5. முஹம்மத் பின் அலீ பின் ஹுஸைன் அல்பாகிர். 6. ஜஃபர் பின் முஹம்மத் பின் ஹுஸைன் அஸ்ஸாதிக். 7. மூஸா பின் ஜஃபர் அல்காழிம். 8. அலீ பின் மூஸா அர்ரிழா. 9. முஹம்மத் பின் அலீ அல்ஜவாத். 10. அலீ பின் முஹம்மத் அல்ஹாதீ. 11. ஹஸன் பின் அலீ அல்அஸ்கரீ. 12. முஹம்மத் பின் ஹஸன் அல்அஸ்கரீ. (இவர்தான் மறைந்து வாழும் எதிர்பார்க்கப் படக்கூடிய அவர்களின் மஹ்தீ). இந்த இஸ்னாஅஷரிய்யாக்களுக்கு ஜஃபரிய்யா, இமாமிய்யா, ராபிழா போன்ற வேறு பெயர்களும் உள்ளன.

**ஷீஆக்களின் அடிப்படைக் கொள்கை :**

ஷீஆக்களின் அகீதாவைப் பொருத்தவரை பல விதமான விநோதமான நம்பிக்கைகளும் கோட்பாடுகளும் நிரம்பியிருக்கின்றன. அவையனைத்தையும் இங்கு விவரிக்க இடம்கொடுக்கமாட்டாது. எனவே முக்கியமான சில அடிப்படைக் கொள்கைகளை இங்கு சுருக்கமாகக் கூறுகின்றேன்.

1. கிலாபத்தும் இமாமத்தும் :

ஷீஆக்களின் பிரதான கோட்பாடே இந்த கிலாபத்துதான். இமாமத்தை அவர்கள் இஸ்லாத்தின் அடிப்படை ருகூன்களில் ஒன்றாகக் கருதுகின்றனர். நபிமார்கள் ரஸூல்மார்களைப் போன்று இமாம்களையும் அல்லாஹ்வே தெரிவு செய்கின்றான். அவர்களுக்கு அல்லாஹ்வுடன் நேரடித் தொடர்புள்ளது. அவர்களை நம்புவது ஈமானின் ஒரு பகுதி போன்ற கருத்துக்களைக் கொண்டுள்ளதுடன், அல்குர்ஆனின் பல வசனங்களை இவர்களது இமாம்களுக்கு சார்பாக வளைத்துள்ளனர்.

2. இமாம்கள் தவறைவிட்டும் பாதுகாக்கப்பட்டவர்கள் :

சிறிய பாவங்களோ, பெரிய பாவங்களோ, தவறுதலாகவோ, மறதியாகவோ பிறந்ததிலிருந்து மரணிக்கும்வரை அவர்களுடைய இமாம்கள் செய்ய மாட்டார்கள்.

அதனை விட்டும் அவர்கள் பாதுகாக்கப்பட்டவர்கள் என்பது ஷீஆக்களுடைய அடிப்படைக் கொள்கை. அவர்களுடைய இமாம்கள் நபிமார்களைவிடச் சிறந்தவர்கள், மறைவான அறிவு பெற்றவர்கள் போன்ற கருத்துக்களையும் இமாம்கள் விஷயத்தில் நம்புகின்றனர்.

3. நடிப்பு (தகிய்யா) :

இது ஷீஆக்கள் தமது தீய கருத்துக்களை சமூகத்தில் வெளிவராமல் முன்னெச்சரிக்கையாக மறைத்துக் கொள்வதைக் குறிக்கின்றது. பெரும்பான்மை ஷீஆக்கள் தம்மை ஷீஆவெனக் காட்டிக்கொள்ள மாட்டார்கள்.

4. எதிர்பார்க்கப்படும் மஹ்தீ :

அஹ்லுஸ்ஸுன்னாவினர் ஸஹீஹான நபிமொழிகளில் இடம்பெற்றுள்ள மஹ்தீ (அலை) அவர்கள் பற்றிய செய்திகளை ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால் ஷஆக்கள் கூறும் மஹ்தீ இவரல்ல. அவர்களுடைய 12வது இமாமாகிய முஹம்மத் பின் ஹஸன் அல்அஸ்கரீ என்பவரே ஷீஆக்கள் எதிர்பார்க்கும் மஹ்தீ. அவர்களின் நம்பிக்கைப் பிரகாரம் இவர் ஹி.260களில் மறைந்து ஒளித்துக் கொண்டிருக்கின்றார். மீண்டு திரும்பி வந்த நீதியை நிலைநாட்டுவாரென்பது இவர்களின் நம்பிக்கை.

5. அல்குர்ஆன் பற்றிய ஷீஆக்களின் நிலைப்பாடு :

தற்போதுள்ள அல்குர்ஆன் முழுமையற்றது, திரிபுகளும் குறைபாடுகளுமுள்ளது, அலீ (ரலி) மற்றும் அஹ்லுல் பைத்தினர் பற்றி அருளப்பட்ட வசனங்கள் மழுங்கடிக்கப்பட்டுள்ளன. தற்போதிருக்கும் அல்குர்ஆனின் மூன்று மடங்கு பெரியதுதான் உண்மையான அல்குர்ஆன். அதன் பெயர் 'முஸ்ஹபு பாத்திமா' என்பதாகும். அதன் மூலப்பிரதி தாம் எதிர்பார்த்திருக்கும் மஹ்தீயிடம்தானுள்ளது என்பதுதான் ஷீஆக்களின் அல்குர்ஆன் பற்றிய நம்பிக்கை. அத்துடன் தற்போதுள்ள அல்குர்ஆனின் பல வசனங்களைத் தமக்கு சார்பாக மாற்றிக் கொண்டுள்ளதுடன், மேலதிகமாக பல வசனங்களையும் அத்தியாயங்களையும் அதிகரித்துள்ளனர். அதில் முக்கியமானதுதான் 'ஸூரதுல் விலாயா' என்பது.

6. ஸஹாபாக்கள் பற்றிய நிலைப்பாடு :

ஸஹாபாக்கள் விடயத்தில் ஷீஆக்கள் வரம்பு மீறியே நடந்து கொள்கின்றனர். சுவனத்தைக் கொண்டு நற்செய்தி கூறப்பட்ட முப்பெரும் கலீபாக்கள் உட்பட பெரும்பான்மையான ஸஹாபாக்கள் இவர்களின் பார்வையில் மதம்மாறியவர்கள். நபியவர்களின் அன்பு மனைவி மு.ஃ.மின்களின் அன்னையர் ஆஇஷா (ரலி)

அவர்களுக்கும் படுதூறு கூறித்திரிகின்றனர். அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகிய இருவரையும் குரைஷிகளின் இரு சிலைகள் என்கின்றனர்.

7. விதியில் நெறிபிறழ்ந்த ஷீஆக்கள் :

ஒரு செயல் நடக்கும் வரை அதுபற்றி அல்லாஹ்வுக்குத் தெரியாது என்பது ஷீஆக்களின் மற்றுமொரு கொள்கை. இதனை அரபியில் 'அல் பதா:' என்பர். இப்பிரபஞ்சத்தைப் படைப்பதற்கு முன்னரே அல்லாஹ் மறுமை வரை நடக்கவிருக்கின்ற அனைத்தையும் அறிவான் என்பதே அல்குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் அஹ்லுஸ்ஸுன்னாக்களின் நம்பிக்கை. இதில் ஷீஆக்கள் மாறுபடுகின்றனர்.

**ஷீஆக்கள் பற்றி இஸ்லாத்தின் நிலைப்பாடு :**

முன்சென்ற காலத்திலும்தான் தற்காலத்திலும்தான் பொதுவாக அனைத்து ஷீஆக்களும் பொரும்பாலும் ஒரே கருத்தைத்தான் கொண்டுள்ளனர். அஹ்லுஸ்ஸுன்னத்தினர் ஷீஆக்கள் விடயத்தில் பின்வரும் நிலைப்பாட்டைக் கொண்டுள்ளனர் :

1. அனைத்து ஷீஆக்களும் ஒரே தரத்திலில்லை. இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் கருத்துக்களைக் கொண்டவர்களும் உள்ளனர். அதனைவிடக் குறைவாக பித்அத்வாதியாகக் கணிக்கப்படக்கூடியவர்களும் உள்.

2. தனிநபருக்குத் தீர்ப்புச் செய்ய முன் அதன் வரையறைகளைக் கருத்திற்கொண்டு உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

3. பொதுவாக அனைத்து ஷீஆக்களும் சத்தியத்தை விட்டும் தூரமாகிய வழிகெட்ட பாவிகள் என்பதில் எவ்வித ஐயமும் அஹ்லுஸ்ஸுன்னாக்களிடத்தில் இல்லை.

4. அல்குர்ஆன் மாற்றப்பட்டுதென்றோ, தமது இமாம்கள் நபிமார்களை விடச் சிறந்தவர்களென்றோ, அவர்கள் தவறுகளை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்கள் என்றோ, ஸஹாபாக்களைக் காபிர்களென்றோ, அல்லாஹ்வுக்கு ஒரு விடயம் நடைபெறும்வரை அதுபற்றித் தெரியாதென்றோ நம்பிக்கை கொண்டால், அதுபற்றித் தெளிவபடுத்தப்பட்ட பின்பும் இக்கொள்கையிலேயே பிடிவாதமாக இருந்தால் அவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெளிப்பட்டவர்கள் என்பதே அஹ்லஸ்ஸுன்னாக்களின் நிலைப்பாடாகும்.

## எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே

بسم الله الرحمن الرحيم

# ஃபிக்ஹு

# 4


தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம் அஹ்மத் (அப்பாஸி)


# فقه

(اللغة التاملية)


ترجمة: محمد عمران بن جمال الدين
مراجعة : أحمد بن محمد



المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة
ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH
P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | ஹஜ்ஜின் வரைவிலக்கணம், சட்டம், சிறப்பு, அது விதியாவதற்கான நிபந்தனைகள் | 45 நிமிடங்கள் |
| 2 | ஹஜ்ஜின் ருகூன்களும் வாஜிபுகளும் | 45 நிமிடங்கள் |
| 3 | ஹஜ் வழிபாட்டு முறைகள் (1) | 45 நிமிடங்கள் |
| 4 | ஹஜ் வழிபாட்டு முறைகள் (2) | 45 நிமிடங்கள் |
| 5 | இஹ்ராமும் அதனுடன் செய்யத் தடுக்கப்பட்டவைகளும், பரிகாரங்களின் வகைகளும் (1) | 45 நிமிடங்கள் |
| 6 | இஹ்ராமும் அதனுடன் செய்யத் தடுக்கப்பட்டவைகளும், பரிகாரங்களின் வகைகளும் (2) | 45 நிமிடங்கள் |
| 7 | ஹஜ் பற்றிய சில பொதுவான குறிப்புகள் | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | ஹத்ய், உழ்ஹிய்யா, அகீகா (1) | 45 நிமிடங்கள் |
| 10 | ஹத்ய், உழ்ஹிய்யா, அகீகா (2) | 45 நிமிடங்கள் |
| 11 | திருமணத்தின் சிறப்புகள், அக்த், திருமணம் செய்யத் தடுக்கப்பட்டவர்கள் (1) | 45 நிமிடங்கள் |
| 12 | திருமணத்தின் சிறப்புகள், அக்த், திருமணம் செய்யத் தடுக்கப்பட்டவர்கள் (2) | 45 நிமிடங்கள் |
| 13 | தலாக், குல்.்.உ (1) | 45 நிமிடங்கள் |
| 14 | தலாக், குல்.்.உ (2) | 45 நிமிடங்கள் |
| 15 | வியாபார ஒப்பந்தம் செய்யும் முறை, நிபந்தனைகள், விற்பனை செய்யத் தடைசெய்யப்பட்டவை | 45 நிமிடங்கள் |

# ஹஜ்

## ஹஜ்ஜின் விளக்கம்

அகராதியில் : ஹஜ் என்றால் நாட்டம் என்று பொருள்.
நடைமுறையில் : குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட வணக்கங்களை இறைவனுக்காக நிறைவேற்றும் எண்ணத்துடன் மக்கா செல்வதாகும்.

﴿وَلِلَّهِ عَلَى ٱلنَّاسِ حِجُّ ٱلْبَيْتِ مَنِ ٱسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا ۚ وَمَن كَفَرَ فَإِنَّ ٱللَّهَ غَنِىٌّ عَنِ ٱلْعَٰلَمِينَ﴾ آل عمران: ٩٧

*இறைவன் கூறுகிறான் : இன்னும் அதற்குச் செல்வதற்குரிய பாதையில் பயணம் செய்ய சக்தி பெற்றிருக்கும் மனிதர்களுக்கு அல்லாஹ்வுக்காக அவ்வீடு சென்று ஹஜ் செய்வது கடமையாகும். (ஆல இம்ரான் : 97)*

## ஹஜ் கடமையாகுதல்

1- வாழ்வில் ஒரு முறை ஹஜ் செய்வது கடமையாகும்.
2- இஸ்லாத்தின் கடமைகளில் ஹஜ் ஐந்தாவது இடத்தை வகிக்கிறது.
3- ஹிஜ்ரி 9ம் ஆண்டு ஹஜ் கடமையாக்கப் பட்டது.

## ஹஜ்ஜின் சிறப்பு

قال رسول الله ﷺ: مَنْ حَجَّ هذَا الْبَيْتَ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ (متفق عليه)

யார் பெண்களிடத்தில் உறவாடாமலும் பாவம் செய்யாமலும் இந்த வீட்டை ஹஜ் செய்கிறாரோ அவர் (பாவங்கள் அழிக்கப்பட்டு) அன்று பிறந்த பாலகன் போல் வீடு திரும்புகிறார் என நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்.
அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)
ஆதாரம் : புஹாரி 1820, முஸ்லிம் 1350.

## ஹஜ் கடமையானதன் நோக்கம்

﴿لِّيَشْهَدُوا۟ مَنَٰفِعَ لَهُمْ وَيَذْكُرُوا۟ ٱسْمَ ٱللَّهِ فِىٓ أَيَّامٍ مَّعْلُومَٰتٍ عَلَىٰ مَا رَزَقَهُم مِّنۢ بَهِيمَةِ ٱلْأَنْعَٰمِ﴾
الحج: ٢٨

1. இறைவன் கூறுகிறான் : ""தங்களுக்குரிய பயன்களை அடைவதற்காகவும் குறிப்பிட்ட நாட்களில் அல்லாஹ் அவர்களுக்கு அளித்துள்ள (ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற) நாற்கால் பிராணிகள் மீது அவன் பெயரைச் சொல்(லி குர்பான் கொடுப்)பவர்களாகவும் (வருவார்கள்). (அல் ஹஜ் : 28)
2. இறுதி நாளின் நிகழ்வுகளையும், மஹ்ஷர் (விசாரணை) நாளையும் ஞாபகப்படுத்துகிறது.
3. உள்ளத்தின் அழுக்குகளை நீக்கி, பாவங்களில் இருந்து மனதை தூய்மைப் படுத்துகிறது.
4. இஸ்லாத்தின் கொடியை உலகத்திற்கு வெளிப்படுத்துகிறது.

## ஹஜ் கடமையாவதற்கான நிபந்தனைகள்

1-இஸ்லாம். 2- புத்தி 3- பருவமடைதல்.
4- சக்தி பெற்றிருத்தல். 5-சுதந்திர பிரஜையாக இருத்தல்.
6- பெண்ணுக்கு மஹ்ரம் இருத்தல். (மஹ்ரம் இருப்பதை சில அறிஞர்கள் சக்தி பெற்றிருத்தல் என்ற நிபந்தனையில் ஒன்றாக கருதுகின்றனர்)
ஒரு பெண்ணுக்கு மஹ்ரம் என்பது அவளது கணவன் அல்லது திருமணம் செய்ய அனுமதிக்கப்படாதவர்கள். (தந்தை, சகோதரர், தாய் தந்தையினரின் சகோதரர்கள், தனது ஆண்பிள்ளைகள், பேரன்கள் போன்றோர்.)

## ஹஜ்ஜின் ருகூன்கள்

1- இஹ்ராம் நிய்யத் வைத்தல் 2- அர.ஃபாவில் தங்குதல்
3- தவா.ஃபுல் இபாழா 4-ஸயி செய்தல்.

## ஹஜ்ஜின் வாஜிபுகள்

1. மீகாதில் இஹ்ராம் அணிதல்.
2. சூரியன் மறையும் வரை அர.ஃபாவில் தங்குதல்.
3. முஸ்தலிபாவில் தங்குதல்.
4. மினாவில் தங்குதல்.
5. கல் எறிதல்
6. தலை முடி சிரைத்தல் அல்லது குறைத்தல்
7. தவா.ஃபுல் விதா.ஃ. (இறுதித் தவா.ஃப் செய்தல்)

## ஹஜ்ஜின் வழிபாட்டு முறைகள்

1. **அல் தமத்து.ஃ.** : ஹஜ்ஜுடைய மாதங்களில் உம்ராவுக்கு இஹ்ராம் அணிந்து பின்பு அதை களைந்து விட்டு, மக்காவிலேயே தரித்து, அதே ஆண்டு ஹஜ்ஜுக்கென மீண்டும் இஹ்ராம் அணிதல்.
2. **அல் இ.ஃப்ராத்** : ஹஜ்ஜிக்கு மாத்திரம் மீகாதில் இஹ்ராம் அணிதல்.
3. **அல் கிரான்** : ஹஜ், உம்ரா இரண்டையும் சேர்த்துச் செய்வதாக இஹ்ராம் அணிதல் அல்லது உம்ராவுக்கென இஹ்ராம் அணிந்து தவா.ஃப் செய்வதற்கு முன் ஹஜ்ஜை நுழைத்து கொள்ளல். இவாட இஹ்ராத்துடனேயே இருக்க வேண்டும்.

# இஹ்ராம்

அதன் விளக்கம் : இஹ்ராம் என்பது ஹஜ் அல்லது உம்ராவுடைய வணக்கத்தில் பிரவேசிப்பதாகும். அதிகமானோர் இஹ்ராம் என்பது தைக்கப்பட்ட ஆடைகளைக் களைந்துவிட்டு வேட்டியும் போர்வையும் அணிவதென நினைக்கின்றனர். இஹ்ராம் என்பது விளக்கத்தில் கூறப்பட்டது போன்று வணக்கத்தில் நுழைவதற்காக வைக்கப்படும் நிய்யத்தாகும்.

## இஹ்ராம் அணிந்த பின் தடுக்கப்பட்டவைகள்

| | ஆண்களுக்கு | பெண்களுக்கு | அனைவருக்கும் | பரிகாரம் |
|---|---|---|---|---|
| 1 | தலை மறைத்தல் | | | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 2 | உடம்பின் அளவுக்கு தைக்கப்பட்ட ஆடைகளை அணிதல் | | | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 3 | | முக மூடி அணிதல் | | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 4 | | கையுறைகள் அணிதல் | | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 5 | | | முடி சிரைத்தல் | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 6 | | | நகம் வெட்டுதல் | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 7 | | | நறுமணம் பூசுதல் | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |
| 8 | | | திருமணம் செய்தல் அல்லது பேசுதல் | இல்லை |
| 9 | | | வேட்டையாடுதல் | பிராணிக்கொப்பான பரிகாரம் |
| 10 | | | உடலுறவு கொள்ளல் | முதலாவது தஹல்லுலுக்கு முன் : ஒட்டகம், அவருடைய ஹஜ் முறிந்து விடும். அடுத்த வருடம் அதனைக் கழாச் செய்ய வெண்டும் |
| | | | | முதலாவது தஹல்லுலுக்குப் பின் : ஆடு |
| 11 | | | உடலுறவின்றி இன்பமனுபவித்தல் | பித்யத் அதா (நோவினைக்கான பரிகாரம்) |

## பித்யத் அதா

1-மூன்று நாள் நோன்பு வைத்தல்.
2-ஆறு ஏழைகளுக்கு உணவளித்தல். (ஒவ்வொரு ஏழைக்கும் ஒரு சாஉ)
3-ஒரு ஆட்டை பலி கொடுத்தல்.

﴿فَمَن كَانَ مِنكُم مَّرِيضًا أَوْ بِهِۦٓ أَذًى مِّن رَّأْسِهِۦ فَفِدْيَةٌ مِّن صِيَامٍ أَوْ صَدَقَةٍ أَوْ نُسُكٍ﴾ البقرة: ١٩٦

உங்களில் எவரேனும் நோயாளியாக இருப்பதினாலோ அல்லது தலையில் ஏதேனும் தொந்தரவு தரக் கூடிய பிணியின் காரணமாகவோ (தலைமுடியை இறக்கிக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால்) அதற்குப் பரிகாரமாக நோன்பு இருத்தல் வேண்டும் அல்லது தர்மம் கொடுத்தல் வேண்டும், அல்லது குர்பானி கொடுத்தல் வேண்டும். (அல் பகரா : 196)

## தடுக்கப்பட்டவைகளை யார் செய்கிறாரோ அவர் பலி கொடுப்பதற்கான நிபந்தனைகள் :

1. **தக்க காரணமின்றி செய்தல்** : தடுக்கப்பட்டவைகளை மறதியாகவோ அல்லது தவறாகவோ செய்தால் அவர் மீது குற்றப்பரிகாரம் இல்லை.
2. **அறிவுடன் செய்தல்** : இவை தடுக்கப்பட்டவை என்பது தெரியாத நிலையில் அவரிடம் அதை சுட்டிக் காட்டவும் யாரும் இல்லாத போது அதை செய்து விட்டால் அவர் மீது குற்றப்பரிகாரம் இல்லை.
3. **சுயவிருப்பத்துடன் செய்தல்** : தடுக்கப்பட்டவைகளை ஒருவர் பலவந்தப்படுத்தப்பட்டு செய்தால் அவர் மீது குற்றப்பரிகாரம் இல்லை.

## பொதுவான குறிப்புகள்

1. இஹ்ராம் அணிந்ததில் இருந்து தல்பியா ஆரம்பித்து பத்தாவது நாள் கல் எறியும் வரை சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்.
2. எட்டாவது நாள் மினாவுக்குப் போவது சுன்னத்தாகும். அவருக்கு நேர நெருக்கடி இருந்தால் ஒன்பதாது நாள் நேரடியாக அர.ஃ.பாவுக்குப் போகலாம்.
3. அர.ஃ.பாவை வந்தடைந்தவுடன் தான் அர.ஃ.பாவின் எல்லைக்குள் இருப்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். காரணம் ஹஜ்ஜின் முக்கிய ருகுன்களை ஒன்றை இழந்து விடாமல் இருப்பதற்காக.
4. அர.ஃ.பாவில் - ஜபல் அல்ரஹ்மா- என்று பொதுமக்களால் அழைக்கப்படும் மலைக்குப் போவது கடமையில்லை. மாறாக இறையச்சத்தோடும், அமைதியுடனும் உட்கார்ந்து பிரார்த்தனை செய்யும் ஓர் இடத்தை தெரிவு செய்வது கடமையாகும்.
5. அர.ஃ.பாவிலிருந்து முஸ்தலி.ஃ.பாவுக்குப் போகும் போது இறைபக்தியுடனும் அமைதியாகவும் பாவமன்னிப்பு கேட்ட வண்ணமும் செல்ல வேண்டும்.

﴿ثُمَّ أَفِيضُوا۟ مِنْ حَيْثُ أَفَاضَ ٱلنَّاسُ وَٱسْتَغْفِرُوا۟ ٱللَّهَ ۚ إِنَّ ٱللَّهَ غَفُورٌ رَّحِيمٌ﴾ البقرة: ١٩٩

இறைவன் கூறுகிறான் : “பிறகு நீங்கள் மற்ற மனிதர்கள் திரும்புகின்ற (முஸ்தலிபா.ஃ. என்னும்) இடத்திலிருந்து நீங்களும் திரும்பிச் செல்லுங்கள்.

மேலும் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேளுங்கள் நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்போனாகவும், மிக்க கருணையுடையோனாகவும் இருக்கிறான்". (அல்பகரா : 199)

6. முஸ்தலி.ஃ.பாவை அடைந்து விட்டால் முதலாவது ம.ஃ.ரிபையும், இஷாவையும் சேர்த்தும், சுருக்கியும் தொழ வேண்டும். அதன் பின் அடுத்த நாளைக்கு தயாராகுவதற்கு ஓய்வெடுக்க வேண்டும்.

7. வயோதிபர், பெண், பலவீனமானவர், அவர்களுக்கு உதவிக்காக இருப்பவர் ஆகியோர் தேவையேற்படின் அதே இரவு சந்திரன் மறைந்ததும் முஸ்தலி.ஃ.பாவை விட்டு வெளியேறலாம்.

8. .ஃ.பஜ்ர் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்தில் நிறைவேற்றியதும் சூரியன் உதிக்கும் வரை பிரார்த்தனை செய்வது விரும்பத்தக்கது.

9. சிறு பொடிக்கற்களை எந்த இடத்திலும் பொறுக்கிக் கொள்ளலாம்.

10. கல்லை எறியும் போது தொட்டியில் விழும் கற்கள் மாத்திரமே கணக்கெடுக்கப்படும். தூணை அடிப்பது கட்டாயமில்லை.

11. பத்தாவது நாள் செய்யும் அமல்களை ஒழுங்குபடுத்திக் கொள்வது சுன்னத்தாகும். ஒன்றை விட்டு ஒன்றை முற்படுத்துவது குற்றமல்ல.

12. அய்யாமுல் தஷ்ரீக் எனும் 11,12,13 வது நாட்களில் மினாவில் தங்குவது கட்டாயமாகும்.

13. அய்யாமுல் தஷ்ரீக் எனும் நாட்களில் கல்எறிதல் பின்வரும் விதமாக அமையும்.

- சூரியன் மத்தியிலிருந்து சாய்ந்ததிலிருந்து (அதாவது லுஹர் அதானுக்குப் பிறகு) கல் எறிவதற்குரிய நேரம் ஆரம்பிக்கிறது.
- ஜமரதுல் சுக்ராவில் கல் எறிந்ததும் வலது புறமாக நின்று பிரார்த்தனை செய்வதும், பின்பு ஜம்ரதுல் உஸ்தாவில் எறிந்து விட்டு இடது புறமாக நின்று பிரார்த்தனை செய்வதும் சுன்னத்தாகும். ஜம்ரத் அல் குப்ராவில் எறிந்ததும் அங்கு நிற்காமல் சென்று விட வேண்டும்.

14. ஹஜ்ஜின் இறுதிச் செயலாக தவா.ஃ.புல் விதாவை ஆக்கிக் கொள்ள வேண்டும்.

15. தவா.ஃ.புல் இபாழாவை இறுதியாக செய்வோம் என்று நிய்யத் வைத்தால் அது தவா.ஃ.புல் விதாவுக்கும் சமமாகும்.

16. தவா.ஃ.புல் இபாழா செய்த பின் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் அப்பெண் சென்று விடலாம். தவா.ஃ.புல் விதா.ஃ. செய்வது அப்பெண் மீது கடமையில்லை.

# அல் ஹத்யி, அல் உழ்ஹிய்யா, அல் அகீகா

**அல்ஹத்யி** : மக்காவில் அறுக்கப்படுபவைகள் அனைத்தும் ஹத்யி எனப்படும். பின்வரும் மூன்று நிலமைகளில் ஹத்யி கொடுக்கப்படும்.

1- ஹஜ்ஜிக்காக கொடுக்கப்படும் ஹத்யி (கிரான், தமத்து.'. செய்யக் கூடிய இருவரும் கொடுக்க வேண்டும்)

2-ஹஜ்ஜின் முக்கியமான வாஜிப் ஒன்று விடுபட்டால்.

3-இஹ்ராம் அணிந்த பின் தடுக்கப்பட்டவைகளில் ஒன்றைச் செய்தால், (பலி கொடுத்தல், நோன்பு வைத்தல், உணவளித்தல் மூன்றில் ஒன்றை தெரிவு செய்வார்)

**அல் உழ்ஹிய்யா** : இறைவனை நெருங்க வேண்டும் என்ற எண்ணத்தோடு ஹஜ்ஜுப் பெருநாள் மற்றும் அய்யாமுத் தஷ்ரீக் தினங்களில் அறுப்பது உழ்ஹிய்யா எனப்படும்.

**அல் அகீகா** : குழந்தை பிறப்புக்காக அறுக்கப்படுவது அகீகா எனப்படும். அது ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம்.

**குறிப்பு :**

1. ஹத்யிலிருந்து சாப்பிடுவது சுன்னத்தாகும். (ஹஜ்ஜின் முக்கிய வாஜிப் ஒன்றை விட்டதற்காகவோ அல்லது இஹ்ராமின் தடைகளை செய்ததற்காக கொடுக்கப்படுபவைகளாக இல்லாதிருத்தல் வேண்டும்) இவ்வாறே பெருநாள் தினம் அறுக்கப்படும் உழ்ஹிய்யா, குழந்தை பிறந்ததற்காக அறுக்கப்படும் அகீகாவையும் சாப்பிடலாம்.

2. ஹஜ்ஜில் கொடுக்கப்படும் ஹதியிலும், உழ்ஹிய்யாவிலும் ஏழு பெயர் சேர்ந்து ஒரு மாட்டை அல்லது ஒரு ஒட்டகத்தைக் கொடுக்கலாம்.

## அறுக்க முடியுமான மிருகங்கள் :

1. **ஒட்டகம்** : இதுவே சிறந்தது. ஐந்து வருடங்கள் பூர்த்தியானதாக இருக்க வேண்டும்.
2. **மாடு** : இரண்டு வருடங்கள் பூர்த்தியானதாக இருக்க வேண்டும்.
3. **ஆடு** : செம்மறி ஆடு ஆறு மாதங்கள் பூர்த்தியானதாகவும், வெள்ளாடு (சாதாரண ஆடு) ஒரு வருடம் பூர்த்தியானதாகவும் இருக்க வேண்டும்.

## அந்த மிருகங்களுக்கான நிபந்தனைகள் :

1. இஸ்லாம் அனுமதித்த வயதை அடைந்திருக்க வேண்டும்.
2. குறைகள் இல்லாமல் இருத்தல். (கண் பார்வை இழந்தது, கால் உடைந்தது, வியாதி உள்ளது, மிகவும் மெலிந்தது இவை போன்ற குறைகள் இல்லாதிருத்தல் வேண்டும்)

### அகீகா சம்மந்தமான சில குறிப்புகள் :

1. அகீகாவின் பெறுமதிக்கு சதகா கொடுப்பதை விட ஆட்டை அறுத்துக் கொடுப்பது சிறந்தது.
2. ஆண் குழந்தையாக இருந்தால் இரண்டு ஆடுகளும், பெண் குழந்தையாக இருந்தால் ஒரு ஆடும் கொடுப்பது சிறந்ததாகும்.
3. குழந்தை பிறந்து ஏழாவது நாள் குழந்தைக்கு பெயர் வைப்பதுடன், அகீகா கொடுப்பதும் சுன்னத்தாகும்.
4. அகீகாவில் கூட்டுச் சேர முடியாது. (உழ்ஹிய்யாவில் ஒட்டகம் அல்லது மாடு அறுக்கும் போது அதில் ஏழு பேர் கூட்டுச்சேர்வது போல் அகீகாவில் முடியாது)

# திருமணம்

﴿ وَمِنْ ءَايَٰتِهِۦٓ أَنْ خَلَقَ لَكُم مِّنْ أَنفُسِكُمْ أَزْوَٰجًا لِّتَسْكُنُوٓا۟ إِلَيْهَا وَجَعَلَ بَيْنَكُم مَّوَدَّةً وَرَحْمَةً ۚ إِنَّ فِى ذَٰلِكَ لَءَايَٰتٍ لِّقَوْمٍ يَتَفَكَّرُونَ ﴾ الروم: ٢١

இன்னும் நீங்கள் அவர்களிடம் ஆறுதல் பெறுவதற்குரிய (உங்கள்) மனைவியரையும் உங்களிலிருந்தே உங்களுக்காக அவன் படைத்திருப்பதும், உங்களுக்கிடையே உகப்பையும், கிருபையையும் உண்டாக்கியிருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும். சிந்தித்து உணரக்கூடிய சமூகத்திற்கு நிச்சயமாக இதில் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன. (அர்ரூம் : 21)

وقال النبي ﷺ: (يَا مَعْشَرَ الشَبَابِ مَنِ اسْتَطَاعَ مِنْكُمُ الْبَاءَةَ فَلْيَتَزَوَّجْ فَإِنَّهُ أَغَضُّ لِلْبَصَرِ وَأَحْصَنُ لِلْفَرْجِ ، وَمَنْ لَمْ يَسْتَطِعْ فَعَلَيْهِ بِالْصَّوْمِ فَإِنَّهُ لَهُ وِجَاءٌ) (متفق عليه)

வாலிபர்களே! உங்களில் யார் உறவு கொள்ள சக்தி பெறுகிறாரோ அவர் திருமணம் செய்து கொள்ளட்டும். அது பார்வையை தாழ்த்திக் கொள்ளவும், மானத்தை பாதுகாத்துக் கொள்ளவும் உதவுகிறது. யார் திருமணம் செய்து கொள்ள சக்தி பெறவில்லையோ அவர் நோன்பு வைக்கட்டும். அது அவருக்கு கேடயமாகும் என நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்.
அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி).
ஆதாரம் புஹாரி 1905, முஸ்லிம் 1400.

### திருமணத்தின் சிறப்புகள் :

1. மனித சமுதாயத்தை பாதுகாப்பதுடன் இஸ்லாமிய சமுதாயத்தையும் அதிகரிக்க காரணமாக உள்ளது.
2. தீய பழக்கவழக்கங்கள், விபச்சாரம் போன்றவற்றில் இருந்து பாதுகாத்துக் கொள்ள முடிகிறது.
3. ஆண், பெண்ணுக்கு செலவு செய்வதன் மூலமும், கண்காணிப்பது மூலமும் பெண்ணை பாதுகாக்க முடிகிறது.

4. சந்ததியைப் பாதுகாப்பதுடன், சொந்த பந்தங்களுக்கு மத்தியில் இணைப்பையும் ஏற்படுத்துகிறது.
5. பத்தினித்தனமாக இருப்பதுடன், இறைவன் அனுமதித்ததைக் கொண்டு இன்பங்கொள்ள முடிகிறது.

## திருமண ஒப்பந்தம் :

'குத்பதுல் ஹாஜா.ஃ.' எனப்படும் பிரசங்கம் நிகழ்துவது விரும்பத்தக்கது. அதன் வார்த்தைகள் பின் வருமாறு:

إن الحمد لله نحمده ونستعينه ونستغفره ونتوب إليه........

"இன்னல் ஹம்தலில்லாஹ் , நஹ்முதுஹு வனஸ்தஈனுஹு வனஸ்த.ஃ.பிர்ஹு வனதூபு இலைஹி".
பின்பு திருமணத்தை நடத்தி வைத்தல்.

## நிகாஹ் நிறைவேறுவதற்கான நிபந்தனைகள் :

1. மணமகன், மணமகள் இருவரும் ஒருவரை ஒருவர் குறிப்பிட்டுச் சொல்லல். (அடையாளம் காட்டுதல், பெயர் குறிப்பிடல், வர்ணனைகளை சொல்லுதல், பிரித்தறிதல்)
2. இருவரும் ஒருவருக்கொருவர் பொருந்திக் கொள்ளுதல்.
3. நபி (ஸல்) அவர்களின் ஹதீஸின் பிரகாரம் பெண்ணுக்கு வலி இருத்தல்,

قال النبي ﷺ: لَا نِكَاحَ إِلَّا بِوَلِيٍّ

வலி (பொறுப்பாளர்) இல்லாமல் திருமணம் இல்லை என நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்.
அறிவிப்பவர் : அபூ மூஸா (ரலி)
ஆதாரம் : அபூ தாவூத் 2087, திர்மிதீ 1101, இப்னு மாஜ.ஃ. 1881.
4. திருமணத்திற்கு நேர்மையான இரண்டு சாட்சிகள் இருத்தல்.

عن جابر ﷺ: مرفوعاً : لَا نِكَاحَ إِلَّا بِوَلِيٍّ وَشَاهِدَيْ عَدْلٍ"

வலி (பொறுப்பாளர்) இல்லாமலும், நேர்மையான இரண்டு சாட்சிகள் இல்லாமலும் திருமணம் இல்லை என நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்.
அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி).
ஆதாரம் : இப்னு ஹிப்பான் 4075.

# மணம்புரிவதற்கு விலக்கப்பட்டவர்கள்

திருமணத்தில் விலக்கப்பட்டவர்கள் இரண்டு பிரிவினர்:

| | (நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள்) | | தற்காலிகமாக விலக்கப்பட்டவர்கள் |
|---|---|---|---|
| | **உறவு முறையால் விலக்கப்பட்டவர்கள்** | **சில காரணங்களால் விலக்கப்பட்டவர்கள்** | |
| 1 | தாய் , தாய்,தந்தை வழிப்பாட்டியர் | சாபமிட்டுக் கொண்ட தம்பதிகள் | ஒரே சமயத்தில் இரு சகோதரிகளை மணமுடித்தல் |
| 2 | மகள் , மகன்,மகள் வழிப்பேத்திகள் | பால்குடியுறவு (உறவு முறையில் விலக்கப்பட்ட அனைவரும் பால்குடியிலும் விலக்கப்படுவர் | ஒரே சமயத்தில் நான்குக்கு அதிகமாக மணமுடித்தல் |
| 3 | சகோதரி | தந்தை, பாட்டனின் மனைவி | இன்னொரு கணவருக்காக இத்தா இருக்கும் பெண் |
| 4 | சகோதர சகோதரிகளின் புதல்வியரும் அவர்களின் புதல்வியரும் | மனைவியின் தாய், பாட்டிகள் | பாவமன்னிப்புச் செய்யாத விபச்சாரி |
| 5 | தாய், தந்தையின் சகோதரிகள் | மகன், பேரன்களின் மனைவியர் | மூன்று முறை தலாக் சொல்லப்பட்டவள் (இன்னொருவர் முடித்து தலாக் சொல்லும் வரை) |
| 6 | | தான் உடலுறவு கொண்ட மனைவியின் புதல்வியரும் அவர்களின் புதல்வியரும் | இஹ்ராம் அணிந்திருப்பவள் அவள் இஹ்ராமிலிருந்து விடுபடும் வரை |
| 7 | | | கா.ஃ.பிரான பெண், வேதம் கொடுக்கப்பட்ட சுதந்திரமான பெண்ணைத் தவிர |

# தலாக் (விவாகரத்து)

**அகராதியில் தலாக் என்றால் :** விடுவித்தல் என்பது பொருள்.

**மார்க்க ரீதியில் :** திருமணத்தின் உடன்படிக்கையை அல்லது அதன் பகுதியை முறிப்பதாகும்.

**அதன் சட்டம் :** அடிப்படையில் அது வெறுக்கப்பட்ட ஒன்று. என்றாலும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு (வாஜிப், ஸுன்னத், முபாஹ் (அனுமதி), மக்ரூஹ் (வெறுக்கப்பட்டது), ஹராம் ஆகிய) ஐந்து விதமான சட்டசட்டங்களும் உள்ளன.

## தலாகிற்கான ஆதாரம் :

﴿ٱلطَّلَٰقُ مَرَّتَانِۖ فَإِمۡسَاكُۢ بِمَعۡرُوفٍ أَوۡ تَسۡرِيحُۢ بِإِحۡسَٰنٍ﴾ ال بقرة: ٢٢٩

(இத்தகைய) தலாக் இரண்டு முறைகள் தாம் கூறலாம் பின் (தவணைக்குள்) முறைப்படி கணவன், மனைவியாக வாழலாம் அல்லது நேர்மையான முறையில் பிரிந்து போக விட்டு விடலாம். (அல்பகரா : 229)

﴿يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ إِذَا طَلَّقۡتُمُ ٱلنِّسَآءَ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ﴾ ال طلاق: ١

நபியே! நீங்கள் பெண்களைத் தலாக் சொல்வீர்களானால் அவர்களின் இத்தாவைக் கணக்கிட ஏற்ற வகையில் (மாதவிடாய் அல்லாத காலங்களில்) தலாக் கூறுங்கள். (அத்தலாக் : 1)

## யாரிடம் இருந்து தலாக் ஏற்றுக் கொள்ளப்படும் :

புத்தியுள்ள பிரித்தறியக் கூடிய கணவனிடம் இருந்தே அது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அல்லது அந்தக் கணவன் பொறுப்புச் சாட்டும் வக்கீலிடமிருந்து ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

## ஆகுமான தலாக் (அல் சுன்னி) :

காலத்தை பொறுத்த வரையில்: தன் மனைவியை உடலுறவு கொள்ளாது அவள் தூய்மையாக இருக்கும் நிலையில் தலாக் சொல்ல வேண்டும்.

எண்ணிக்கையைப் பொறுத்த வரையில்: தன் மனைவியை முதலில் ஒரு முறை தலாக் சொல்ல வேண்டும். பின்பு முதல் இத்தா முடியும் வரை விட்டு வைக்க வேண்டும்.

## பித்அத்தான தலாக் (தலாக் அல் பித.்.இ) :

காலத்தை பொறுத்த வரையில் : மாதவிடாய் காலத்தில் அல்லது பிரசவத்தீட்டு இருக்கும் காலத்தில் அல்லது அவளுடன் உறவு கொண்டு பிரசவம் தெளிவாகாத நிலையில் தலாக் சொல்வதாகும். இக்காலகட்டத்தில் தலாக் சொல்லப்பட்டால் மீண்டும் சேர்ந்து கொள்வது விரும்பத்தக்கது.

<u>எண்ணிக்கையைப் பொறுத்தவரையில்</u> : ஒரே முறையில் மூன்று முறை தலாக் சொல்வதாகும். மூன்று முறை தலாக் சொல்லப்பட்டால் அவளை இன்னொருவர் திருமணம் செய்து தலாக் சொல்லும் வரை மீண்டும் திருமணம் செய்வது ஹராமாகும், தடுக்கப்பட்டதாகும்.

## குல்உ

இது ஒரு பெண் தனக்குப் பிடிக்காத கணவனை விட்டும் விலகுவதற்காக அவன் கொடுத்த மஹ்ரைத் திருப்பிக் கொடுத்து விவாகரத்தை வேண்டுவதாகும்.

﴿فَإِنْ خِفْتُمْ أَلَّا يُقِيمَا حُدُودَ ٱللَّهِ فَلَا جُنَاحَ عَلَيْهِمَا فِيمَا ٱفْتَدَتْ بِهِۦ﴾ البقرة: ٢٢٩

இன்னும் நீங்கள் அல்லாஹ்வின் வரம்புகளை அவர்களால் நிலை நிறுத்த முடியாது என்று அஞ்சினால், அவர் (கணவருக்கு) ஏதெனும் ஈடாகக் கொடுத்துப் பிரிந்து விடுவதில் குற்றமில்லை. (அல்பகரா: 229)

சாபித் பின் கைஸ் என்பவரின் மனைவி நபி (ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! சாபித் பின் கைஸின் மார்க்கத்திலோ அவரின் குணங்களிலோ குறை காணவில்லை என்றாலும் இஸ்லாத்தில் நிராகரிப்பை வெறுக்கிறேன் என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அவர் மஹராகக் கொடுத்த தோட்டத்தை திருப்பிக் கொடுப்பீரா?" எனக் கேட்டார்கள். ஆம் என அப்பெண் பதிலளித்தார்கள். பின்பு நபி (ஸல்) அவர்கள் அத்தோட்டத்தை திருப்பி பெற்றுக்கொண்டு அப்பெண்ணை விவாகரத்துச் செய்யுமாறு சாபித் பின் கைஸ் என்பவரை பணித்தார்கள்.
அறிவிப்பாளர் : இப்னு அப்பாஸ் (ரலி) ஆதாரம் : புஹாரி 5273.

திருமணம் என்பது கணவன், மனைவி இரண்டுபேருக்கு மத்தியில் இணைப்பை ஏற்படுத்துவது பொதுவாக அறிந்த ஒன்றே. இதனால்தான் அவ்விரண்டு பேருக்கும் மத்தியில் கருணை, பரஸ்பரம் அன்பு போன்றவைக்கு அடிப்படையாக திருமணத்தை இறைவன் வைத்துள்ளான். எனவே ஒரு பெண் தன் கணவனின் மார்க்கக் குறைவை நினைத்து அல்லது அவளின் உரிமைகளை நிறைவேற்றாமல் இருப்பதை அஞ்சினால் தனக்கு மஹராக கொடுக்கப்பட்டதை திருப்பிக் கொடுத்து விட்டு அந்தக் கணவனை விட்டும் பிரிந்து கொள்வதை இஸ்லாம் அனுமதிக்கிறது. எக்காரணமும் இல்லாமல் தன் கணவனை விவாகரத்து செய்வது வெறுக்கத்தக்க செயலாகும். இன்னும் சில உலமாக்கள் ஹராம் என்றே கூறுகின்றனர். பின்வரும் நபிமொழிக்கு ஏற்ப இதை கூறுகின்றனர். "எந்தவொரு பெண் தன் கணவனிடம் எக்காரணமும் இன்றி விவாகரத்தை வேண்டினால் அவள் மீது சுவர்க்கத்தின் வாடை ஹராம்" என்று நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்.
அறிவிப்பவர் : ஸௌபான் (ரலி).
ஆதாரம் : அபூ தாவூத் 2228, திர்மிதீ 1187.

# மீட்டல்

மீட்டல் என்பது : மூன்று தலாக் சொல்லப்படாத பெண்ணை அவளுடைய இத்தாவுடைய காலம் முடிவதற்குள் எந்த உடன்படிக்கையும் இல்லாமல் மீண்டும் மீட்டிக் கொள்வதைக் குறிக்கும்.

﴿وَبُعُولَتُهُنَّ أَحَقُّ بِرَدِّهِنَّ فِي ذَٰلِكَ إِنْ أَرَادُوٓاْ إِصْلَٰحًا﴾ ال بقرة: ٢٢٨

பெண்களின் கணவர்கள் (அவர்களைத் திரும்ப அழைத்துக் கொள்வதன் மூலம்) இணக்கத்தை நாடினால், (அத்தவணைக்குள்) அவர்களை (மனைவியராக)த் திருப்பிக் கொள்ள அவர்களுக்கு அதிக உரிமையுண்டு. (அல்பகரா : 228)

இப்னு உமர் (ரலி) அவர்கள் தனது மனைவியை (மாதவிடாய்க் காலத்தில்) தலாக் சென்ன போது "அவா் மீண்டு அவளுடன் இணையுமாரு அவருக்கு ஏவுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவா் : இப்னு உமா் (ரலி).
ஆதாரம் : புஹாரி 5252, முஸ்லிம் 1471.

## மீட்டல் ஆகுமாக்கப்பட்டதன் நோக்கம் :

தலாக் சொல்லி மீண்டும் சேர்ந்து கொள்ள நாடி, கைசேதமடையும் ஒருவருக்கு கொடுக்கப்பட்ட ஒரு சலுகையாகும்.

## அதன் நிபந்தனைகள் :

1. மூன்றுக்குக் குறைவானதாக தலாக் அமைந்திருக்க வேண்டும்.
2. தலாக் சொல்லப்படும் பெண் கணவனோடு உறவு கொள்ளப்பட்டவளாக இருத்தல்.
3. மீட்டி எடுத்தல் குறிப்பிட்ட இத்தாவுக்குள் இருக்க வேண்டும்.
4. ஆகுமான திருமணமாக இருத்தல்.
5. பெண் தரப்பிலிருந்து ஏற்படாமல் இருத்தல் (குல்உ)
6. காரணங்களை, நிபந்தனைகளை ஒட்டி இல்லாதலிருத்தல்.

## பொதுவான குறிப்புகள் :

1. தலாக் சொல்லுதல் மொழியப்பட்டதாகவோ அல்லது எழுதப்பட்டதாகவோ இருப்பதோடு ஊமையாக இருப்பின் சைக்கினை மூலம் சொல்லப்பட வேண்டும்.
2. இவ்வாறு செய்தால் தலாக் என்று காரணங்கள், நிபந்தனைகள் இருப்பது அனுமதிக்கப்படட்டது.
3. இத்தாவில் இருக்கும் காலமெல்லாம் திருமணம் செல்லுபடியானதாகவே இருக்கும். (இத்தா முடியும் வரை)
4. மனைவியை மீட்டும் போது சாட்சி இருப்பது விரும்பத்தக்கதாகும்.

# வியாபாரம்

இறைவன் கூறுகின்றான் :

﴿وَأَحَلَّ ٱللَّهُ ٱلْبَيْعَ وَحَرَّمَ ٱلرِّبَوٰا۟﴾ ال بقرة: ٢٧٥

அல்லாஹ் வியாபாரத்தை ஆகுமாக்கி, வட்டியைத் தடை செய்துள்ளான். (அல்பகரா : 275).

நபி (ஸல்) அவர்களிடம் சம்பாத்தியங்களில் எது சிறந்தது? எனக் கேட்கப்பட்டது. நபியவர்கள் கூறினார்கள் : ஒரு மனிதன் தனது கையால் சம்பாதிப்பதும், ஏற்றுக் கொள்ளப்பட்ட அனைத்து வியாபாரங்களும்.

அறிவிப்பவர் : ரிபாஅத் பின் ராபிஃ (ரலி).

ஆதாரம் : ஹாகிம், பஸ்ஸார்.

வரைவிலக்கணம் :

அகராதியில் : ஒன்றை கொடுத்து ஒன்றை எடுப்பதாகும்.

இஸ்லாமிய மார்க்கத்தில் : உரிமையாக்கிக் கொள்ளும் நோக்கத்தில் சொத்துக்களைப் பரிமாற்றம் செய்து கொள்வதாகும்.

வியாபார ஒப்பந்த முறைகள் :

1. சொல் ரீதியானது.
2. செயல் ரீதியானது.
3. சொல்லும் செயலும் கலந்தது.

வியாபாரத்தின் நிபந்தனைகள் :

1. இரு தரப்பிலும் பொருத்தம் இருக்க வேண்டும்.
2. இரு தரப்பினரும் கொடுக்கல் வாங்கல் செய்ய அனுமதிக்கப்பட்டவர்களாக இருத்தல் வேண்டும்.
3. பொருளும் பணமும் இரு தரப்பினருக்கும் சொந்தமானதாக இருக்க வேண்டும். இன்னொருவருடைய பொருளை அவருடைய அனுமதியின்றி விற்கவோ வாங்கவோ முடியாது.
4. விற்கப்படும் பொருள் பயனடைய முடியுமமானதாக இருத்தல் வேண்டும்.
5. விற்கப்படும் பொருள் வாடிக்கையாளரிடம் கையளிக்க முடியுமானதாக இருத்தல் வேண்டும். ஒரு மிருகத்தின் வயிற்றில் வளரும் குட்டியை விற்க முடியாது.
6. விற்கப்படும் பொருளும் அதன் பெறுமதியும் அறியப்பட்டிருக்க வேண்டும்.

தடை செய்யப்பட்ட வியாபார முறைகள் :

1. தனது சகோதரருக்கு எதிராக வியாபாரம் செய்தல்.
2. ஒரு வியாபாரத்துக்குள் இரு ஒப்பந்தங்கள் செய்தல்.
3. வாங்கும் நோக்கமின்றி விலை அதிகப்படுத்திக் கேட்டல். இதன் மூலம் வாடிக்கையாளரை ஏமாற்றி அதிகவிலைக்கு விற்க முடியும்.

4. வெளியூர்களிலிருந்து வியாபாரக் கூட்டங்கள் ஊருக்குள் நுழையமுன் அவர்களிடம் ஏனையோருக்குத் தீங்கிழைக்குமுகமாக பொருட்களை வாங்குதல்.
5. அளந்து அல்லது நிறுத்து விற்கப்படும் பொருளை வாடிக்கையாளர் கையிலெடுப்பதற்கு முன் அவர் இன்னொருவருக்கு அதே பொருளை விற்றல்.
6. தவணை அடிப்படையில் குறிப்பிட்ட விலைக்கு ஒரு பொருளை விற்றுவிட்டு அவரிடமிருந்தே அதே பொருளை உடனடியாகப் பணம் கொடுத்து குறைந்த விலைக்கு வாங்குதல். இதனை ஈனா.ஃ. என்று கூறப்படும். இது கூடாத வியாபார முறையாகும்.
7. இமாம் வெள்ளிக்கிழமை குத்பாவை ஆரம்பிக்க அதான் சொல்லப்பட்டால் அதன் பின் வியாபாரம் செய்தல் கூடாது.
8. நகரவாசி கிராமவாசிக்கு பொருளின் பெறுமதியை மறைத்து ஏமாற்றி விற்றல்.

**எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே**

بسم الله الرحمن الرحيم

# தஃவா

# 4

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)

மீள்பரிசீலனை : எம். அஹ்மத் (அப்பாஸி)

# الدعوة

# 4

ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد


المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | த.ஃவா, தாஈ என்பதன் விளக்கம் - த.ஃவாவின்பால் மக்களின் தேவைப்பாடு – த.ஃவா இறைத்தூதர்களின் பணி | 45 நிமிடங்கள் |
| 2 | த.ஃவாவின் சிறப்பு | 45 நிமிடங்கள் |
| 3 | அழைப்பாளர்களின் மேன்மைகளும் சிறப்புக்களும் (1) | 45 நிமிடங்கள் |
| 4 | அழைப்பாளர்களின் மேன்மைகளும் சிறப்புக்களும் (2) | 45 நிமிடங்கள் |
| 5 | ஒரு தாஈயின் பிரதான பொறுப்பும் பணியும் | 45 நிமிடங்கள் |
| 6 | அல்லாஹ்வின்பால் அழைப்பு விடுப்பதற்கான நிபந்தனைகள் | 45 நிமிடங்கள் |
| 7 | தற்கால அழைப்புப் பணியின் முறைமைகள் | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | நபிமார்களின் த.ஃவாப் பணியிலுள்ள சிறப்பியல்புகள் | 45 நிமிடங்கள் |
| 10 | மறுதரப்பின் மனநிலைகளைக் கவனத்திற் கொள்ளல் -<br>அழைப்புப் பணியின் அடிப்படைகள் 1 , 2 | 45 நிமிடங்கள் |
| 11 | அழைப்புப் பணியின் அடிப்படைகள் 3 , 4 , 5 | 45 நிமிடங்கள் |
| 12 | அழைப்புப் பணியின் அடிப்படைகள் 6 , 7 , 8 | 45 நிமிடங்கள் |
| 13 | அழைப்பாளருக்குத் தேவையான சாதனங்கள் 1, 2, 3, 4 , 5 | 45 நிமிடங்கள் |
| 14 | அழைப்பாளருக்குத் தேவையான சாதனங்கள் 6 , 7 , 8 , 9 | 45 நிமிடங்கள் |
| 15 | நவீன தொழில் நுட்பங்களை த.ஃவாப் பணியில் சேர்த்துக்கொள்ளல் | 45 நிமிடங்கள் |

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்;

**த.்.வா என்ற சொல்லின் விளக்கம் :** த.்.வா எனும் அரபு வார்த்தையின் அர்த்தம் பரத்துதல், எத்திவைத்தல் என்பதாகும். தாயீ என்பது நன்மையின் பக்கம் அழைப்பு விடுக்கும் மனிதனை குறிக்கும் சொல். (அழைப்பாளர்)

## அழைப்புப்பணியின் அவசியம்

மனிதர்கள், தேசத்தால், நிறத்தால், காலத்தால், ஆற்றலினால், உடல் அமைப்பினால் வித்தியாசமானவர்களாக இருப்பினும் அவர்கள் எல்லோருமே இஸ்லாமிய அழைப்பின் பக்கமும், வாழ்க்கையில் மனிதனுக்கு இறைவனோடுள்ள தொடர்பையும், படைப்புகளோடுள்ள தொடர்பையும் ஒழுங்குபடுத்தி வழங்கக்கூடிய உறுதியான இறை மார்க்கத்தின் பக்கமும் தேவையுள்ளவர்களாக இருக்கின்றனர்.

இஸ்லாம் என்பது ஒரு வாழ்கைத்திட்டம். அதனை அவ்வாறுதான் புரிந்து செயல்படுத்தவேண்டும். உலகம், உலகவாழ்வு, மனிதன் என்பவைக்கான சரியான கருத்து யாது? என்பதை தெளிவுபடுத்துமொரு சித்தாந்தமே இஸ்லாம். மேலும் மனிதனுக்கு அவன் படைக்கப்பட்ட காரணம் யாது? என்பதை அது விளக்குகின்றது. வாழ்வில் நீதி செலுத்தும் சட்டம், ஒழுங்கு என்பதும், இஸ்லாத்தின் அதன் கொள்கையை அடிப்படையாகக் கொண்டே அமைந்துள்ளது.

இஸ்லாம் வாழ்வின் அனைத்து பகுதிகளையும் உள்ளடக்கும் பூரணத்திட்டம். பிரச்சாரம், கற்றல், கற்பித்தல் என்பவற்றின் மூலமே இந்த உண்மையை அறிய முடியும். இங்குதான் அழைப்புப் பணியின் முக்கியத்துவம் அறியப்படுகிறது. உணவு, காற்று, நீர், வைத்தியம், ஆகியன எந்தளவு அவசியமோ அதேபான்று இந்த அழைப்புப்பணியும் மிகவும் அவசியமான ஒன்று என்பதனை அறியமுடிகிறது.

## அழைப்புப்பணி இறைதூதர்கள் மேற்கொண்ட வேலை

அனைத்து படைப்புகளும் அதற்கென ஏற்படுத்தப்பட்ட கடமையை நிறைவேற்றவே படைக்கப்பட்டுள்ளன. இவ்வுலக வாழ்வில் இறைவனின் நாட்டத்திற்கேற்பவும், பிரமாண்டமான இவ்வுலக அமைப்பிற்கேற்பவும் தன் பணியை, பொறுப்பை நிறைவேற்றவே அவை படைக்கப்பட்டுள்ளன. மனிதர்களுக்காக இறை தூதர்கள் ஆற்றவேண்டிய கடமைகள் பொறுப்புக்கள் என்பவற்றில் பிரதானமானவை அல்லாஹ்வின் பக்கம் மக்களை அழைத்து, சுவனத்தை நன்மாராயம் கூறி, நரகத்தை அச்சமூட்டுவதாகும். அல்லாஹ் ஒருவரை நபியாக தெரிவுசெய்து அனுப்புவதன் நோக்கமே மாபெரும் தூதை பொறுப்பேற்று மக்களுக்கு அதனை அவர் எத்திவைக்கவேண்டும் என்பதற்காகவே. இதனை அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَّسُولًا أَنِ اعْبُدُوا اللَّهَ وَاجْتَنِبُوا الطَّاغُوتَ﴾ النحل: ٣٦

மெய்யாகவே நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும், ""அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள் ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்"" என்று (போதிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம் (16:36)

மேலும் எமது தூதர் முஹம்மத்(ஸல்) அவர்கள் பற்றி கூறுகையில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ إِنَّآ أَرۡسَلۡنَٰكَ شَٰهِدٗا وَمُبَشِّرٗا وَنَذِيرٗا ۝٤٥ وَدَاعِيًا إِلَى ٱللَّهِ بِإِذۡنِهِۦ وَسِرَاجٗا مُّنِيرٗا﴾ الأحزاب: ٤٥ - ٤٦

நபியே! நாம் நிச்சயமாக உம்மைச் சாட்சியாகவும் நன்மாராயங் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிப்பவராகவும் அனுப்பியுள்ளோம். இன்னும் அல்லாஹ்வின் பால் (மனிதர்களை) – அவன் அனுமதிப்படி - அழைப்பவராகவும் பிரகாசிக்கும் விளக்காகவும் (உம்மை அனுப்பியுள்ளோம்)(33: 45,46)

## அழைப்புப்பணியின் சிறப்பு

அல்லாஹ்வின் பக்கம் அழைப்பது மிக உயர்ந்த சிறப்புமிக்க ஒரு பணியாகும், ஏனெனில் அழைப்புப் பணி, படைப்புக்களில் எல்லோரையும் விட மிகச் சிறந்த படைப்பாகவும், அல்லாஹ்விற்கு மிக நெருக்கமானவர்களாகவும், அவனிடம் சங்கைமிக்கவர்களாகவும் இருக்கின்ற நபிமார்கள் மேற்கொண்ட பணியாக உள்ளது. மேலும் நபிமார்களின் பிரதிநிதகள் மேற்கொண்ட பணி. சத்தியத்தின் பக்கம் மக்களுக்கு வழிகாட்டி, நல்ல காரியத்தில் அவர்களுக்கு விருப்பத்தை ஏற்படுத்தி இருளில் இருந்த அவர்களை பிரகாசத்திலும், அறிவிலும், ஈமானிலும் மிளிரச்செய்த மார்க்க அறிஞர்களான உலமாக்கள் செய்த பணி. இதன் சிறப்பினை அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿وَمَنۡ أَحۡسَنُ قَوۡلٗا مِّمَّن دَعَآ إِلَى ٱللَّهِ وَعَمِلَ صَٰلِحٗا وَقَالَ إِنَّنِي مِنَ ٱلۡمُسۡلِمِينَ﴾ فصلت: ٣٣

'எவர் அல்லாஹ்வின் பக்கம் (மக்களை) அழைத்து, ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து, நிச்சயமாக நான் (அல்லாஹ்விற்கு முற்றிலும் வழிபட்ட) முஸ்லிம்களில் நின்றும் உள்ளவன் என்று கூறுகின்றாரோ, அவரைவிட சொல்லால் அழகியவர் யார்?"" (இருக்கின்றார்?) (41:33).

உண்மையில் த.ஃ.வாப் பணி மிக சிறப்பான, முக்கியமான ஒரு வணக்கமாகவும் உள்ளது. ஏனெனில் அதன் பிரதிபலன் மக்களுக்கு நேர்வழி காட்டுவதே. நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நன்மையொன்றின் பக்கம் மற்றவரை அழைக்கும் மனிதனுக்கு அதனை பின்பற்றுபவருக்கு வழங்கப்படும் நன்மைக்கு சமமான நன்மை வழங்கப்படும். அது பின்பற்றுபவரின் கூலியில் எக்குறையும் ஏற்படுத்தாது. (முஸ்லிம் 2674)

நன்மையை ஏவி தீமையை தடுக்கும் பணியினை மேற்கொள்ளும் மக்களை அல்லாஹ் புகழ்ந்து கூறுகிறான்:

﴿ٱلتَّٰٓئِبُونَ ٱلۡعَٰبِدُونَ ٱلۡحَٰمِدُونَ ٱلسَّٰٓئِحُونَ ٱلرَّٰكِعُونَ ٱلسَّٰجِدُونَ ٱلۡأٓمِرُونَ بِٱلۡمَعۡرُوفِ وَٱلنَّاهُونَ عَنِ ٱلۡمُنكَرِ وَٱلۡحَٰفِظُونَ لِحُدُودِ ٱللَّهِۗ وَبَشِّرِ ٱلۡمُؤۡمِنِينَ﴾ التوبة: ١١٢

மன்னிப்புக்கோரி மீண்டவர்கள், (அவனை) வணங்குபவர்கள், (அவனைப்) புகழ்பவர்கள், நோன்பு நோற்பவர்கள், ருகூ.ஃ. செய்பவர்கள், ஸுஜூது செய்பவர்கள் (தொழுபவர்கள்), நன்மை செய்ய ஏவுபவர்கள், தீமையை விட்டுவிலக்குபவர்கள், அல்லாஹ்வின் வரம்புகளைப் பேணிப்பாதுகாப்பவர்கள் - இத்தகைய (உண்மை) மு.ஃ.மின்களுக்கு (நபியே) நீர் நன்மாராயம் கூறுவீராக! 9:112

மேலும் கூறுகின்றான் :

﴿ٱلَّذِينَ إِن مَّكَّنَّٰهُمْ فِى ٱلْأَرْضِ أَقَامُوا۟ ٱلصَّلَوٰةَ وَءَاتَوُا۟ ٱلزَّكَوٰةَ وَأَمَرُوا۟ بِٱلْمَعْرُوفِ وَنَهَوْا۟ عَنِ ٱلْمُنكَرِ﴾ الحج: ٤١

அன்றியும், இவர்கள் (எத்தகையோரென்றால்) இவர்களுக்கு நாம் பூமியில் இடம்பாடாக்கிக் கொடுத்தால், இவர்கள் தொழுகையை முறையாகக் கடைப்பிடிப்பார்கள் ஜகாத்தும் கொடுப்பார்கள் நன்மையான காரியங்களைச் செய்யவும் ஏவுவார்கள் தீமையை விட்டும் விலக்குவார்கள் - மேலும், சகல காரியங்களின் முடிவும் அல்லாஹ்விடமே இருக்கிறது. (அல் ஹஜ் : 41)

அறிஞர்கள் கூறுகின்றார்கள் : அல்லாஹ் யாருக்கெல்லாம் பூமியில் ஒரு சாணளவேனும் இடமமைத்துக் கொடுத்தானோ அவர்களில் வாய்ப்பும் ஆற்றலும் சக்தியும் உள்ளவர்களே இவ்வசனத்தின் மூலம் நாடப்பட்டவர்களாவர். பூமியில் எப்பகுதியிலேனும் அல்லாஹ் ஒருவருக்கு வாய்ப்பை வழங்கி நன்மையை ஏவி தீமையை தடுக்கும் சக்கியையும் கொடுத்திருந்தால் அவர் மீது கையினாலோ அல்லது நாவினாலோ அல்லது உள்ளத்தாலோ தடுக்கும் பொறுப்புள்ளது. பின்பு அதனை மேற்கொள்ளாவிட்டால் அவர் குற்றவாளியாவார். மு.ஃ.மின்களின் பண்பை அல்லாஹ் பின் வறுமாறு விபரிக்கின்றான் :

﴿وَٱلْمُؤْمِنُونَ وَٱلْمُؤْمِنَٰتُ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ ۚ يَأْمُرُونَ بِٱلْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ ٱلْمُنكَرِ وَيُقِيمُونَ ٱلصَّلَوٰةَ وَيُؤْتُونَ ٱلزَّكَوٰةَ وَيُطِيعُونَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ ۚ أُو۟لَٰٓئِكَ سَيَرْحَمُهُمُ ٱللَّهُ ۗ إِنَّ ٱللَّهَ عَزِيزٌ حَكِيمٌ﴾ التوبة: ٧١

மு.ஃ.மினான ஆண்களும் மு.ஃ.மினான பெண்களும் ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாக இருக்கின்றனர் அவர்கள் நல்லதைச் செய்ய தூண்டுகிறார்கள் தீயதை விட்டும் விலக்குகிறார்கள் தொழுகையைக் கடைப்படிக்கிறார்கள் (ஏழை வரியாகிய) ஜகாத்தை (முறையாகக்) கொடுத்துவருகிறார்கள் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் வழிப் படுகிறார்கள் அவர்களுக்கு அல்லாஹ் சீக்கிரத்தில் கருணை புரிவான் - நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். (அத்தௌபா : 71)

மறுபுறத்தில் நயவஞ்கர்களை அல்லாஹ் சாடுகின்றான். மு.ஃ.மின்களை வர்ணித்த விதத்திற்கு எதிராகவே இவர்களை வர்ணித்துள்ளான்.

﴿ٱلْمُنَٰفِقُونَ وَٱلْمُنَٰفِقَٰتُ بَعْضُهُم مِّنۢ بَعْضٍ ۚ يَأْمُرُونَ بِٱلْمُنكَرِ وَيَنْهَوْنَ عَنِ ٱلْمَعْرُوفِ﴾ التوبة: ٦٧

நயவஞ்சகர்களான ஆடவரும், நயவஞ்சகர்களான பெண்டிரும் அவர்களில் சிலர் சிலரைச் சேர்ந்தவர்கள், அவர்கள் பாவங்களை தூண்டி, நன்மைகளை விட்டும் தடுப்பார்கள். (அத்தௌபா : 67). நலவை ஏவித் தீமையைத் தடுப்பதை அல்லாஹ் மு.ஃ.மின்களையும் முனாபிக்குகளையும் வேறுபிரித்தரியும் அளவுகோலாக வைத்துள்ளான்.

**அழைப்புப் பணி மேற்கொண்டு நலவை ஏவித் தீமையைத் தடுப்பதில்தான் சமூகத்தின் பாதுகாப்புள்ளது :**

ஒரு சமூகத்தின் பாதுகாப்பை அல்லாஹ் இவ்வழைப்புப் பணியை மேற்கொள்வதில்தான் வைத்துள்ளான். இது பற்றிஅ வன் பின்வருமாறு கூறுகின்றான் :

﴿ فَلَمَّا نَسُواْ مَا ذُكِّرُواْ بِهِۦٓ أَنجَيۡنَا ٱلَّذِينَ يَنۡهَوۡنَ عَنِ ٱلسُّوٓءِ وَأَخَذۡنَا ٱلَّذِينَ ظَلَمُواْ بِعَذَابِۭ بَـِٔيسِۭ بِمَا كَانُواْ يَفۡسُقُونَ ﴾
الأعراف: ١٦٥

அவர்கள் எது குறித்து உபதேசிக்கப் பட்டார்களோ, அதனை அவர்கள் மறந்து விட்டபோது, அவர்களைத் தீமையைவிட்டு விலக்கிக் கொண்டிருந்தவர்களை நாம் காப்பாற்றினோம் வரம்பு மீறி அக்கிரமம் செய்து கொண்டிருந்தவர்களுக்கு, அவர்கள் செய்து வந்த பாவத்தின் காரணமாக கடுமையான வேதனையைக் கொடுத்தோம். (அ∴ராப் : 165). தீமையைத் தடுத்ததன் காரணமாகவே அவர்கள் காப்பாற்றப்பட்டதைத் தெளிவுபடுத்துகின்றான்.

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக நு∴மான் பின் பஷீர் (ரலி) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்வின் (சட்ட) வரம்புகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவனுக்கும் அவற்றை மீறி நடப்பவனுக்கும் உவமை - ஒரு சமுதாயத்தைப் போன்றதாகும். அவர்கள் கப்பலில் (தங்களுக்கு இடம் பிடிப்பதற்காகச்) சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். (அதன்படி) அவர்களில் சிலருக்குக் கப்பலின் மேல் தளத்திலும் சிலருக்கு மேல்த் தளத்திலும் இடம் கிடைத்தது. கீழ்த் தளத்தில் இருந்தவர்களுக்குத் தண்ணீர் தேவைப்பட்டபோது (அதைக் கொண்டு வர) அவர்கள் மேல் தளத்தில் இருப்பவர்களைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. (அதனால் மேலே இருந்தவர்களுக்குச் சிரமம் ஏற்பட்டது). அப்போது, கீழ்த் தளத்தில் இருந்தவர்கள் (தமக்குள்) "நாம் (தண்ணீருக்காக) நம்முடைய பங்கில் (கீழ்த் தளத்தில்) ஓட்டையிட்டுக் கொள்வோம் நமக்கு மேலே இருப்பவர்களைத் தொந்தரவு செய்யாமலிருப்போம்" என்று பேசிக் கொண்டார்கள். அவர்கள் விரும்பியபடி செய்து கொள்ள அவர்களை மேல் தளத்தில் உள்ளவர்கள் விட்டுவிட்டால் (கப்பலில் இருப்பவர்கள்) அனைவரும் அழிந்து போவார்கள். (ஓட்டையிட விடாமல்) அவர்களின் கரத்தைப் பிடித்துக் கொள்வார்களாயின் அவர்களும் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள். (அவர்களுடன் மற்ற) அனைவரும் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள். (புஹாரி 2493).

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள் : பனூ இஸ்ரவேலர்களில் ஏற்பட்ட முதலாவது சரிவு என்னவெனில், ஒருவர் மற்றவர் செய்யும் தீமையைப் பார்த்து நீர் அல்லாஹ்வை அஞ்சிக் கொள், நீ செய்யும் இச்செயலை விட்டுவிடு. இது உனக்கு ஆகாதது எனக் கூறுவார். மறுதினம் அதே மனிதரை அதே தீமையுடன் இவர் சந்தித்தார், அத்தீமையைத் தடுக்காமல் இவரும் அந்நபருடன் சேர்ந்து உண்டு, குடித்து, அமர்ந்து கொள்வார். அவ்வாறு அவர்கள் செய்ததும் அல்லாஹ் அவர்கள் அனைவருடைய உள்ளங்களையும் ஒன்றுபோல் வன்நெஞ்சம் கொண்டதாக ஆக்கி விட்டான். பின்பு பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள் :

﴿ لُعِنَ ٱلَّذِينَ كَفَرُواْ مِنۢ بَنِيٓ إِسۡرَٰٓءِيلَ عَلَىٰ لِسَانِ دَاوُۥدَ وَعِيسَى ٱبۡنِ مَرۡيَمَۚ ذَٰلِكَ بِمَا عَصَواْ وَّكَانُواْ يَعۡتَدُونَ ٧٨ كَانُواْ لَا يَتَنَاهَوۡنَ عَن مُّنكَرٖ فَعَلُوهُۚ لَبِئۡسَ مَا كَانُواْ يَفۡعَلُونَ ٧٩ تَرَىٰ كَثِيرٗا مِّنۡهُمۡ يَتَوَلَّوۡنَ ٱلَّذِينَ كَفَرُواْۚ لَبِئۡسَ مَا قَدَّمَتۡ لَهُمۡ أَنفُسُهُمۡ أَن سَخِطَ ٱللَّهُ عَلَيۡهِمۡ وَفِي ٱلۡعَذَابِ هُمۡ خَٰلِدُونَ ٨٠ وَلَوۡ كَانُواْ يُؤۡمِنُونَ بِٱللَّهِ وَٱلنَّبِيِّ وَمَآ أُنزِلَ إِلَيۡهِ مَا ٱتَّخَذُوهُمۡ أَوۡلِيَآءَ وَلَٰكِنَّ كَثِيرٗا مِّنۡهُمۡ فَٰسِقُونَ ﴾

المائدة: ٧٨ - ٨١

இஸ்ராயீலின் சந்ததிகளிலிருந்து, கா∴பிராகி விட்டவர்கள், தாவூது, மர்யமின் குமாரர் ஈஸா ஆகிய இவர்களின் நாவால் சபிக்கப்பட்டுள்ளனர். ஏனென்றால் அவர்கள் (இறைவனின் கட்டளைக்கு) மாறு செய்து கொண்டும், வரம்பு மீறி நடந்து கொண்டும் இருந்தார்கள்.

இன்னும் தாம் செய்து கொண்டிருந்த தீய காரியங்களைவிட்டு ஒருவரையொருவர் தடுப்போராகவும் அவர்கள் இருக்கவில்லை. அவர்கள் செய்து கொண்டிருந்தவையெல்லாம் நிச்சயமாக மிகவும் தீயவையாகும்.

(நபியே!) அவர்களில் அநேகர் கா∴பிர்களையே உற்ற நண்பர்களாகக் கொண்டிருப்பதை நீர் காண்பீர். அவர்கள் தமக்காக முற்கூட்டியே அனுப்பிவைத்தது நிச்சயமாக கெட்டதேயாகும். ஏனெனில் அல்லாஹ்வின் கோபம் அவர்கள் மீதுள்ளது. மேலும் வேதனையில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள்.

அவர்கள் அல்லாஹ்வின் மீதும் நபியின் மீதும், அவர் மீது இறக்கப்பட்ட (வேதத்)தின் மீதும் நம்பிக்கை கொண்டிருந்தார்களானால், அவர்கள், கா∴பிர்களைத் (தங்களின்) உற்ற நண்பர்களாக ஆக்கிக் கொண்டிருக்கமாட்டார்கள். ஆனால் அவர்களில் அநேகர் பாவிகளாகவே இருக்கின்றனர். (அல் மாஇதா : 78 - 81)

பின்பு நபியவர்கள் கூறினார்கள் : விடயம் அவ்வாறல்ல. அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் நன்மையை ஏவித் தீமையைத் தடுப்பீர்கள். அநியாயக்கரனக்கு எதிராக நிற்பீர்கள். அவனை சத்தியத்தின் பால் கொண்டுவருவீர்கள். சத்தியத்திலெயே அவனைத் தடுத்து வைப்பீர்கள். அவ்வாறு நீங்கள் செய்யாவிட்டால் உங்கள் அனைவருடைய உள்ளங்களையும் ஒன்றுபோல் வன்நெஞ்சம் கொண்டதாக ஆக்கி விடுவான். பின் அந்த பனூ இஸ்ரவேலர்களை அவன் சபித்தது போல் உங்களையும் சபித்து விடுவான். (அபூ தாவூத் 4336, திர்மிதீ 3048).

## அழைப்பாளர்களின் மேன்மைகளும் சிறப்புக்களும்

அல்குர்ஆனிலும் ஸுன்னாவிலும் அழைப்பாளர்களை கண்ணியப்படுத்தும் விதத்தையும், அவர்களது தரத்தை உயர்த்துவதையும், சிறப்புக்களை சுட்டிக்காட்டுவதையும் எடுத்து நோக்கினால் அவை எண்ணிலடங்காதவையாக இருப்பதை அவதானிக்கலாம். அவற்றில் சில :

1- அழைப்பாளர்கள்தான் மானிடரில் சிறந்தவர்கள். இறைவன் கூறுகின்றான் :

﴿كُنتُمْ خَيْرَ أُمَّةٍ أُخْرِجَتْ لِلنَّاسِ تَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَتَنْهَوْنَ عَنِ الْمُنكَرِ وَتُؤْمِنُونَ بِاللَّهِ﴾ آل عمران: ١١٠

மனிதர்களுக்காக தோற்றுவிக்கப்பட்ட (சமுதாயத்தில்) சிறந்த சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள் (ஏனெனில்) நீங்கள் நல்லதைச் செய்ய ஏவுகிறீர்கள் தீயதை விட்டும் விலக்குகிறீர்கள். இன்னும் அல்லாஹ்வின்மேல் (திடமாக) நம்பிக்கை கொள்கிறீர்கள். (ஆல இம்ரான் : 110).

2- அழைப்பாளர்கள்தான் மக்களுக்கு சாட்சியாக இருப்பார்கள். இறைவன் கூறுகின்றான் :

﴿وَكَذَٰلِكَ جَعَلْنَاكُمْ أُمَّةً وَسَطًا لِّتَكُونُوا شُهَدَاءَ عَلَى النَّاسِ وَيَكُونَ الرَّسُولُ عَلَيْكُمْ شَهِيدًا﴾ البقرة: ١٤٣

இதே முறையில் நாம் உங்களை ஒரு நடு நிலையுள்ள உம்மத்தாக (சமுதாயமாக) ஆக்கியுள்ளோம். (அப்படி ஆக்கியது) நீங்கள் மற்ற மனிதர்களின் சாட்சியாளர்களாக இருப்பதற்காகவும், ரஸூல் (நம் தூதர்) உங்கள் சாட்சியாளராக இருப்பதற்காகவுமேயாகும். (அல்பகரா : 143).

3- ஈருலகிலும் வெற்றிபெற்றவர்கள் இந்த அழைப்பாளர்களே. இறைவன் கூறுகின்றான் :

﴿وَلْتَكُن مِّنكُمْ أُمَّةٌ يَدْعُونَ إِلَى الْخَيْرِ وَيَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ الْمُنكَرِ ۚ وَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ﴾ آل عمران: ١٠٤

மேலும், (மக்களை) நன்மையின் பக்கம் அழைப்பவர்களாகவும், நல்லதைக் கொண்டு (மக்களை) ஏவுபவர்களாகவும் தீயதிலிருந்து (மக்களை) விலக்குபவர்களாகவும் உங்களிலிருந்து ஒரு கூட்டத்தார் இருக்கட்டும் - இன்னும் அவர்களே வெற்றி பெற்றோராவர். (ஆல இம்ரான் : 104).

4- பேச்சாளர்களில் சிறந்தவர்கள் அல்லாஹ்வின்பால் அழைப்பு விடுப்பவர்களே. இறைவன் கூறுகின்றான் :

﴿وَمَنْ أَحْسَنُ قَوْلًا مِّمَّن دَعَا إِلَى اللَّهِ وَعَمِلَ صَالِحًا وَقَالَ إِنَّنِي مِنَ الْمُسْلِمِينَ﴾ فصلت: ٣٣

எவர் அல்லாஹ்வின் பக்கம் (மக்களை) அழைத்து, ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து ““நிச்சயமாக நான் (அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிபட்ட) முஸ்லிம்களில் நின்றும் உள்ளவன் என்று கூறுகின்றாரோ, அவரைவிட சொல்லால் அழகியவர் யார்?”” (இருக்கின்றார்?) (∴புஸ்ஸிலத் : 33).

5- அழைப்பாளர்கள் நபிமார்களின் வாரிஸுகளாவர். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : 'நிச்சயமாக மார்க்க அறிஞர்கள்நபிமார்களின் வாரிஸுகளாவர்' (அபூ தாவூத் 3641, திர்மிதீ 2682). அல்லாஹ்வின்பால் அழைப்பு விடுக்கும் உண்மையான மார்க்க அறிஞர்களும், அழைப்பாளர்களும் தமது அழைப்புப் பணியிலும், மக்களுக்கு நேர்வழி காட்டுவதிலும் நபி (ஸல்) அவர்கள் உட்பட நபிமார்களின் சுவடுகளையே பின்பற்றுகின்றனர்.

6- வானம் பூமியிலுள்ளவர்கள் அனைவரும் அழைப்பாளர்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுகின்றனர். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ உமாமா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள் : நிச்சயமாக அல்லாஹ்வும், அவனது வானவர்களும், வானங்கள் பூமியிலுள்ளவர்களும், தனது பொந்திலுள்ள எறும்பு, கடலிலுள்ள மீன்கள் உட்பட மக்களுக்கு நல்லவற்றைக் கற்பிப்பவர்கள் மீது ஸலவாத் சொல்கின்றனர். (திர்மிதீ 2685).

அல்லாஹ் அடியாருக்கு ஸலவாத் சொல்வதானது அவனுக்கு அருள் செய்வதாகும்.

வானவர்கள் அவனுக்காகப் பாவமன்னிப்புக் கேட்பதாகும்.

அடியார்கள் அவனுக்காகப் பிரார்த்திப்பதாகும்.

7- அழைப்பாளர்களின் கூலிகள் முடிவற்றது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : யார் நேர்வழியின்பால் அழைக்கின்றாரோ அவருக்கு அவரது அழைப்பை ஏற்றவர்களுடைய கூலிகளும் சேர்த்துக் கிடைக்கும். அதனால் அவர்களது கூலிகளில் எந்தவொன்றும் குறையமாட்டாது. (முஸ்லிம் 2674).

8- அழைப்பாளர் ஒருவரின் மூலம் இன்னொருவர் நேர்வழி பெறுவது இவ்வுலகம் அதிலுள்ள அனைத்தையும் விட இது அவருக்குச் சிறந்தது. நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களுக்குப் பின்வருமாறு கூறினார்கள் : அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உனது முயற்சியின் மூலம் அல்லாஹ் ஒருவனுக்கு நேர்வழி காட்டுவதானது உனக்கு உயர்ந்த ரக சிவப்பு ஒட்டகங்கள் கிடைப்பதை விடச் சிறந்தது. (புஹாரி 3009, முஸ்லிம் 2406).

மேற்கண்ட சிறப்பு ஒரு மனிதருக்கு நேர்வழி கிடைக்கக் காரணமாயிருக்கும் அழைப்பாளருக்குரியது. ஒரு கூட்டம் அல்லது ஒரு சமூகமே நேர்வழி பெற இவர் காரணமாயிருந்தால் அவருடைய கூலிகள் எவ்வாறிருக்கும்?.

## ஒரு தாஈயின் பிரதான பொறுப்பும் பணியும்

நபிமார்களோ அல்லது ஏனைய மனிதர்களோ மக்களின் உள்ளங்களில் நேர்வழியைத் திணிக்க முடியாது. அதேபோல் ஷைத்தானுக்கும் அவனது சுயவிருப்பத்தின் பிரகாரம் மனித உள்ளங்களில் வழிகேட்டை விதைக்க முடியாது. சத்தியத்தின்பால் அழைப்பவரும்தான் வழகேட்டின்பால் அழைப்பவரும்தான் அதற்குரிய வழியின்பக்கம்தான் அழைக்க முடியும். நேர்வழியோ வழகோடோ தெரிவு செய்யும் பொறுப்பு மனித விருப்பத்திலும் அல்லாஹ்வின் அனுகூலத்திலும்தான் தங்கியுள்ளது.

அழைப்பாளர்களின் கைவசமுள்ளது வழியைக் காட்டிக் கொடுப்பதுதான். அதற்கான பாக்கியத்தை வழங்குவது அல்லாஹ்விடத்தில்தான் உள்ளது. இறைவன் பின்வருமாறு கூறுகின்றான் :

﴿وَمَا عَلَى ٱلرَّسُولِ إِلَّا ٱلۡبَلَٰغُ ٱلۡمُبِينُ﴾ النور: ٥٤

இன்னும் (நம் தூதைத்) தெளிவாக எடுத்துரைப்பதைத் தவிர (வேறெதுவும் நம்) தூதர்மீது கடமையில்லை. (அந்நூர் : 54)

மேலும் கூறுகின்றான் :

﴿إِنَّكَ لَا تَهۡدِي مَنۡ أَحۡبَبۡتَ وَلَٰكِنَّ ٱللَّهَ يَهۡدِي مَن يَشَآءُۚ وَهُوَ أَعۡلَمُ بِٱلۡمُهۡتَدِينَ﴾ القصص: ٥٦

(நபியே!) நீர் நேசிப்பவர்களை(யெல்லாம்) நிச்சயமாக நேர்வழியில் செலுத்திவிட உம்மால் முடியாது ஆனால், அல்லாஹ் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான் - மேலும் நேர்வழி பெற்றவர்களை அவன் நன்கறிகிறான். (அல் கஸஸ் : 56)

மேலும் கூறுகின்றான் :

﴿إِن تَحۡرِصۡ عَلَىٰ هُدَىٰهُمۡ فَإِنَّ ٱللَّهَ لَا يَهۡدِي مَن يُضِلُّۖ وَمَا لَهُم مِّن نَّٰصِرِينَ﴾ النحل: ٣٧

(நபியே!) அவர்கள் நேர்வழி பெற்றிடவேண்டுமென்று நீர் பேராவல் கொண்ட போதிலும், அல்லாஹ் யாரை வழிதவற வைத்தானோ அத்தகையோரை நேர்வழியில் சேர்க்க மாட்டான் - இன்னும் அவர்களுக்கு உதவி செய்வோரும் எவருமில்லை. (அந்நஹ்ல் : 37).

மேலும் கூறுகின்றான் :

﴿وَمَآ أَكۡثَرُ ٱلنَّاسِ وَلَوۡ حَرَصۡتَ بِمُؤۡمِنِينَ﴾ يوسف: ١٠٣

ஆனால் நீர் எவ்வளவு அதிகமாக விரும்பினாலும் (அம்) மனிதர்களில் பெரும் பாலோர் (உம்மை நபி என) நம்பமாட்டார்கள். (யூஸுப் : 103)

மக்கள் தனது அழைப்பை செவிமடுப்பார்களா? இல்லையா? என்பதைப் பற்றியோ, இக்காலம் த∴வாவுக்குப் பொருந்துமா? இல்லையா? என்பதைப் பற்றியோ ஒரு அழைப்பாளர் சிந்திக்கத் தேவையில்லை. மாறாக அம்மக்களை வழிகேட்டிலிருந்தும் தோல்வியிலிருந்தும் நேர்வழியின்பாலும் வெற்றியின்பாலும் ஈர்ப்பதற்கான சகல வழிமுறைகளையும் கையாள்வதுபற்றித் தான் அவர் சிந்திக்க வேண்டும். அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ وَإِذْ قَالَتْ أُمَّةٌ مِّنْهُمْ لِمَ تَعِظُونَ قَوْمًا ٱللَّهُ مُهْلِكُهُمْ أَوْ مُعَذِّبُهُمْ عَذَابًا شَدِيدًا قَالُوا۟ مَعْذِرَةً إِلَىٰ رَبِّكُمْ وَلَعَلَّهُمْ يَتَّقُونَ ﴾ الأعراف: ١٦٤

(அவ்வூரிலிருந்த நல்லடியார் சிலர் அறிவுரை சொன்ன போது) அவர்களில் சிலர், ““அல்லாஹ் எவர்களை அழிக்கவோ, அல்லது கடினமான வேதனைக்குள்ளாக்கவோ நாடியிருக்கிறானோ, அந்த கூட்டத்தார்களுக்கு நீங்கள் ஏன் உபதேசம் செய்கிறீர்கள்?”” என்று கேட்டார்கள் அதற்கு (அந்த நல்லடியார்கள்) ““உங்கள் இறைவனிடம் (நம்) பொறுப்பிலிருந்து நீங்கி விடுவதற்காகவும் இன்னும் அவர்கள் (ஒருவேளை தாங்கள் செய்து வருவதிலிருந்து) விலகிவிடலாம் என்பதற்காகவும் (நாங்கள் உபதேசம் செய்கிறோம்)”” என்று கூறினார்கள். (அ.ஃ.ராப் : 164).

அல்லாஹ்வின் மீதும், அவனிடமிருந்து வரும் உதவியின் மீதும் நம்பிக்கை வைப்பது, முழுமையாக அவனுடைய அனுகூலம், ஆதரவின்பால் சாந்திருத்தல் ஆகியன பாரியளவில் ஒரு அழைப்பாளனிடத்தில் இருக்க வேண்டிய பண்புகள். அந்த உறுதிப்பாடுதான் அழைப்புப் பாதையில் முன்னோக்கும் எதிரிகளின் தடைகளையும் முட்டுக்கட்டைகளையும் முறியடித்து உறுதியாக நிக்கவும், ஏற்படும் துன்பங்களின் கண்ணீர்களைத் துடைக்கவும் பக்கபலமாக இருக்கின்றது. எதிரிகள் அழைப்புப் பாதையில் பல தடங்களை விதைப்பார்கள். தனது பாதைகளெல்லாம் அடைக்கப்பட்டு விட்டன, அவற்றைக் கிழித்துக் கொண்டு முன்னேறிச் செல்ல முடியதென்று தாஈ கருதக்கூடியளவு முட்டுக்கட்டைகள் வரும். உறுதிப்பாடுள்ள ஓர் அழைப்பாளன் இது போன்ற சந்தர்ப்பங்களில் அல்லாஹ்வுடைய உதவி தனக்கு பக்கபலமாக இருக்கும். அது எவ்வளவுதான் தடங்கள் வந்தாலும் தனது அழைப்புப்பணி முன்னேறிப் பரந்து செல்ல முழுமையான ஆதரவு தரும் என்று அவனது உள்ளம் உறுதியாக நம்பும். ஏனெனில் அல்லாஹ் இவனது வழிமுறையை சரியான பாதையாக, தான் விரும்பக் கூடிய பாதையாக் கொருந்திக் கொண்டவிட்டான். அந்த உறுதிப்பாட்டைத்தான் பின்வரும் வசனம் பறைசாற்றுகின்றது.

﴿ وَمَا لَنَآ أَلَّا نَتَوَكَّلَ عَلَى ٱللَّهِ وَقَدْ هَدَىٰنَا سُبُلَنَا ۚ وَلَنَصْبِرَنَّ عَلَىٰ مَآ ءَاذَيْتُمُونَا ۚ وَعَلَى ٱللَّهِ فَلْيَتَوَكَّلِ ٱلْمُتَوَكِّلُونَ ﴾ إبراهيم: ١٢

““அல்லாஹ்வின் மீதே நாங்கள் உறுதியான நம்பிக்கை கொள்ளாமலிருக்க எங்களுக்கென்ன (நேர்ந்தது)? நிச்சமயமாக அவன்தான், (நாங்கள் வெற்றி பெறும்) வழிகளையும் எங்களுக்கு காட்டினான் நீங்கள் எங்களுக்குக் கொடுக்கும் துன்பத்தை நிச்சயமாக பொறுத்துக் கொள்வோம் உறுதியாக நம்பிக்கை வைப்போர் அல்லாஹ்வின் மீதே உறுதியாக நம்பிக்கை வைக்கட்டும் (என்றும் கூறினார்கள்.)

## இறைமார்க்கத்தின்பால் ““த.்.வா”” அழைப்பு விடுப்பதற்கான நிபந்தனைகள்

1. நாம் அழைப்பு விடுக்கின்ற அந்த சத்திய மார்க்கத்தை மனத்தூய்மையுடன், உண்மையாக நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். இதுபற்றி அல்லாஹ் கூறுகையில்:

﴿ءَامَنَ ٱلرَّسُولُ بِمَآ أُنزِلَ إِلَيۡهِ مِن رَّبِّهِۦ وَٱلۡمُؤۡمِنُونَۚ﴾ البقرة: ٢٨٥

(இறை)தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்றதை நம்புகிறார் (அவ்வாறே) மு.்.மின்களும் (நம்புகின்றனர்) (2:285)

2. உள்ளம் நம்பியுள்ள அந்த சத்தியத்தை நாவினால் பிரஸ்தாபிக்கவேண்டும். இதுபற்றி அல்லாஹ் கூறுகையில்:

﴿وَإِذۡ أَخَذَ ٱللَّهُ مِيثَٰقَ ٱلَّذِينَ أُوتُواْ ٱلۡكِتَٰبَ لَتُبَيِّنُنَّهُۥ لِلنَّاسِ وَلَا تَكۡتُمُونَهُۥ فَنَبَذُوهُ وَرَآءَ ظُهُورِهِمۡ وَٱشۡتَرَوۡاْ بِهِۦ ثَمَنًا قَلِيلًاۖ فَبِئۡسَ مَا يَشۡتَرُونَ﴾ آل عمران: ١٨٧

தவிர வேதம் கொடுக்கப்பட்டோரிடம் அவர்கள் அதை மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும், அதை மறைக்கக் கூடாது என்று அல்லாஹ் உறுதி மொழி வாங்கியதை (அம்மக்களுக்கு நபியே! நீர் நினைவுபடுத்துவீராக). அப்பால், அவர்கள் அதைத் தங்கள் முதுகுகளுக்குப் பின்னால் எறிந்து விட்டு அதற்குப் (பதிலாகச்) சொற்ப கிரயத்தைப் பெற்றுக் கொண்டார்கள் - அவர்கள் (இவ்வாறு) வாங்கிக் கொண்டது மிகக் கெட்டதாகும். (3:187)

சுயநலன்களை கருத்தில் கொண்டு சத்தியத்தின் பால் அழைப்பதை விட்டுவிடக்கூடாது. அபாயம் ஏற்படலாம் என்றோ உண்மையை பகிரங்கப்படுத்தினால் உயிரை இழக்க நேரலாம் என்றோ அஞ்சுவது போன்ற விதிவிலக்கான சூழ்நிலைகளில் வேண்டுமானால் சத்தியத்தின் பால் அழைப்பதை விட்டுவிடலாம். காரணம் அழிவிலிருந்து உயிரை காப்பது த.்.வாவின் நலனாகவும் சத்தியத்திற்கு தொண்டு செய்யும் வாய்ப்பாகவும் உள்ளது. மேற்கூறப்பட்ட தடைகள் ஏதுமின்றி சத்தியத்தை பகிரங்கமாக சொல்லவேண்டிய சந்தர்ப்பத்தில் மௌனம் சாதிப்பது ரோசமற்ற, வைராக்கியமில்லாத செயலாகும், இது அழிவுக்குரிய காரியம். அறிவு குறைவு, ஈமானில் பலவீனம் என்பவற்றினால் அன்றி இந்நிலை ஏற்படுவதில்லை. இது மு.்.மினானவருக்கு அருகதையான காரியமல்ல.

3. நாவினால் பிரஸ்தாபிப்பதை செயலால் உண்மைப்படுத்த வேண்டும். இது பற்றி அல்லாஹ் கூறுகையில்:

﴿أَتَأۡمُرُونَ ٱلنَّاسَ بِٱلۡبِرِّ وَتَنسَوۡنَ أَنفُسَكُمۡ وَأَنتُمۡ تَتۡلُونَ ٱلۡكِتَٰبَۚ أَفَلَا تَعۡقِلُونَ﴾ البقرة: ٤٤

நீங்கள் வேதத்தையும் ஓதிக் கொண்டே, (மற்ற) மனிதர்களை நன்மை செய்யுமாறு ஏவி, தங்களையே மறந்து விடுகிறீர்களா? நீங்கள் சிந்தித்துப் புரிந்து கொள்ள வேண்டாமா? (2:44)

4. சத்தியத்தின் சாட்சியம் அனைத்து வாதங்களையும் மிஞ்சியதாய் இருக்கவேண்டும். இதுபற்றி அல்லாஹ் கூறுகையில்:

﴿يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ كُونُوا۟ قَوَّٰمِينَ لِلَّهِ شُهَدَآءَ بِٱلْقِسْطِ ۖ وَلَا يَجْرِمَنَّكُمْ شَنَـَٔانُ قَوْمٍ عَلَىٰٓ أَلَّا تَعْدِلُوا۟ ۚ ٱعْدِلُوا۟ هُوَ أَقْرَبُ لِلتَّقْوَىٰ﴾ الماىٔدة: ٨

மு.்.மின்களே! நியாயத்தை நிலை நாட்டுவதற்காக அல்லாஹ்வுக்கு நீங்கள் உறுதியான சாட்சியாக இருங்கள், எந்த ஒரு கூட்டத்தார் மீதும் நீங்கள் கொண்டுள்ள வெறுப்பு நீதி செய்யாமலிருக்க உங்களைத் தூண்ட வேண்டாம். நீதி செய்யுங்கள். இதுவே (தக்வாவுக்கு) - பயபக்திக்கு மிக நெருக்கமாகும். (அல் மாஇதா.் : 8).

5. இஸ்லாமிய த.்.வாவை முன்னெடுத்து செல்லும் பாதையில் உயிரை அர்ப்பனிக்கும் தேவை ஏற்படுமாயின் அதற்கும் தயாராக இருக்க வேண்டும். இப்பாதைக்கு பணம், நேரம், உழைப்பு மற்றும் பெறுமதிமிக்க அனைத்துமே அர்ப்பனமாகும். இதுபற்றி அல்லாஹ் கூறுகையில்:

﴿وَٱلَّذِينَ جَـٰهَدُوا۟ فِينَا لَنَهْدِيَنَّهُمْ سُبُلَنَا ۚ وَإِنَّ ٱللَّهَ لَمَعَ ٱلْمُحْسِنِينَ﴾ العنكوت: ٦٩

மேலும் எவர்கள் நம்முடைய வழியில் முயல்கின்றார்களோ நிச்சயமாக அவர்களை நம்முடைய நேரான வழிகளில் நாம் செலுத்துவோம் நிச்சயமாக அல்லாஹ் நன்மை செய்வோருடனேயே இருக்கின்றான்.(29:69)

## தற்காலத்தில் கையாள வேண்டிய சில த.்.வா முறைமைகள்

தற்கால உலகத்தில் நாம் கடந்து செல்லும் சூழ்நிலைகளை நோக்கினால் அவை பல்வேறுபட்ட காணங்களினால் நபிமார்களின் காலத்திற்கு ஒத்திருப்பதை தெளிவாக அறிய முடிகிறது. அல்லாஹ்வின் அருள்வேதமாம் அல்குர்ஆனும் நபி (ஸல்) அவர்களின் ஸுன்னாவாவும் அதன் உண்மையான வடிவில் நம்முன் காட்சியளிக்கிறது. ஆகவே மறுமை வரை புதியதொரு நபியின் வருகை இவ்வுலகிற்கு தேவைப்படமாட்டாது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿ٱلْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِى وَرَضِيتُ لَكُمُ ٱلْإِسْلَـٰمَ دِينًا﴾ الماىٔدة: ٣

இன்றையதினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை நான் பூரணமாக்கிவிட்டேன், மேலும் எனது அருட்கொடையை உங்கள் மீது முழுமையுமாக்கிவிட்டேன். இஸ்லாத்தை உங்களுக்குரிய மார்க்கமாகப் பொருந்திக்கொண்டேன். ( 5 : 3) மார்க்க சட்டம் எம்மிடம் முழுமையாக உள்ளது. முழு மனித சமூகத்திற்கும் நேர்வழியை காண்பிப்பதும், முஸ்லிம்களை சத்தியத்தில் நிலைநிறுத்தச் செய்வதும் அதன் பொறுப்பாக உள்ளது.

## படிப்படியாக த.ஃ.வாப்பணியில் முன்னேறிச் செல்லல்

நபிமார்கள் அனுப்பப்படும் காலப்பகுதி எப்போதுமே சத்தியம் நிலைகுலைந்து, தலைகீழாக புரட்டப்பட்டிருக்கும். அறியாமையே சமூகத்தில் தலையோங்கி இருக்கும். ஆகவே அவர்கள் சில அடிப்படைகளைக் கொண்டே முதலில் அழைப்பார்கள். முன்னோடியான இஸ்லாமிய சமூகமொன்று அமைந்திருக்கவேண்டிய அடிப்படைகளின் பக்கமே முதலில் அவர்களின் பணி அமையப் பெற்றிருக்கும். பின்வரும் மூன்று காரியங்களின் பக்கம் அழைப்பதே நபிமார்களின் பிரச்சாரப் பணியின் முதற்கட்ட வேலை.

1. அனைத்து வழிபாட்டிற்கும் சொந்தக்காரன் அல்லாஹ் மாத்திரம் என நம்புவது.

2. இறை தூதர்களுக்கு முழுமையாக கட்டுப்படுதல்.

3. மறுமை வாழ்வு பற்றி முழுமையாக நம்புதல்.

## நபிமார்களின் த.ஃ.வாப்பணியில் காணப்பட்ட விசேட அம்சங்கள்

நபிமார்களின் த.ஃ.வாப்பணியில் சில சிறப்பம்சங்கள் காணப்பட்டன. அவை உள்ளத்தில் பாரிய தாக்கங்களை ஏற்படுத்தக்கூடியவையாக இருந்தன. அழைப்புப் பணியில் ஈடுபடுபவர் எக்கால தேசத்தை கொண்டவராக இருப்பினும் நபிமார்களின் அந்நடைமுறைகள் யாது என அவசியம் அறிந்திட வேண்டும்.

1. நபிமார்கள் தமது கூட்டாத்தாரிடம் அவர்களின் சொந்த மொழியிலேயே பேசுபவர்களாக இருந்தனர். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَمَآ أَرۡسَلۡنَا مِن رَّسُولٍ إِلَّا بِلِسَانِ قَوۡمِهِۦ لِيُبَيِّنَ لَهُمۡ﴾ إبراهيم: ٤

ஒவ்வொரு தூதரையும் அவருடைய சமூகத்தாருக்கு அவர் விளக்கிக் கூறுவதற்காக அவர்களுடைய மொழியிலேயே (போதிக்கும் படி) நாம் அனுப்பிவைத்தோம் (14:4)

2. நபிமார்களின் பேச்சு தெளிவான பேச்சாகவே இருக்கும். நோக்கத்தை மறைவின்றி தெளிவாக விபரிக்கக்கூடிய வழிமுறைகளையே அவர்கள் கையாள்பவர்களாக இருந்தனர்.

3. நபிமார்களும், சத்தியப்பாதையில் அழைக்கும் அழைப்பாளர்களும் தமது இலக்கை அடைய வித்தியாசமான பல வழிகளில் சென்றனர். அதாவது ஒரு உண்மையை புரியவைப்பதற்கு பல வழிமுறைகளை பயன்படுத்துபவர்களாக இருந்தனர்.

4. இன்னும் அழைப்பாளர் உற்சாகம் நிறைந்தவராகவும், உயிரோட்டமுள்ள உணர்வுமிக்கவராகவும் இருக்கவேண்டும். தத்துவம் பேசுவோர் போன்று வெறுமனே மதியுடன் மாத்திரம் உரையாடுபவராகவோ அல்லது சூபிஸ வாதிகள் போன்று வெறும் ஆன்மாவுடன் மாத்திரம் பேசுபவராகவோ இருக்ககூடாது. நபி (ஸல்) அவர்கள் பேசினால் உள்ளத்தில் உணர்வுகளை கிள்ளிவிடுவது போன்று பேசுவார்கள். உரையாற்றினால் அன்னாரின் கண்கள் சிவந்துவிடும், சப்தம் உரக்கும், கோபம் பொங்கிவரும், படைத்தளபதி போன்று எச்சரிப்பார்கள். நபியவர்களின் உரையில் காணப்பட்ட இந்த சூடான நிலைக்கு, அன்னாரிடம் காணப்பட்ட சத்திய வாக்கு, உறுதியான இறை நம்பிக்கை, ஆழமான

மனவலிமை, சமூக நிலைக்காக வேதனைப்படும் தன்மை, சிரமப்படும் மக்களுக்காக கருணைகாட்டல் போன்ற பேச்சை தனித்துவமிக்கதாக ஆக்கக்கூடியவை காரணங்களாக உள்ளன. மேலும் இப்பண்புகள்தான் சத்தியம் அசத்தியம் என்பவற்றை பிரித்து, உண்மையான அழைப்பாளர் யார்? பொய்யான, வழிகெட்ட, அர்தத்தை புரட்டி பேசக்கூடிய அழைப்பாளர் யார்? என்பதையெல்லாம் தெளிவுபடுத்துவதாய் அமைந்துள்ளது.

5. அழைப்பாளர்களின் நோக்கம் ஒன்றுபட்டதாக இருக்கும். அவர்கள் எல்லோரும் தங்களின் கூட்டிலுள்ள அனைத்து அம்புகளையும் ஒரே திசையிலேயே எறியக்கூடியவர்கள். ஆகவேதான் அனைத்து நபிமார்களும் பேசுவதில் குறிப்பிட்ட திட்மொன்றை கடைப்பிடிப்பார்கள். தமது சிந்தனையில் உறுதியாக இருப்பார்கள்.

6. நபிமார்கள் தமது உரையில் கருத்துக்களை, வார்த்தைகளை கவனித்துப் பேசக்கூடியவர்களாக இருந்தார்கள். நீட்டவேண்டிய இடத்தில் நீட்டியும், சுருக்கவேண்டிய இடத்தில் சுருக்கியும் பேசுவார்கள். சொல்லும் முறை, பேச்சைக் கேட்பவர்களின் மனோநிலை போன்றவற்றையெல்லாம் கவனத்தில் கொள்வார்கள். நபி (ஸல்) அவர்களின் பின்வரும் கூற்று இதற்கு நல்லதொரு சான்றாகும். ““இலகுபடுத்துங்கள் சிரமப்படுத்தாதீர்கள். சோபனம் கூறுங்கள், விரட்டாதீர்கள்.””

7. சடைவு, வெறுப்பு, அத்துமீறல் போன்ற உணர்வுகளைத் தூண்டும் அனைத்தையும் நபிமார்கள் தங்கள் பிரச்சாரப்பணியில் தவிர்ந்திருந்தார்கள். அல்லாஹ் கூறுகிறான்:

﴿ٱذۡهَبَآ إِلَىٰ فِرۡعَوۡنَ إِنَّهُۥ طَغَىٰ ۝٤٣ فَقُولَا لَهُۥ قَوۡلٗا لَّيِّنٗا لَّعَلَّهُۥ يَتَذَكَّرُ أَوۡ يَخۡشَىٰ﴾ طه: ٤٣ - ٤٤

““ நீங்கள் இருவரும் ஃபிர்அவ்னிடம் செல்லுங்கள் நிச்சயமாக அவன் வரம்பு மீறிவிட்டான். நீங்கள் இருவரும் அவனிடம் (சாந்தமாக) மென்மையான சொல்லால் சொல்லுங்கள், அதனால் அவன் நல்லுபதேசம் பெறலாம், அல்லது அச்சம் கொள்ளலாம்.”” (20:43,44)

மேலும் கூறுகிறான்:

﴿ٱدۡعُ إِلَىٰ سَبِيلِ رَبِّكَ بِٱلۡحِكۡمَةِ وَٱلۡمَوۡعِظَةِ ٱلۡحَسَنَةِۖ وَجَٰدِلۡهُم بِٱلَّتِي هِيَ أَحۡسَنُۚ إِنَّ رَبَّكَ هُوَ أَعۡلَمُ بِمَن ضَلَّ عَن سَبِيلِهِۦ وَهُوَ أَعۡلَمُ بِٱلۡمُهۡتَدِينَ﴾ النحل: ١٢٥

(நபியே!) உம் இறைவனின் பாதையில் (மக்களை) விவேகத்துடனும், அழகிய உபதேசத்தைக் கொண்டும் நீர் அழைப்பீராக! இன்னும், அவர்களிடத்தில் மிக அழகான முறையில் தர்க்கிப்பீராக! மெய்யாக உம் இறைவன், அவன் வழியைவிட்டுத் தவறியவர்களையும் (அவன் வழியைச் சார்ந்து) நேர்வழி பெற்றவர்களையும் நன்கு அறிவான். (16:125)

பிறரின் மத உணர்வை புண்படுத்தும் வார்த்தைகளை பயன்படுத்தாது அவர்களின் தவறான நம்பிக்கைகளுக்கு மாத்திரமே வேட்டுவைப்பார்கள். அதற்கான தெளிவான சான்றுகளையும் முன்வைப்பார்கள். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَا تَسُبُّوا۟ ٱلَّذِينَ يَدْعُونَ مِن دُونِ ٱللَّهِ فَيَسُبُّوا۟ ٱللَّهَ عَدْوًۢا بِغَيْرِ عِلْمٍ ۗ كَذَٰلِكَ زَيَّنَّا لِكُلِّ أُمَّةٍ عَمَلَهُمْ ثُمَّ إِلَىٰ رَبِّهِم مَّرْجِعُهُمْ فَيُنَبِّئُهُم
بِمَا كَانُوا۟ يَعْمَلُونَ﴾ م: ١٠٨

அவர்கள் அழைக்கும் அல்லாஹ் அல்லாதவற்றை நீங்கள் திட்டாதீர்கள் (அப்படித் திட்டினால்) அவர்கள் அறிவில்லாமல், வரம்பை மீறி அல்லாஹ்வைத் திட்டுவார்கள் - இவ்வாறே ஒவ்வொரு சமூகத்தாருக்கும் அவர்களுடைய செயலை நாம் அழகாக ஆக்கியுள்ளோம் - பின்பு அவர்களுடைய மீட்சி அவர்களின் இறைவனிடமே இருக்கிறது. அப்போது அவர்கள் செய்ததை அவர்களுக்கு அவன் அறிவிப்பான். (6 : 108)

மென்மையான இனிமை கலந்த வார்த்தை மூலம் அவர்களின் கடுகடுப்பான பேச்சிற்கு பதிலளிப்பார்கள். கடினத்தன்மையை மென்மையால் மாற்றிடுவார்கள். ஏனெனில் அதுதான் அழைப்பாளர் மக்களின் உள்ளங்களை வெற்றிகொண்டு, அவற்றை தன்பக்கம் ஈர்ப்பதற்கான வழி. நபி (ஸல்) அவர்கள் கூறியதற்கேற்பப் ““மென்மை காரியத்தை அலங்கரிக்கும். அது இல்லாத காரியம் அசிங்கமாகும்””.

## அழைப்பு (த.ஃவா)ப்பணியில் அழைக்கப்படுபவரின் மனோ நிலையை கருத்தில் கொள்ளல்

விதை எவ்வளவுதான் சீரானதாயினும் அது வளர சீரான பூமியும், நல்ல மண்ணும் பொறுத்தமான காலநிலையும் எப்படி அவசியமோ அவ்வாறுதான் சத்தியமும். அது தாக்கத்தை ஏற்படுத்தும் சக்தியினை இயல்பாகவே பெற்றிருக்கிறது. ஆயினும் அழைக்கப்படுபவரின் மனோ நிலை யாது என்பதை கவனிக்கும் தேவை அதற்கு உண்டு. ஆகவே அழைப்பாளர் இதனை கவனத்தில் கொள்ளவேண்டும். உள்ளங்களை பொறுத்தவரை காலமாற்றங்கள் போன்று அதற்கு ஏற்படும் சூழ்நிலைகளை பொறுத்து ஏற்கவோ, மறுக்கவோ, விரும்பவோ வெறுக்கவோ, முன்னோக்கவோ பின்வாங்கவோ செய்யலாம். எனவே இஸ்லாமிய த.ஃவாப் பணி செய்பவர், விவசாயிகள் காலமாற்றத்தையும், விவசாயத்திற்கு பொருத்தமான காலசூழ்நிலைகளையும் அறிந்து வைத்திருப்பதுபோன்று உள்ளங்களுக்கு ஏற்படும் இம்மாற்றங்கள் பற்றி பூரண அறிவும், ஆழமான அனுபவமும் உள்ளவராக இருக்கவேண்டும். மனிதர்கள், வெள்ளி தங்கம் போன்ற உலோகப் பொருளுக்கு ஒத்தவர்கள். ஒவ்வொரு உலோகப் பொருளுக்கும் தனியான கவனிப்பும் அதற்குப் பொறுத்தமான வேலைப்பாடும் உண்டு.

நபிமார்களின் பிரச்சாரப் பணியின் அமைப்பு மற்றும் அவர்கள் பெற்றுவந்த இறை வழிகாட்டல் என்பவற்றில் இருந்து இதற்கான சில அடிப்படைகளை பெறமுடியும். இவ்வாறு பெறப்பட்ட சில விடயங்களை முடிந்தவரை நான் கூற முனைகிறேன். இதன் ஒளியில் அழைப்பாளர் இன்னும் சில அடிப்படைகளை கண்டெடுத்து அவற்றை த.ஃவாவிற்கான சந்தர்ப்பங்களில் பயன்படுத்தலாம். யதார்த்தத்தில் இவை மனிதனின் பொதுவான விளக்கத்தோடு தொடர்புபட்ட அம்சங்கள். அழைப்புப் பணி புரிபவர் நல்ல இயல்பும், தூய்மையான எண்ணும் கொண்டவராய் இருப்பின் அதன் நோக்கம் யாது? எத்தகைய ஆளநீலம் அதற்கு உண்டு என்பதையும் அவர் அறிவார். அதன் பின்னணியில் நாம் இங்கு கூறவிருக்கும் அம்சங்களை தனது கண்முன் வைத்து செயல்பட்டால் குறுகிய

காலப்பகுதியொன்றில் தனது பிரச்சாரப்பணி நபிமார்களின் பிரச்சாரப்பணியின் அமைப்புடன் ஒத்திருக்கும் நிலையை உறுவாக்க முடியும்.

## த.ீ.வாப்பணியில் பேணவேண்டிய அடிப்படைகள்

1. முன்வைக்கப்படும் ஒவ்வொரு விடயத்துக்கும் பல பகுதிகள் உண்டு. அவற்றில் சிலது சுலபமாகவும் சாத்தியமாகவும் வேறு சிலது கடினமாகவும் கசப்பாகவும் இருக்கும். கடினமான பகுதியை நீர் ஒருவருக்குக் காண்பித்தால் அதை எற்காது மறுத்து புறக்கனிக்கலாம். இலகுவான பகுதியை நீர் ஒருவருக்குக் காண்பித்தால் அதை அழகிய முறையில் ஏற்றும் அதற்காக இசைந்தும் அதன் மூலம் ஆறுதலும் பெறலாம். எனவேதான் நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்: ""நீங்கள் காரியங்களை இலகுவாக்குங்கள் சிரமப்படுத்தாதீர்கள், நன்மாராயம் கூறுங்கள் விரட்டிவிடாதீர்கள்"". மேலும் கூறினார்கள்: ""நீங்கள் இலகுவாக்குபவர்களாகவே அனுப்பப்பட்டுள்ளீர்கள் சிரமம் வழங்குபவர்களாக அல்ல"".

2. ஒவ்வொரு கமூகத்தவர்களுக்கும் அவர்கள் வளர்ந்துவந்த சில கொள்கைகளும் பழக்கங்களும் உண்டு. அவர்கள் அதில் உறுதியாக இருப்பார்கள். ஆகவே அழைப்பாளர் அவற்றை கவனத்தில் கொள்ளவேண்டும். அறியாமையை கிளப்பிவிடும் அனைத்து விடயங்களையும் அவர் தவிர்ந்து இருக்கவேண்டும். ஒவ்வொரு சமூகத்திற்கும் குறிப்பான சில கொள்கைகள், பழக்கங்கள், பண்பாடுகள் உண்டு அவற்றை அழைப்பாளர் கவனத்தில் கொள்ளவேண்டும் நேரடியாக அவற்றை தாக்கி அவர்களின் மார்க்க உணர்வுகளை புண்படுத்தக் கூடாது. ஏனெனில் நாம் அழைப்பு விடுக்கும் அம்மனிதனிடமுள்ள தவறான நம்பிக்கைகளை நேரடியாக தாக்குவது தீய விளைவுகளை ஏற்படுத்தும். அதன் காரணமாக த.ீ.வாவை அவர் ஏற்க மறுக்கலாம். மேலும் அவர் உள்ளத்தில் அறியாமையும், கொள்கை நம்பிக்கை, பழக்கவழக்கங்களில் கண்மூடித்தனமான வெறியும் தோன்றலாம்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿إِذۡ جَعَلَ ٱلَّذِينَ كَفَرُواْ فِي قُلُوبِهِمُ ٱلۡحَمِيَّةَ حَمِيَّةَ ٱلۡجَٰهِلِيَّةِ﴾ **الفتح: ٢٦**

(கா.ீ.பிராக) நிராகரித்துக் கொண்டிருந்தார்களே அவர்கள் தங்கள் உள்ளங்களில் வைராக்கியத்தை – முட்டாள்தனமான வைராக்கியத்தை – உண்டாக்கிக் கொண்ட சமயம். (48:26)

மேலும் அவரிடம் உருவான இந்த வெறி அழைப்பாளரை பகைக்கவும், இழிவுபடுத்தும், ஏசிப்பேசவும் செய்யலாம். ஆகவேதான் அல்குர்ஆன் இத்தகைய தீய குணங்களை கிழப்பிவிடுவதை அவசியம் தவிர்க்கவேண்டும் என்பதை பின்வருமாறு தெளிவுபடுத்துனிற்னது.

﴿وَلَا تَسُبُّواْ ٱلَّذِينَ يَدۡعُونَ مِن دُونِ ٱللَّهِ فَيَسُبُّواْ ٱللَّهَ عَدۡوَۢا بِغَيۡرِ عِلۡمٖۗ كَذَٰلِكَ زَيَّنَّا لِكُلِّ أُمَّةٍ عَمَلَهُمۡ ثُمَّ إِلَىٰ رَبِّهِم مَّرۡجِعُهُمۡ فَيُنَبِّئُهُم بِمَا كَانُواْ يَعۡمَلُونَ﴾ **الأنعام: ١٠٨**

அவர்கள் அழைக்கும் அல்லாஹ் அல்லாதவற்றை நீங்கள் திட்டாதீர்கள் (அப்படித் திட்டினால்) அவர்கள் அறிவில்லாமல், வரம்பை மீறி அல்லாஹ்வைத் திட்டுவார்கள் -

இவ்வாறே ஒவ்வொரு சமூகத்தாருக்கும் அவர்களுடைய செயலை நாம் அழகாக ஆக்கியுள்ளோம் - பின்பு அவர்களுடைய மீட்சி அவர்களின் இறைவனிடமே இருக்கிறது. அப்போது அவர்கள் செய்ததை அவர்களுக்கு அவன் அறிவிப்பான். (6 : 108)

பிரச்சாரகர் த.ஃவாவை முன்னெடுத்து செல்லுகையில் மிக அழகிய வார்த்தைகளையே கூற வேண்டுமெனவும் அழைப்பாளர்களுக்கு அல்குர்ஆன் பணித்துள்ளது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَقُل لِّعِبَادِي يَقُولُوا الَّتِي هِيَ أَحْسَنُ ۚ إِنَّ الشَّيْطَانَ يَنزَغُ بَيْنَهُمْ ۚ إِنَّ الشَّيْطَانَ كَانَ لِلْإِنسَانِ عَدُوًّا مُّبِينًا ﴿٥٣﴾ رَّبُّكُمْ أَعْلَمُ بِكُمْ ۖ إِن يَشَأْ يَرْحَمْكُمْ أَوْ إِن يَشَأْ يُعَذِّبْكُمْ ۚ وَمَا أَرْسَلْنَاكَ عَلَيْهِمْ وَكِيلًا﴾ الإ سراء: ٥٣ - ٥٤

(நபியே!) என் அடியார்களுக்கு அவர்கள் அழகியதையே சொல்ல வேண்டும் என்று கூறுவீராக! நிச்சயமாக ஷைத்தான் அவர்களுக்கிடையில் (தீயதைத் தூண்டி) விஷமஞ் செய்வான் நிச்சயமாக ஷைத்தான் மனிதனுக்குப் பகிரங்கமான பகைவனாக இருக்கின்றான். உங்களுடைய இறைவன் உங்களைப் பற்றி நன்கறிவான் அவன் நாடினால் உங்களுக்கு கிருபை செய்வான் அல்லது அவன் நாடினால் உங்களை வேதனை செய்வான் நாம் உம்மை அவர்களுக்கு வகீலாக (பொறுப்பாளியாக) அனுப்பவில்லை. (அல் இஸ்ரா.ஃ. 53 – 54)

3. சில மனிதர்களிடம் அவர்களை பெரிது படுத்தி பேசவேண்டும் எனும் பழக்கம் உண்டு. அவர்களுடன் பேசும்போது அவர்களின் மதிப்பை கருத்தில் கொள்ளவேண்டும்மெனக் கருதுவார். பேசுபவர் அவ்வாறு அவரை மதிக்காத விதத்தில் நடந்துகொண்டால் முழுமையாக அவர்களை புறக்கனித்துவிடுவார். இது சத்தியத்தை விட்டும் அவர்களை தடுத்துவிடும். ஆகவே அழைப்பாளர் இவர்களின் இந்த பலவீனத்தை முடிந்தவரை கவனத்தில் கொள்ளவேண்டும். ஏனெனில் அழைப்பை ஏற்கவும், சத்தியத்தை அதன் உண்மையான வடிவில் பார்க்கவும் தடைஏற்பட்டுவிடகூடாது. இதன் காரணமாகவே முஸா, ஹாரூன் ஆகிய நபிமார்களை பிர்அவ்னிடம் செல்லுமாறு கூறுகையில் அல்லாஹ் பின்வறுமாறு கூறுகிறான்:

﴿اذْهَبَا إِلَىٰ فِرْعَوْنَ إِنَّهُ طَغَىٰ ﴿٤٣﴾ فَقُولَا لَهُ قَوْلًا لَّيِّنًا لَّعَلَّهُ يَتَذَكَّرُ أَوْ يَخْشَىٰ﴾ طه: ٤٣ - ٤٤

"" நீங்கள் இருவரும் ஃபிர்அவ்னிடம் செல்லுங்கள் நிச்சயமாக அவன் வரம்பு மீறிவிட்டான். நீங்கள் இருவரும் அவனிடம் (சாந்தமாக) மென்மையான சொல்லால் சொல்லுங்கள், அதனால் அவன் நல்லுபதேசம் பெறலாம், அல்லது அச்சம் கொள்ளலாம்."" (தாஹா : 43, 44)

மேலும் எமது நபி (ஸல்) அவர்களுக்கும் அதே கட்டளையை பின்வருமாறு கூறியுள்ளான்:

﴿فَبِمَا رَحْمَةٍ مِّنَ اللَّهِ لِنتَ لَهُمْ ۖ وَلَوْ كُنتَ فَظًّا غَلِيظَ الْقَلْبِ لَانفَضُّوا مِنْ حَوْلِكَ ۖ فَاعْفُ عَنْهُمْ وَاسْتَغْفِرْ لَهُمْ﴾ آل عمران: ١٥٩

அல்லாஹ்வுடைய ரஹ்மத்தின் காரணமாகவே நீர் அவர்களிடம் மென்மையாக (கனிவாக) நடந்து கொள்கிறீர் (சொல்லில்) நீ கடுகடுப்பானவராகவும், கடின சித்தமுடையவராகவும் இருந்திருப்பீரானால், அவர்கள் உம் சமூகத்தை விட்டும் ஓடிப்போயிருப்பார்கள் எனவே

அவர்களின் (பிழைகளை) அலட்சியப்படுத்திவிடுவீராக அவ்வாறே அவர்களுக்காக மன்னிப்புத் தேடுவீராக (ஆல இம்ரான் : 159)

அழைக்கப்படுபவரின் மரியாதையை கருத்தில் கொள்வது என்பது, சத்தியத்திற்கும் அழைப்புப் பணிக்கும் குந்தகம் ஏற்படாத வண்ணம் அமைந்திருத்தல் வேண்டும். மனிதர்களுக்கு அவர்களுக்குரிய மதிப்பை வழங்குங்கள் என அன்னல் நபி ஸல் அவர்கள் தமது உபதேசங்களின் மூலம் ஆர்வமூட்டியுள்ளார்கள். படித்த ஒருவருடன் கையாழும் முறையை படிக்காத சாதாரன ஒருவருடன் கையாழ முடியாது. நபியவர்கள் மன்னர்களுக்கு அழைப்பு விடுத்து கடிதங்கள் எழுதும்போது கூட அவர்களுடைய பதவியை மதித்துத்தான் எழுதுவார்கள். உதாரணமாக ‘ரோம் மன்னர் ஹிரகலுக்கு…..’ என்று எழுதுவார்கள்.

4. அழைக்கப்படும் மனிதன் வெறுமனே மறுப்பவராகவும் விமர்சிப்பவராகவும் இருக்கக்கண்டால் அழைப்பாளர் அவரை விட்டுவிடுவது நல்லது. வேறொரு பொருத்தமான தருனத்தை பார்க்க வேண்டும். அவர் அமைதியுடனும் தெளிவான சிந்தனையுடனும் இருக்கும் தருனத்தை எதிர்பார்க்கவேண்டும். இவ்வழிகாட்டலை அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான் :

﴿وَإِذَا رَأَيْتَ ٱلَّذِينَ يَخُوضُونَ فِىٓ ءَايَٰتِنَا فَأَعْرِضْ عَنْهُمْ حَتَّىٰ يَخُوضُوا۟ فِى حَدِيثٍ غَيْرِهِۦ ۚ وَإِمَّا يُنسِيَنَّكَ ٱلشَّيْطَٰنُ فَلَا تَقْعُدْ بَعْدَ ٱلذِّكْرَىٰ مَعَ ٱلْقَوْمِ ٱلظَّٰلِمِينَ﴾ الأنعام: ٦٨

(நபியே!) நம் வசனங்களைப் பற்றி வீண் விவாதம் செய்து கொண்டிருப்போரை நீர் கண்டால், அவர்கள் அதைவிட்டு வேறு விஷயங்களில் கவனம் செலுத்தும் வரையில் நீர் அவர்களைப் புறக்கணித்து விடும் (இக்கட்டளையைவிட்டு) ஷைத்தான் உம்மை மறக்கும்படிச் செய்துவிட்டால், நினைவு வந்ததும், அந்த அநியாயக்கார கூட்டத்தினருடன் நீர் அமர்ந்திருக்க வேண்டாம். (அல் அன்ஆம் : 68). விவாதிப்பவர்கள் எதிர்த்தரப்பினர் சத்தியத்தை ஏற்றுக் கொள்ளாதபட்சத்திலும் அவர்களையே பின்தொடர்ந்து சென்று கொண்டிருப்பதைத் தடுப்பதையும் இவ்வசனம் உள்ளடக்கியுள்ளது.

5. அழைக்கப்படக்கூடியவர் வேலைப்பளுவில் இருக்கம் போதோ அல்லது தனக்கு விருப்பமான ஒரு செயலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போதோ எமது விடயத்தை நாம் முன்வைக்கக் கூடாது. சிலவேளை இதுவும் எமது கருத்தை ஏற்காமலிருக்க ஒரு காரணமாக அமையலாம்.

முன் கூறப்பட்ட நபருக்கும் இவருக்குமிடையில் வேறுபாடுள்ளது. முதலாமவர் விதண்டாவாதமாக மறுப்பவர். இரண்டாமவர் வேலைப்பளுவிலிருப்பவர். இருவருக்குமிடையில் உள்ள ஒற்றுமை என்னவெனில் இருவருமே நாம் முன்வைக்கும் கருத்தை செவிமடுக்கும் நிலையிலில்லை. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் : வாரத்தில் ஒரு முறை மக்களுக்கு உரை நிகழ்த்துங்கள். (அது போதாது எனக் கருதி) அதற்கு நீங்கள் மறுத்தால் (வாரத்தில்) இரண்டு முறை உரை நிகழ்த்துங்கள். அதை விட அதிகமாகப் போனால் மூன்று முறை உரை நிகழ்த்துங்கள். (அதை விட அதிகமாகப் போய்) இந்தக் குர்ஆன் மீது மக்களுக்குச் சடைவை ஏற்படுத்திவிடாதீர்கள். மக்கள் எதையோ பேசிக் கொண்டிருக்கும்போது நீங்கள் அவர்களிடம் சென்று உரையாற்ற, அதையடுத்து அவர்களின் பேச்சு தடைபட்டுவிட, அதனால், அவர்களை நீங்கள் சோர்வடையச் செய்கிற நிலையில்

உங்களை நான் காணக் கூடாது. மாறாக, நீங்கள் (அப்போது) மௌனமாக இருங்கள். அவர்களாக விரும்பி உங்களைக் கேட்டுக் கொண்டால் அவர்களிடையே உரையாற்றுங்கள். (புஹாரி : 6337).

6. அடிக்கடி உபதேசம் செய்வதாலோ, அவசியமின்றி பேச்சை நீடிப்பதாலோ அல்லது ஒரே பாணியில் பேசுவதாலோ நாம் பேசக்கூடியவருக்கு சோம்பலையும் சடைவையும் ஏற்படுத்தாமலிருக்க வேண்டும். நபியவர்களும் தோழர்களும் இதில் அதிக கவனம் செலுத்துவார்கள்.

ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள் : இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் மக்களுக்கு ஒவ்வொரு வியாழனும் உபதேசம் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு மனிதர் இவர்களை நோக்கி, அபூ அப்தில்லாஹ்வே தாங்கள் தினமும் எங்களுக்கு உபதேசம் செய்வதை நான் விரும்புகின்றேன் என்றார்கள். அதற்கு (உங்களைச் சலிப்படையச் செய்து விடுவேனோ என்று அஞ்சுவதுதான் இதைவிட்டும் என்னைத் தடுக்கிறது. நான் உங்களுக்குச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் கவனித்து அறிவுரை கூறுகிறேன். அவ்வாறுதான் நபி(ஸல்) அவர்கள் நாங்கள் சலிப்படைவதை அஞ்சி எங்களுக்கு அறிவுரை கூறிவந்தார்கள் என்றார்கள். (புஹாரி 70, முஸ்லிம் 2821).

7. அழைப்புப்பணியில் ஈடுபடுபவர் எப்போதும் முழுமையான தயார் நிலையில் இருக்க வேண்டும். எப்போது சந்தர்ப்பம் கிடைத்தாலும் அதனை சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். அதற்கு யூஸுஃப் (அலை) அவர்களின் த.ஃவா முறை அழகான ஓர் உதாரணமாகும். அதனை அல்லாஹ் அல்குர்ஆனில் பின்வருமாறு கூறுகின்றான் :

﴿وَدَخَلَ مَعَهُ ٱلسِّجْنَ فَتَيَانِ ۖ قَالَ أَحَدُهُمَآ إِنِّىٓ أَرَىٰنِىٓ أَعْصِرُ خَمْرًا ۖ وَقَالَ ٱلْءَاخَرُ إِنِّىٓ أَرَىٰنِىٓ أَحْمِلُ فَوْقَ رَأْسِى خُبْزًا تَأْكُلُ ٱلطَّيْرُ
مِنْهُ ۖ نَبِّئْنَا بِتَأْوِيلِهِۦٓ ۖ إِنَّا نَرَىٰكَ مِنَ ٱلْمُحْسِنِينَ ﴿٣٦﴾ قَالَ لَا يَأْتِيكُمَا طَعَامٌ تُرْزَقَانِهِۦٓ إِلَّا نَبَّأْتُكُمَا بِتَأْوِيلِهِۦ قَبْلَ أَن يَأْتِيَكُمَا ۚ ذَٰلِكُمَا
مِمَّا عَلَّمَنِى رَبِّىٓ ۚ إِنِّى تَرَكْتُ مِلَّةَ قَوْمٍ لَّا يُؤْمِنُونَ بِٱللَّهِ وَهُم بِٱلْءَاخِرَةِ هُمْ كَٰفِرُونَ ﴿٣٧﴾ وَٱتَّبَعْتُ مِلَّةَ ءَابَآءِىٓ إِبْرَٰهِيمَ وَإِسْحَٰقَ
وَيَعْقُوبَ ۚ مَا كَانَ لَنَآ أَن نُّشْرِكَ بِٱللَّهِ مِن شَىْءٍ ۚ ذَٰلِكَ مِن فَضْلِ ٱللَّهِ عَلَيْنَا وَعَلَى ٱلنَّاسِ وَلَٰكِنَّ أَكْثَرَ ٱلنَّاسِ لَا يَشْكُرُونَ ﴿٣٨﴾
يَٰصَٰحِبَىِ ٱلسِّجْنِ ءَأَرْبَابٌ مُّتَفَرِّقُونَ خَيْرٌ أَمِ ٱللَّهُ ٱلْوَٰحِدُ ٱلْقَهَّارُ ﴿٣٩﴾ مَا تَعْبُدُونَ مِن دُونِهِۦٓ إِلَّآ أَسْمَآءً سَمَّيْتُمُوهَآ أَنتُمْ
وَءَابَآؤُكُم مَّآ أَنزَلَ ٱللَّهُ بِهَا مِن سُلْطَٰنٍ ۚ إِنِ ٱلْحُكْمُ إِلَّا لِلَّهِ ۚ أَمَرَ أَلَّا تَعْبُدُوٓا۟ إِلَّآ إِيَّاهُ ۚ ذَٰلِكَ ٱلدِّينُ ٱلْقَيِّمُ وَلَٰكِنَّ أَكْثَرَ ٱلنَّاسِ لَا
يَعْلَمُونَ ﴿٤٠﴾ يَٰصَٰحِبَىِ ٱلسِّجْنِ أَمَّآ أَحَدُكُمَا فَيَسْقِى رَبَّهُۥ خَمْرًا ۖ وَأَمَّا ٱلْءَاخَرُ فَيُصْلَبُ فَتَأْكُلُ ٱلطَّيْرُ مِن رَّأْسِهِۦ ۚ قُضِىَ
ٱلْأَمْرُ ٱلَّذِى فِيهِ تَسْتَفْتِيَانِ﴾ يوسف: ٣٦ - ٤١

அவருடன் இரண்டு வாலிபர்களும் சிறையில் புகுந்தனர். அவ்விருவரில் ஒருவன், ""“நான் திராட்சை மது பிழிவதாக நிச்சயமாக ஒரு கனவு கண்டேன்"" என்று கூறினான். மற்றவன், ""“நான் என் தலைமீது ரொட்டி சுமப்பதாகவும், அதிலிருந்து பறவைகள் தின்பதாகவும் கனவு கண்டேன்"" என்று கூறினான். (பின் இருவரும் ""“யூஸுஃபே!) எங்களுக்கு இவற்றின்

விளக்கத்தை அறிவிவப்பீராக, மெய்யாக நாங்கள் உம்மை (ஞானமுள்ள முஹ்ஸின்களில்) - நன்மை செய்பவர்களில் ஒருவராகக் காண்கிறோம்"" (என்று கூறினார்கள்).

அதற்கு அவர் கூறினார் ""உங்களிருவருக்கும் அளிக்கக்கூடிய உணவு உங்களிடம் வ(ந்து சே)ருவதற்கு முன்னரும் - (இக்கனவுகளின்) பலனை நீங்களிருவரும் அடைவதற்கு முன்னரும் - இவற்றின் விளக்கத்தை உங்களிலிருவருக்கும் கூறிவிடுகிறேன். இது என் இறைவன் எனக்குக் கற்றுக் கொடுத்தவற்றிலிருந்தும் உள்ளவை. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்ளாதவர்களும், மறுமையை நிராகரிப்பவர்களுமான சமூகத்தாரின் மார்க்கத்தை நான் நிச்சயமாக விட்டு விட்டேன்.

""நான் என் மூதாதையர்களான இப்றாஹீம், இஸ்ஹாக், ய.்.கூப் ஆகியோரின் மார்க்கத்தைப் பின்பற்றுகிறேன். அல்லாஹ்வுக்கு எதையும் நாங்கள் இணைவைப்பது எங்களுக்கு தகுமானதல்ல. இது எங்கள் மீதும் (இதர) மக்கள் மீதும் அல்லாஹ் புரிந்த அருளாகும் - எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்துவதில்லை.

""சிறையிலிருக்கும் என் இரு தோழர்களே! வெவ்வேறான பல தெய்வங்கள் இருப்பது நல்லதா? அல்லது (யாவரையும்) அடக்கி ஆளகின்ற ஒருவனான அல்லாஹ்வா?

""அவனையன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவை யாவும் நீங்கள் உங்கள் மூதாதையரும் வைத்துக் கொண்ட (வெறும் கற்பனைப்) பெயர்களேயன்றி வேறில்லை அவற்றுக்கு அல்லாஹ் யாதொரு ஆதாரத்தையும் இறக்கி வைக்கவில்லை. அல்லாஹ் ஒருவனுக்கே அன்றி (வேறெவர்க்கும்) அதிகாரம் இல்லை. அவனையன்றி (வேறு எவரையும்) நீங்கள் வணங்கக் கூடாது என்று அவன் (உங்களுக்குக்) கட்டளையிட்டிருக்கின்றான். இதுவே நேரான மார்க்கமாகும். ஆனால் மனிதர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்து கொள்வதில்லை.

""சிறையிலிருக்கும் என் இரு தோழர்களே! (உங்கள் கனவுகளின் பலன்களாவன) உங்களிருவரில் ஒருவர் தம் எஜமானனுக்கு திராட்சை மதுவைப் புகட்டிக் கொண்டிருப்பார் மற்றவரோ சிலுவையில் அறையப்பட்டு, அவர் தலையிலிருந்து பறவைகள் கொத்தித் தின்னும் நீங்களிருவரும் விளக்கம் கோரிய காரியம் (கனவின் பலன்) விதிக்கப்பட்டுவிட்டது"" (என்று யூஸு.்.ப் கூறினார்). (யூஸுப்.். 36-41)

இச்சம்பவம் விரிவாக வருமாறு : இரு மனிதர்கள் சிறைச்சாலையில் நுழைகின்றார்கள். அவ்விருவரும் வித்தியாசமான இரு கனவுகள் காண்கின்றனர். அதன் உண்மை நிலையை அறிய விரும்பிய போது அதே சிறைச்சாலையில் நபி யூஸுப் (அலை) அவர்களைக் காணுகின்றார்கள். அவரிடத்தில் மாத்திரம்தான் இதற்கு விளக்கம் கேட்கலாம் என்றெண்ணி அவ்விருவரும் அவருக்கு முழு மரியாதையையும் கண்ணியத்தையும் வழங்கி, தத்தமது கோரிக்கைகளை முன்வைக்கின்றார்கள். எனினும் யூஸுப் (அலை) அவர்கள் விடையளிப்பதில் அவசரம் காட்டவில்லை. இச்சந்தர்ப்பத்தை தனது தனித்துவத்தைப் பெரிதாகக் காட்டவோ அல்லது அவ்விருவருடைய விருப்பத்தையும் சம்பாதிக்கவோ அல்லது தனது சுயநலனுக்காகவோ யூஸுப் (அலை) அவர்கள் பயன்படுத்தவில்லை. மாறாக அவ்விருவருடைய இப்பெறுமதி மிக்க நேரத்தை அழைப்புப் பணிக்குப் பயன்படுத்தவே முனைகின்றார்கள்.

கனவுக்கு விளக்கமளிப்பதுதான் அடிப்படையெனினும் அதிலும் த.ஃவாச் செய்யலாம் என்பதைப் பிரதிபலிக்கும் விதத்தில் தனது நோக்கத்தை செயற்படுத்துகின்றார்கள். இது இரண்டு விடயங்களை சுட்டிக் காட்டுகின்றன :

1. விவசாயிகள் மழை பொழிவதையும், சீரான காலநிலையையும் எதிர்பார்த்திருப்பது போல் அழைப்பாளர் அழைப்புப் பணிக்குரிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும்.

2. அழைப்பு விடுப்பதற்கான ஒரு சந்தர்ப்பத்தை அல்லாஹ் ஏற்படுத்தித் தந்தால் அதனை வீணடிப்பதாகாது. மாறாக அதலிருந்து உச்சகட்ட பயனை அடைய முயற்சிக்க வேண்டும்.

8. அழைப்பாளன் தான் அழைப்பு விடுப்பவனிடம் பிடிவாதத்தையும் அசத்தியத்திலேயே தொடர்ந்திருப்பதையும் கண்டுகொண்டால் அவனுடைய வழிகேட்டை இன்னும் அதிகப்படுத்தி சத்தியத்தை வெறுக்க வைக்கும் காரியங்களை முடியுமானளவு தவிர்ந்து கொள்ள வேண்டும். அவனுடைய பிடிவாதங்களைப் போக்கி சத்தியத்தின் கதவுகளைத் திறக்கும் வியூகங்களை வகுக்க வேண்டும். அவனுக்கு மறுப்புக்கூற முடியாதளவு, சத்தியத்தை விட்டும் தூரமாக முடியாதளவு திறமையாகப் பேசிப் புரிய வைக்க வேண்டும். நாம் தெளிவு படுத்திக் கொண்டிருக்கும் இவ்விடயம் தொடர்பாக அல்குர்ஆன் இப்ராஹீம் (அலை) அவர்களுக்கும் அக்காலத்தில் வாழ்ந்த ஒரு மன்னனுக்குமிடையில் இடம்பெற்ற உரையாடலை அழகான முறையில் முன்வைக்கின்றது. இச்சந்தர்ப்பத்தில் அது மிகவும் பொருத்தமான உதாரணமாகும்.

﴿أَلَمْ تَرَ إِلَى ٱلَّذِى حَآجَّ إِبْرَٰهِـۧمَ فِى رَبِّهِۦٓ أَنْ ءَاتَىٰهُ ٱللَّهُ ٱلْمُلْكَ إِذْ قَالَ إِبْرَٰهِـۧمُ رَبِّىَ ٱلَّذِى يُحْىِۦ وَيُمِيتُ قَالَ أَنَا۠ أُحْىِۦ وَأُمِيتُ ۖ قَالَ إِبْرَٰهِـۧمُ فَإِنَّ ٱللَّهَ يَأْتِى بِٱلشَّمْسِ مِنَ ٱلْمَشْرِقِ فَأْتِ بِهَا مِنَ ٱلْمَغْرِبِ فَبُهِتَ ٱلَّذِى كَفَرَ ۗ وَٱللَّهُ لَا يَهْدِى ٱلْقَوْمَ ٱلظَّـٰلِمِينَ﴾ ال بقرة: ٢٥٨

அல்லாஹ் தனக்கு அரசாட்சி கொடுத்ததின் காரணமாக (ஆணவங்கொண்டு), இப்ராஹீமிடத்தில் அவருடைய இறைவனைப் பற்றித் தர்க்கம் செய்தவனை (நபியே!) நீர் கவனித்தீரா? இப்ராஹீம் கூறினார் ““எவன் உயிர் கொடுக்கவும், மரணம் அடையும்படியும் செய்கிறானோ, அவனே என்னுடைய ரப்பு(இறைவன்)”” என்று. அதற்கவன், ““நானும் உயிர் கொடுக்கிறேன், மரணம் அடையும் படியும் செய்கிறேன்”” என்று கூறினான் (அப்பொழுது) இப்ராஹீம் கூறினார் ““திட்டமாக அல்லாஹ் சூரியனைக் கிழக்கில் உதிக்கச் செய்கிறான், நீ அதை மேற்குத் திசையில் உதிக்கும்படிச் செய்!”” என்று. (அல்லாஹ்வை) நிராகரித்த அவன், திகைத்து வாயடைப்பட்டுப் போனான். தவிர, அல்லாஹ் அநியாயம் செய்யும்கூட்டத்தாருக்கு நேர் வழி காண்பிப்பதில்லை. (அல் பகரா : 258).

இப்ராஹீம் (அலை) அவர்கள் முதலில் எடுத்துவைத்த ஆதாரம் அளவுக்கதிகமான அவனின் ஆட்சிமோகத்தை உசுப்பவில்லை. அவனை வாயடைக்கச் செய்து, திருப்தியளிக்கக் கூடிய சரியான பதிலை இரண்டாவது தடவையாக கொடுக்க நேரிட்டது. ஆனாலும் அதனையும் முழுமையாகச் செய்யவில்லை. ஏனெனில் அல்குர்ஆன் அழைப்புப்

பணியில் கடைபிடிக்குமாறு விலியுறுத்திய நெறியுடன் முரண்படக் கூடியவராக இருந்தார்கள்.

﴿ٱدۡعُ إِلَىٰ سَبِيلِ رَبِّكَ بِٱلۡحِكۡمَةِ وَٱلۡمَوۡعِظَةِ ٱلۡحَسَنَةِۖ وَجَٰدِلۡهُم بِٱلَّتِي هِيَ أَحۡسَنُۚ﴾ النحل: ١٢٥

(நபியே!) உம் இறைவனின் பாதையில் (மக்களை) விவேகத்துடனும், அழகிய உபதேசத்தைக் கொண்டும் நீர் அழைப்பீராக! இன்னும், அவர்களிடத்தில் மிக அழகான முறையில் தர்க்கிப்பீராக! (அந்நஹ்ல் : 125). அதிலும் குறிப்பாக அழைப்பு விடுக்கப்படக் கூடிய அம்மன்னனின் மனநிலையையும், அவனிடம் விதைக்கப் பட்டிருந்த அசத்தியத்தில் பிடிவாதம், தீமையில் உறுதியாகத் தொடர்ந்திருத்தல் போன்ற பண்புகளை அறிந்த பின்னர் இவர்கள் மேற்கண்ட ஆதாரத்தை முன்வைத்தார்கள்.

## அழைப்பாளருக்குத் தேவையான சாதனங்கள்

**அழைப்பாளர் சமூகத்தில் தனித்து நிற்பவர் :**

ஒவ்வொரு முஸ்லிமும் தனது சக்தி, வல்லமை, வசதிக்கேற்றவாறு த.்.வாச் செய்யும்படி ஏவப்பட்டுள்ளான். இறைவன் கூறுகின்றான் :

﴿وَٱلۡمُؤۡمِنُونَ وَٱلۡمُؤۡمِنَٰتُ بَعۡضُهُمۡ أَوۡلِيَآءُ بَعۡضٖۚ يَأۡمُرُونَ بِٱلۡمَعۡرُوفِ وَيَنۡهَوۡنَ عَنِ ٱلۡمُنكَرِ﴾ التوبة: ٧١

மு.்.மினான ஆண்களும் மு.்.மினான பெண்களும் ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாக இருக்கின்றனர் அவர்கள் நல்லதைச் செய்ய தூண்டுகிறார்கள் தீயதை விட்டும் விலக்குகிறார்கள். (அத்தௌபா : 71).

நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள் : உங்களில் ஒருவர் ஒரு தீமையைக் கண்டால் அதனை அவர் கையினால் தடுக்கட்டும். அதற்கு அவர் சக்திபெறாவிட்டால் தனது நாவினால் தடுக்கட்டும். அதற்கும் அவர் சக்திபெறாவிட்டால் தனது உள்ளத்தால் அதனை வெறுக்கட்டும். அதுதான் இறைநம்பிக்கையின் மிக பலவீனமான நம்பிக்கை. (முஸ்லிம் : 49).

இதனால்தான் த.்.வாவின் இரு கதவுகளையும் இம்மகத்தான பணியை செய்வதற்காக அனைத்து மக்களுக்கும் திறந்து விடுகிறோம். அதே நேரம் அத்த.்.வாவிற்கு பதிலளிப்பவர்களில் சிலருக்கு அல்குர்ஆன் ஸுன்னாவின் வழிகாட்டலில் அமைந்துள்ள இஸ்லாமியப் போதனைகளைக் கற்பிப்பதிலும், அதன்படி வளர்ப்பதிலும் அதிக கரிசனை எடுக்கின்றோம். இந்தக் கடினமான பணியை மேற்கொள்வதற்காக அவர்களை முழுமையைக பலமான முறையில் தயார்படுத்துகின்றோம். அதனால் முன் சென்ற நபிமார்கள், ரஸூல்மார்கள், ஸலபுஸ் ஸாலிஹீன் மீதிருந்தது போன்று இவர்கள் மீதும் பொறுப்பு ஏற்படுகின்றது. ஏனெனில் அல்லாஹ் இந்த த.்.வாவிற்காக மனிதர்களில் மிகச் சிறந்தவரைத் தெரிவு செய்துள்ளான். இந்த சமூகத்தை ஏனைய படைப்பினங்களைவிட வேறுபிரித்துக் காட்டியுள்ளான். அவர்களுக்கு ஆற்றல், அதிகாரம், அதிக தாக்கத்தை ஏற்படுத்தும் வலிமை போன்றவற்றை வழங்கியுள்ளான். ஏனையோருக்குக் கொடுக்காதளவு

கல்வியறிவைக் கொடுத்துள்ளான். இவை அனைத்தும் அவர்களுக்கு ஆதரவளித்து, உதவி செய்து அவர்களை பலப்படுத்துவதற்காகவும், அவர்களுடைய அழைப்புப் பணியை வெளிப்படையாகச் செய்வதற்காகவுமே வழங்கியுள்ளான். பின்னர் நபிமார்கள், ரஸூல்மார்களைத் தொடர்ந்து இத்தூதுத்துவச் சுமையையும், அழைப்புப் பணியையும் பொறுப்பெடுக்க அறிஞர்கள், அழைப்பாளர்களிலிருந்து அல்லாஹ்வின் நேசர்கள் உருவானார்கள். நபித்துவத்தின் வராஸத்தை அவர்கள் எடுத்துக் கொண்டார்கள். நபிமார்கள் தங்க, வெள்ளிக் காசுகளை விட்டுச் செல்லவில்லை. அவர்கள் மார்க்க அறிவையே விட்டுச் சென்றார்கள். யார் அதனை எடுக்கின்றாரோ அவர் அதனை முழுமையாக எடுத்துக் கொண்டு விட்டார்.

இதனால் தற்காலத்தில் தேவையானதெல்லாம் பலமான, உறுதியான, நல்ல வழிகாட்டலில் வளர்க்கப்பட்ட அழைப்பாளர்களே. அவர்கள் இப்பொறுப்பை மேற்கொண்டு செய்து அதனால் அக்கருத்துக்கள் சமூகத்தில் ஏற்கப்பட்டு தாக்கம் செலுத்த வேண்டும்.

அல்லாஹ்வுடனும், தமக்குள்ளேயும், தமது அழைப்புப் பணியிலும் உண்மையாக நடக்கக்கூடிய, தம்மிடமுள்ள பெறுமதிமிக்க அனைத்தையும் இந்த த.ஃவாவிற்காகவும் அதன் பாதையிலும் அர்ப்பணிக்கக் கூடிய தனித்துவமான அழைப்பாளர்களே தற்காலத்தில் தேவையானவர்கள். அல்லாஹ் தன்பால் அழைப்பு விடுப்பதற்காக அவனது படைப்பினங்களில் சிறந்தவர்களைத் தெரிவு செய்து, பண்படுத்தி, இத்தூதை சுமப்பதற்காக அவர்களைத் தூய்மைப் படுத்தியுள்ளான்.

**அழைப்பாளருக்குத் தேவையான சாதனங்கள்** :

1. **அல்லாஹ்வுடனான பலமான தொடர்பு :** அழைப்பாளர் என்பவர் நல்லவற்றின்பால் வழிகாட்டக் கூடியவர், நேர்வழியின்பால் திசைதிருப்பக் கூடியவர். அவருடைய முழு நோக்கமும் மக்கள் அல்லாஹ்வை அறிந்து ஈருலக வெற்றியையும் பெற்றுக் கொள்வதே. அதனடிப்படையில், உறுதியுடனும் நம்பிக்கையுடனும் அல்லாஹ்வுடனான அவரது தொடர்பை வெளிக்காட்டுவதும், அவருடைய ஈமானை முழுநேர அடிப்படையிலானதாக அமைத்துக் கொள்வதும், முழுமையான இணைப்பு, ஆழ்ந்த தவக்குலும் அனைத்தையும் அவன்மீது வைப்பதும், மார்க்க விடயங்கள் அனைத்திலும் எவ்வித ஐயமும், சிரமுமின்றிக் கட்டுப்படுவதும் அவசியமாகும். அதன்மூலம் சொல்லிலும் செயலிலும் வளர்ந்த த.ஃவாவாக அது மாறிவிடும். இவையனைத்தும் அல்லாஹ்வின் அருளால் இலகுவான காரியங்கள்தான்.

**அல்லாஹ்வுடனான தொடர்பின் வெளிப்பாடுகள் :**

1. இஸ்லாத்திலுள்ள கடமைகளை பேணிவருவதும், அவற்றை உரிய நேரத்தில், உரிய விதத்தில் நிறைவேற்றுவதும்.

2. இரட்டிப்பு முயற்சியும், இஸ்லாத்தில் விரும்பத்தக்க சிறந்த காரியங்களை அதிகப்படுத்திக் கொள்ளத் தன்னைப் பழக்கிக் கொள்வதும். பொதுவாக நபில் தொழுகைகள், குறிப்பாக இரவுத் தொழுகை, திங்கள், வியாழன் மற்றும் மாதத்தில் 3 நட்களில் நோன்பு நோற்றல், அல்லாஹ்வின் பாதையில் அதிகம் தானதர்மங்கள் செய்தல் இன்னும் பல நற்காரியங்களில் ஈடுபடுவதைச் சுட்டிக்காட்டலாம். அழைப்புப் பாதையில் உதவியாக இருக்க இது போன்ற சாதனங்களை அதிகப்படுத்திக் கொள்ளுமாறு அல்லாஹ்

தனது நபிமார்களுக்கும் வஸிய்யத் செய்துள்ளான். மூஸா (அலை), ஹாரூன் (அலை) ஆகியோருக்குப் பின்வருமாறு வஸிய்யத் செய்கின்றான் :

﴿وَلَا تَنِيَا فِي ذِكْرِي﴾ طه: ٤٢

மேலும் என்னைத் தியானிப்பதில் (நீங்களிருவரும்) சளைக்காதீர்கள். (தாஹா : 42).

மேலும் கூறுகின்றான் :

﴿فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ﴾ البقرة: ١٥٢

நீங்கள் என்னைத் தியானியுங்கள். அப்போது நான் உங்களை நினைவில் வைத்துக் கொள்வேன். (அல் பாகரா : 152).

நல்லடியார்களைப் பற்றிக் கூறும்போது :

﴿الَّذِينَ يَذْكُرُونَ اللَّهَ قِيَامًا وَقُعُودًا وَعَلَىٰ جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالْأَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هَٰذَا بَاطِلًا سُبْحَانَكَ فَقِنَا عَذَابَ النَّارِ﴾ آل عمران: ١٩١

அத்தகையோர் நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும் தங்கள் விலாப் புறங்களில் (சாய்ந்து) இருக்கும் போதும் அல்லாஹ்வை (நினைவு கூர்ந்து) துதிக்கிறார்கள். வானங்கள், பூமி ஆகியவற்றின் படைப்பைப் பற்றியும் சிந்தித்து, ““எங்கள் இறைவனே! இவற்றையெல்லாம் நீ வீணாகப் படைக்கவில்லை, நீ மகா தூய்மையானவன் (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களைக் காத்தருள்வாயாக!”” (என்றும் கூறுவார்கள்). (ஆல இம்ரான் : 191).

எமது நபி (ஸல்) அவர்கள் தனது இரு பாதங்களும் வீங்குமளவு இரவில் நின்ற வணங்குவார்கள். அன்னை ஆஇஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள் : நபி (ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் தம் பாதங்கள் வீங்கும் அளவிற்கு நின்று வணங்குவார்கள். எனவே நான், “ஏன் இப்படிச் செய்கிறீர்கள், இறைத்தூதர் அவர்களே! தங்களின் முந்தைய பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே?” என்று கேட்டேன். அவர்கள், “நான் நன்றியுள்ள அடியானாக இருக்க விரும்ப வேண்டாமா?” என்று கேட்டார்கள். (புஹாரி 4837). நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள் : அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நான் தினமும் அல்லாஹ்விடத்தில் 70க்கும் மேற்பட்ட தடவைகள் பாவமன்னிப்புத் தேடி மீளுகின்றேன். (புஹாரி 6307).

எந்நேரமும் அல்லாஹ்வைத் தியானிப்பதும், அதனையும், இப்பணியையும் பராக்காக்கக் கூடிய அனைத்தையும் விட்டும் தூரமாகியிருப்பதும் அவசியமாகும். அவர் ஆசை வைத்தால் அல்லாஹ்விடத்தில் அவனிடமுள்ளதையே ஆசை வைக்க வேண்டும். அஞ்சினால் அல்லாஹ்வுக்கும், அவனுடைய வேதனைக்கும்தான் அஞ்ச வேண்டும். ஒதுங்குவதாயிருந்தால் அனைத்திலும் அல்லாஹ்விடமே ஒதுங்க வேண்டும். பாதுகாப்புத் தேடுவதானால் அவனிடமே தேட வேண்டும். இவ்வழியில்தான் நபிமார்களும் நல்லடியார்களும் சென்றார்கள். அவர்களுக்கு ஏதேனும் திடீரென ஏற்பட்டால் தொழுகை, பிரார்த்தனை, உண்மையான தௌபா, அல்லாஹ்வின்பால் ஒதுங்குவதன் மூலம் பாதுகாவல்

தேடுவார்கள். உடனே கஷ்டம், சோதனையெல்லாம் நீங்கி உதவியும் சந்தோசமும் வந்துவிடும்.

**அல்லாஹ்வுடனான பலமான தொடர்பின் பயன்பாடுகள் :**

அல்லாஹ்வுடனான தொடர்பின் பலத்தின் அளவுக்கேற்ப ஆழ்ந்த உறுதியான இறைநம்பிக்கை ஏற்படுகின்றது. ஈமான் என்பது காரின் வேகத்தைக் காட்டும் ஊசி போன்றது. கார் எந்தளவு வேகமாகச் செல்கின்றதோ அதனை அந்த ஊசி பிரதிபலிக்கும். இவ்வாறுதான் ஓர் அடியானின் ஈமானும். எந்தளவு கட்டுப்பாடும் வணக்கமும் அதிகரிக்குமோ அந்தளவு ஈமான் உறுதியாகி உள்ளம் உயர்வடையும். நல்லமல்களின் வீதம் குறைவடையும்போது உள்ளமும் பலவீனப்பட்டு, சோம்பலும் ஏற்பட்டு ஈமானுடைய அளவும் குன்றிவிடும். இறைவன் கூறுகின்றான் :

﴿وَإِذَا تُلِيَتْ عَلَيْهِمْ ءَايَٰتُهُۥ زَادَتْهُمْ إِيمَٰنًا﴾ الأنفال: ٢

அவனுடைய வசனங்கள் அவர்களுக்கு ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்களுடைய ஈமான் (பின்னும்) அதிகரிக்கும் (அன்பால் : 2).

மேலும் கூறுகின்றான் :

﴿هُوَ ٱلَّذِىٓ أَنزَلَ ٱلسَّكِينَةَ فِى قُلُوبِ ٱلْمُؤْمِنِينَ لِيَزْدَادُوٓا۟ إِيمَٰنًا مَّعَ إِيمَٰنِهِمْ﴾ الفتح: ٤

அவர்களுடைய ஈமானுடன் பின்னும் ஈமானை அதிகரித்துக் கொள்வதற்காக முஃமின்களின் இதயங்களில், அவன் தாம் அமைதியும் (ஆறுதலும்) அளித்தான் (அல்பத்ஹ் : 4)

**2. அழைப்பாளர் தன்னைத் திருத்திக் கொள்ள வேண்டும் :**

'உன்னிலிருந்து ஆரம்பி' இதுதான் வெற்றிபெறும் ஓர் அழைப்பாளனின் அடையாளம். ஏனையோரை சீர்திருத்தி அல்லாஹ்வின்பால் அழைக்க விரும்பும் ஓர் அழைப்பாளனக்குத் தேவையான முக்கிய சாதனங்களில் இதுவும் ஒன்றே. தன்னிலிருந்து சீர்திருத்தத்தை ஆரம்பித்து, தனது வணக்க வழிபாடுகளை சுயபரிசோதனை செய்து, ஷைத்தான் நுழைய வழியேற்படுத்திக் கொடுக்காமல் தினமும் அதனைக் கவனித்துக் கொள்ளவேண்டும். அவன் நுழைந்து விட்டால் எமது அமல்களைக் குழப்பி அதனால் அழைப்புப் பணியும் தோற்றுவிடும். காரணம், மக்கள் அழைப்பாளர்களை அவர்களுடைய கண்ணால் மாத்திரமல்ல முழு அங்கத்தாலும் கவனிக்கின்றனர். அவர்கள் எப்போதும், அழைப்பாளர்கள் தம்மிடம் எதிர்பார்ப்பதை விட இவர்கள் அழைப்பாளர்களிடம் இருந்து எதிர்பார்ப்பதும் வேண்டுவதும்தான் அதிகம்.

﴿سُنَّةَ ٱللَّهِ ٱلَّتِى قَدْ خَلَتْ مِن قَبْلُ ۖ وَلَن تَجِدَ لِسُنَّةِ ٱللَّهِ تَبْدِيلًا﴾ الفتح: ٢٣

இவ்வாறு செய்வதே அல்லாஹ்வுடைய ஸுன்னத்து (நடைமுறை) ஆகும், இதற்கு முன்பும் (இவ்வாறு) நடந்திருக்கிறது - ஆகவே அல்லாஹ்வுடைய ஸுன்னத்தில் - (நடைமுறையில்) நீர் எவ்வித மாறுதலையும் காணமாட்டீர். (அல்பத்ஹ் : 23).

உதாரணமாக ஓர் அழைப்பாளர் தன்னிடம் கஞ்சத்தனமிருப்பதாக உணர்ந்தால் மக்கள் அதனை வைத்து அவருக்கு உதாரணம் கற்பிக்கமுன் உடனடியாக அதற்கான

பரிகாரத்தைத் தேடிக் கொள்ள வேண்டும். அழைப்பாளர் தன்னிடமுள்ள குறைகளுக்குப் பரிகாரம் காணவில்லையெனின் மற்றவர்களுடைய குறைகளுக்கு எவ்வாறு பரிகாரந்தேடுவது? இதனால்தான் நபிமார்கள் தமது பெரும்பான்மையான காரியங்களில் தம்மைத் தாமே கடுமையாகக் கவனித்து சரி செய்து கொள்வார்கள். பின்னர் தமக்கு நெருங்கிய மனைவி, குழந்தைகள், ஏனைய உறவினர்களைத் திருத்துவார்கள். அல்லாஹ் கூறுகின்றான் :

﴿وَأۡمُرۡ أَهۡلَكَ بِٱلصَّلَوٰةِ وَٱصۡطَبِرۡ عَلَيۡهَا﴾ طه: ١٣٢

(நபியே!) உம் குடம்பத்தினரைத் தொழுது வருமாறு நீர் ஏவுவீராக! (தொழுகையின் மீது) நீர் பொறுமையும், உறுதியும் கொண்டிருப்பீராக! (தாஹா : 132).

**3. கல்வியறிவு :**

அழைப்பாளரிடத்தில் அவசியம் இருக்கவேண்டிய சாதனம் இக்கல்வியே. அறிவுடனும், தெளிவுடனும், நேர்வழியுடனும்தான் அழைப்பாளர் தமது பணியை மேற்கொள்ள வேண்டும். அல்லாஹ்வுக்கடுத்ததாக இப்பணியை முழு நம்பிக்கையுடன் கொண்டுசெல்ல அழைப்பாளர் கல்வியறிவு, கலாச்சாரம், மார்க்க விளக்கம், மனனசக்தி போன்றவற்றில் அதிகம் தேவையுடையவராக இருக்கின்றார். இங்கிருந்துதான் அல்குர்ஆன், ஸுன்னாவின் போதனைகள் அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் வைக்கும் நம்பிக்கையின் பெறுமதியை உணர்த்துவதாகவும், அதன்பால் தூண்டுவதாகவும் அமைந்திருக்கின்றன. இறைவன் கூறுகின்றான் :

﴿قُلۡ هَلۡ يَسۡتَوِي ٱلَّذِينَ يَعۡلَمُونَ وَٱلَّذِينَ لَا يَعۡلَمُونَ﴾ الزمر: ٩

(நபியே!) நீர் கூறும் ""அறிந்தோரும், அறியாதோரும் சமமாவார்களா? (ஸுமர் : 9).

﴿يَرۡفَعِ ٱللَّهُ ٱلَّذِينَ ءَامَنُواْ مِنكُمۡ وَٱلَّذِينَ أُوتُواْ ٱلۡعِلۡمَ دَرَجَٰتٖ﴾ المجادلة: ١١

அன்றியும், உங்களில் ஈமான் கொண்டவர்களுக்கும், கல்வி ஞானம் அளிக்கப்பட்டவர்களுக்கும் அல்லாஹ் பதவிகளை உயர்த்துவான். (அல் முஜாதலா : 11).

﴿إِنَّمَا يَخۡشَى ٱللَّهَ مِنۡ عِبَادِهِ ٱلۡعُلَمَٰٓؤُاْ﴾ فاطر: ٢٨

நிச்சயமாக அல்லாஹ்வின் அடியார்களில் அவனுக்கு அஞ்சவோரெல்லாம் - ஆலிம்கள் (அறிஞர்கள்) தாம். (பாதிர் : 28).

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ் யாருக்கு நலவை நாடுகின்றானோ அவருக்கு மார்க்கத்தில் விளக்கத்தைக் கொடுக்கின்றான். (புஹாரி 71, முஸ்லிம் 1037).

**4. உளத்தூய்மை :**

இ∴லாஸ் எனும் உளத்தூய்மைதான் அனைத்துக் கருமங்களிலும் பிரதானமானது. அதுவன்றி எக்காரியமும் எற்கப்படமாட்டாது. யதார்த்தத்தில் இ∴லாஸ் என்பது அதனுடையவரை இழி செயல்களை விட்டும் தடுத்து, அல்லாஹ்வை வணங்கும் நோக்கில் அவன்பால் முன்னோக்கி வரவைக்கும் ஓர் ஈமானிய சக்தியாகும். இக்கருத்துத்தான்

பின்வரும் அல்குர்ஆன் வசனம் மற்றும் நபிமொழியின் நோக்கமாகும். அல்லாஹ் கூறுகின்றான் :

﴿وَمَآ أُمِرُوٓا۟ إِلَّا لِيَعْبُدُوا۟ ٱللَّهَ مُخْلِصِينَ لَهُ ٱلدِّينَ حُنَفَآءَ وَيُقِيمُوا۟ ٱلصَّلَوٰةَ وَيُؤْتُوا۟ ٱلزَّكَوٰةَ﴾ البينة: ٥

""அல்லாஹ்வுக்கு வணக்கத்தை தூய்மையாக்கியவர்களாக (தவறான வழியிலிருந்து விலகி சரியான வழியில்) பிடிப்புள்ளவர்களாக அல்லாஹ்வை அவர்கள் வணங்க வேண்டும், மேலும் தொழுகையை அவர்கள் நிலைநாட்டவேண்டும், மேலும் ஸகாத்தை அவர்கள் வழங்க வேண்டும் என்பதைத் தவிர (வேறெதுவும்) அவர்களுக்குக் கட்டளையிடப்படவில்லை."" (அல் பய்யினா : 5).

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நிச்சயமாக செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே. ஒவ்வொரு மனிதனுக்கும் தான் எண்ணியதே கிடைக்கும். (புஹாரி 1, முஸ்லிம் 1907)

**5. முன்மாதிரி**

ஓர் அழைப்பாளன் தன்னை சீர் திருத்திக் கொள்வதும், ஏனையோருக்கு முன்மாதிரியாக இருப்பதும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போன்றது. அழைப்பாளர் தன்னையும் தனது நிலைகளையும் சீர்செய்து கொண்டால் உபதேசங்களுக்கு முன் தனது செயறபாடுகளிலேயே அவர் அழைக்கப்படுபவருக்கு முன்மாதிரியாக அமைந்திடுவார். அறிஞர் அர்ராஸீ என்பவர் கூறுகின்றார் : முன்மாதிரி என்பது இருவகைப்படும் :

1. அழகிய முன்மாதிரி :

﴿لَّقَدْ كَانَ لَكُمْ فِى رَسُولِ ٱللَّهِ أُسْوَةٌ حَسَنَةٌ لِّمَن كَانَ يَرْجُوا۟ ٱللَّهَ وَٱلْيَوْمَ ٱلْـَٔاخِرَ وَذَكَرَ ٱللَّهَ كَثِيرًا﴾ الأحزاب: ٢١

அல்லாஹ்வின் மீதும், இறுதி நாளின் மீதும் ஆதரவு வைத்து, அல்லாஹ்வை அதிகம் தியானிப்போருக்கு நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி உங்களுக்கு இருக்கிறது.

2. தீய முன்மாதிரி : அல்லாஹ் இணைவைப்பாளர்கள் பற்றி பின்வருமாறு கூறுகின்றான் :

﴿بَلْ قَالُوٓا۟ إِنَّا وَجَدْنَآ ءَابَآءَنَا عَلَىٰٓ أُمَّةٍ وَإِنَّا عَلَىٰٓ ءَاثَٰرِهِم مُّهْتَدُونَ﴾ الزخرف: ٢٢

அப்படியல்ல! அவர்கள் கூறுகிறார்கள் ""நிச்சயமாக நாங்கள் எங்களுடைய மூதாதையர்களை ஒரு மார்க்கத்தில் கண்டோம் நிச்சயமாக நாங்கள் அவர்களுடைய அடிச்சவடுகளையே பின்பற்றுகிறோம்."" (அஹ்ஸாப் : 22).

**6. நிதானமும் மென்மையும் :**

மக்கள் வன்முறையையும் அதில் ஈடுபடுபவர்களையையும் கடுமையாக வெறுக்கின்றனர். வன்நெஞ்சத்தையும் அக்குணமுள்ளவர்களையும் விட்டு மக்கள் தூரச் செல்கின்றனர்.

﴿فَبِمَا رَحْمَةٍ مِّنَ ٱللَّهِ لِنتَ لَهُمْ ۖ وَلَوْ كُنتَ فَظًّا غَلِيظَ ٱلْقَلْبِ لَٱنفَضُّوا۟ مِنْ حَوْلِكَ ۖ فَٱعْفُ عَنْهُمْ وَٱسْتَغْفِرْ لَهُمْ وَشَاوِرْهُمْ فِى ٱلْأَمْرِ﴾

آل عمران: ١٥٩

அல்லாஹ்வுடைய ரஹ்மத்தின் காரணமாகவே நீர் அவர்களிடம் மென்மையாக (கனிவாக) நடந்து கொள்கிறீர். (சொல்லில்) நீர் கடுகடுப்பானவராகவும், கடின சித்தமுடையவராகவும் இருந்திருப்பீரானால், அவர்கள் உம் சமூகத்தை விட்டும் ஓடிப்போயிருப்பார்கள். எனவே அவர்களின் (பிழைகளை) அலட்சியப்படுத்திவிடுவீராக. அவ்வாறே அவர்களுக்காக மன்னிப்புத் தேடுவீராக. தவிர, சகல காரியங்களிலும் அவர்களுடன் கலந்தாலோசனை செய்யும். (ஆல இம்ரான் : 159). ஒரேயடியாக மக்களுக்குத் தீர்ப்பு வழங்குவதன் மூலமோ அல்லது அவர்களுக்கெதிராக ஆதாரங்களை நிறுவுவதன் மூலமாகவோ அழைப்புப்பணி அமையக் கூடாது. மாறாக அவர்களுக்கு நேர்வழி கிடைப்பதற்குரிய அனைத்து முறைகளையும் கையாள வேண்டும். அழைப்பாளர் சதாவும் இவ்வசனத்தை நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும்.

﴿ٱدۡفَعۡ بِٱلَّتِي هِيَ أَحۡسَنُ فَإِذَا ٱلَّذِي بَيۡنَكَ وَبَيۡنَهُۥ عَدَٰوَةٞ كَأَنَّهُۥ وَلِيٌّ حَمِيمٞ﴾ فصلت: ٣٤

நீங்கள் (தீமையை) நன்மையைக் கொண்டே தடுத்துக் கொள்வீராக! அப்பொழுது, யாருக்கும் உமக்கிடையே, பகைமை இருந்ததோ, அவர் உற்ற நண்பரே போல் ஆகிவிடுவார். (புஸ்ஸிலத் : 34).

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது : (ஒரு நாள்) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நடந்துகொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தடித்த கரையுள்ள நஜ்ரான் (யமன்) நாட்டு சால்வை ஒன்றைப் போர்த்தியிருந்தார்கள். அப்போது கிராமவாசி ஒருவர் அவர்களை அடைந்து, அந்தச் சால்வையை வேகமாக இழுத்தார். அந்தக் கிராமவாசி வேகமாக இழுத்ததால் சால்வையின் ஓரப் பகுதி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது கழுத்தின் ஒரு மூலையில் (காயப்படுத்தி) அடையாளம் பதித்துவிட்டிருந்ததை நான் கண்டேன். பிறகு அவர், "முஹம்மதே! உங்களிடமுள்ள அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து எனக்குக் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள்"" என்று சொன்னார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரைத் திரும்பிப் பார்த்துச் சிரித்துவிட்டு, பிறகு அவருக்கு நன்கொடை வழங்குமாறு உத்தரவிட்டார்கள் (முஸ்லிம் 1057).

மென்மைக்கும் நிதானத்துக்கும் இவ்வளவு சிறப்பும் கண்ணியமுமென்றால், அழைப்பாளனே மக்கள் மத்தியில் உனது தாக்கம் முழுமையாக இருக்க நீரும் உமது அழைப்புப் பணியில் மென்மையாக நடந்துகொள்ள முயற்சி செய். ஏனெனில் அல்லாஹ் கடுமையைக் கொண்டு வழங்காத எத்தனையோ நலவுகளை மென்மையைக் கொண்டு வழங்குகின்றான்.

**7. இலகுபடுத்தல் :**

ஒரு விடயத்தை இலகுவாக எடுத்தும், இலகுபடுத்திக் கொடுத்தும் கையாள்வது மக்கள் மத்தியில் அழைப்புப்பணி வேகமாகச் செல்ல உதவும் முக்கிய பண்புகளிலொன்று. மாறாக ஒன்றைக் கடினமாக எடுப்பதாலும், கடினமாக்குவதாலுமல்ல. மக்களனைவரும் மார்க்கத்தை நடைமுறைப்படுத்தும் ஆற்றலில் வேறுபட்ட நிலையைக் கொண்டிருக்கின்றனர். ஒருவருக்கு முடியுமான ஒரு செயல் இன்னொருவருக்கு முடியாமலிருக்கும். ஒருவருக்குப் பொருந்தும் ஒரு விடயம் இன்னொருவருக்குப் பொருந்தாது. எனவே அனைவருக்கும் மார்க்கத்தை இலகுபடுத்திக் காட்டுவதே அவசியமாகும். அனைத்துக் காரியங்களிலும் கடினப்போக்கைக் கடைபிடிக்கும் அழைப்பாளர்கள் சிலர் தற்காலத்தில் உருவாகியிருப்பதே இஸ்லாத்திற்கு

ஏற்பட்டுள்ள மிக மோசமான சோதனையாகும். இலகு என்பதே இஸ்லாத்திலில்லை என்பதே இவர்களுடைய நிலைப்பாடுபோன்று நடந்து கொள்கின்றனர். அத்துடன் இதுபோன்றவர்கள் எது முக்கியமென்பதை வரையறுக்க மாட்டார்கள். பர்ளானதுக்கும் ஸுன்னத்தானதுக்கும் இடையில் வேறுபிரித்துப் பார்க்க மாட்டார்கள். தடுக்கப்பட்ட ஒன்றுக்கும் வெறுக்கப்பட்ட ஒன்றுக்குமிடையில் வேறு பிரிக்க மாட்டார்கள். நேரடியாக வஹீயில் அருளப்பட்டதுக்கும் ஆய்வு செய்து எடுக்கப்பட்ட விடயங்களுக்குமிடையில் பிரித்துப் பார்க்க மாட்டார்கள். மக்களுக்கு மார்க்கத்தில் சந்தேகங்களை அடுக்கிக் கொண்டே இருப்பார்கள். பரந்த இஸ்லாத்தை அவர்களுக்கு நெருக்கிக் கொடுப்பார்கள். ஷரீஅத்தின் வளைந்து கொடுக்க அனுமதிக்கப்பட்ட இடங்களில் கூட அதனைத் தடை செய்து விடுவார்கள். மொத்தத்தில் மக்களை மார்க்கத்தை வெறுக்கவே செய்துவிடுகிறார்கள். இது இவர்கள் செய்யும் மிக மோசமான செயலாகும்.

**8. பொறுமை :**

பொறுமை என்பது கோபப்படாமல் ஆத்மாவைத் தடுப்பதும், முறைப்பாடு செய்யாமல் நாவைத் தடுப்பதுமாகும். பொதுவாக இது மிகக் கடினமான படித்தரங்களில் ஒன்றாகவும், நேசத்தை வரவழைக்கும் பாதையில் மிகக் கொடூரமானதாகவும் உள்ளது. நன்மையை ஏவும் போதும், தீமையைத் தடுக்கும்போதும் அதனை நாம் யாருக்கு முன்வைக்கின்றோமோ அவர்களிடமிருந்து நிச்சயமாக எதிர்ப்புக்கள் வரத்தான் செய்யும். ஏனெனில் இவர் தடுப்பது அவர்கள் வழமையாக்கிக் கொண்ட, அவர்களுடைய ஆசையாகச் செய்துவந்த ஒன்றைத்தான். இஸ்லாம் அழைப்புப்பணி செய்யும்போது பொறுமையைக் கையாளுமாறு அழைப்பாளனுக்குப் பணிக்கின்றது.

﴿وَٱلۡعَصۡرِ ۝١ إِنَّ ٱلۡإِنسَٰنَ لَفِي خُسۡرٍ ۝٢ إِلَّا ٱلَّذِينَ ءَامَنُواْ وَعَمِلُواْ ٱلصَّٰلِحَٰتِ وَتَوَاصَوۡاْ بِٱلۡحَقِّ وَتَوَاصَوۡاْ بِٱلصَّبۡرِ﴾ اا صر: ١ - ٣

காலத்தின் மீது சத்தியமாக.

நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான்.

ஆயினும், எவர்கள் ஈமான் கொண்டு ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து, சத்தியத்தைக் கொண்டு ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து, மேலும் பொறுமையைக் கொண்டும் ஒருவருக்கொருவர் உபதேசிக்கிறார்களோ அவர்களைத் தவிர (அவர்கள் நஷ்டத்திலில்லை). (அல் அஸ்ர் 1-3).

﴿يَٰبُنَيَّ أَقِمِ ٱلصَّلَوٰةَ وَأۡمُرۡ بِٱلۡمَعۡرُوفِ وَٱنۡهَ عَنِ ٱلۡمُنكَرِ وَٱصۡبِرۡ عَلَىٰ مَآ أَصَابَكَۖ إِنَّ ذَٰلِكَ مِنۡ عَزۡمِ ٱلۡأُمُورِ﴾ لقمان: ١٧

""என் அருமை மகனே! நீ தொழுகையை நிலை நாட்டுவாயாக் நன்மையை ஏவி, தீமையை விட்டும் (மனிதர்களை) விலக்குவாயாக் உனக்கு ஏற்படும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்வாயாக் நிச்சயமாக இதுவே வீரமுள்ள செயல்களில் உள்ளதாகும்"". (லுக்மான் : 17).

அழைப்பாளனின் பொறுமை இரண்டு கோணங்களில் வேண்டப்படுகின்றது :

1. **அழைக்கப்படுபவருக்காகப் பொறுமை செய்தல்.**

அழைப்புப் பணியை மேற்கொள்ளும் போது அழைப்பாளர் அவசரப்படலாகாது. மாறக அதற்குரிய சிறந்த நேரத்தையும், சந்தர்ப்பங்களையும் தெரிவு செய்வதுடன், அழைக்கப்படுபவரின் மனநிலையையும், அதனை செவிமடுக்கக் கூடிய நிலையிலா என்பதனையும் கருத்திற்கொள்ள வேண்டும். இவையெல்லாம் தாம் முன்வைக்கும் கருத்து ஏற்கப்படுவதில் தாக்கம் செலுத்தக் கூடியவையாக உள்ளன.

அழைக்கும் போது அவசரப்பட்டு அழைக்கப்படுபவரை பலமாகப் பிடித்து உடனே அக்கருத்தை ஏற்க வேண்டுமென எதிர்பார்க்கக் கூடாது. அவருக்கு இப்புதிய கருத்துபற்றி சற்று சிந்திக்க நேரம் கொடுத்து மிருதுவாக நடந்து கொள்ள வேண்டும். மேலும் அழகாக நிதானமாக தனது கருத்தை எத்திவைப்பதுதான் அழைப்பாளருடைய பொறுப்பே தவிர அதற்குப் பதிலளிப்பதும் நேர்வழி கிடைப்பதுமல்ல என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும். இந்நிலை நபிமார்களுக்கே ஏற்படவில்லை. அழைப்பாளர்களுக்கு எவ்வாறு ஏற்படும். நிதானமாக எத்திவைப்பதுதான் அழைப்பாளருக்குரிய கடமை.

﴿وَمَا عَلَى ٱلرَّسُولِ إِلَّا ٱلْبَلَٰغُ ٱلْمُبِينُ﴾ النور: ٥٤

இன்னும் (நம் தூதைத்) தெளிவாக எடுத்துரைப்பதைத் தவிர (வேறெதுவும் நம்) தூதர்மீது கடமையில்லை. (அந்நூர் : 54).

﴿إِنَّكَ لَا تَهْدِى مَنْ أَحْبَبْتَ وَلَٰكِنَّ ٱللَّهَ يَهْدِى مَن يَشَآءُ ۚ وَهُوَ أَعْلَمُ بِٱلْمُهْتَدِينَ﴾ القصص: ٥٦

(நபியே!) நீர் நேசிப்பவர்களை(யெல்லாம்) நிச்சயமாக நேர்வழியில் செலுத்திவிட உம்மால் முடியாது ஆனால், அல்லாஹ் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான் - மேலும் நேர்வழி பெற்றவர்களை அவன் நன்கறிகிறான். (அல் கஸஸ் : 56).

2. **அழைப்புப் பணியில் பொறுமை செய்தல்.** இதன்கீழ் இரு விடயங்கள் உள்ளடங்குகின்றன :

1. இதன் நீண்ட பாதையில் பொறுமை காத்தல்.

அழைப்புப் பணியின் பாதை நீண்ட, கடினமான, சிரமங்கள் நிறைந்த பாதையாகும். ஒரு மனிதனின் உள்ளத்தில் ஈமான் சுடர்விட்டு, அவனுக்கு அல்லாஹ் அதுபற்றிய அறிவும் வழங்கியதிலிருந்து இந்த அமானிதத்தை சுமந்து அதன்பால் அழைப்பது அவன்மீது விதியாக்கப்படுகின்றது. இவ்வழியில்தான் நபிமார்களும் இச்சமுதாயத்தின் ஆரம்பகால ஸலபுகளும் சென்றார்கள். நபி நூஹ் (அலை) அவர்கள் 950 வருடங்கள் இப்பணியில் ஈடுபட்டு, தன்னால் முடிந்த அனைத்தையும் தனது மார்க்கத்திற்காக அர்ப்பணித்தார்கள்.

2. த.்.வாவில் ஏற்படும் துன்பங்களை சகித்துக் கொள்ளல்.

சில சந்தர்ப்பங்களில் உடல்ரீதியான மற்றும் உளரீதியான சில பிரச்சினைகள் அழைப்பாளருக்கு ஏற்படும். அவற்றை சகித்துக் கொண்டு பொறுமை செய்வது அவசியமாகும். ஓர் அடியானின் இறைநம்பிக்கையின் அளவுக்கேற்ப அவனுக்கு

சோதனைகளும் ஏற்படும். மக்களில் கடுமையான சோதனைக்குட்படுபவர் யாரென தான் நபியவர்களிடம் வினவியதாக ஸ.்.து பின் அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள். அதற்கு நபியவர்கள், நபிமார்கள், பின்னர் நல்லடியார்கள், பின்னர் மக்களில் அல்லாஹ்வுக்கு அதிகம் வழிப்படுபவர்கள் என்றார்கள். (திர்மிதி 2398, இப்னு மாஜா.்.4023).

**9. சுயமரியாதையும் மார்க்கத்தைச் சார்ந்திருத்தலும் :**

ஓர் அழைப்பாளனுடைய பல பண்புகளில் சுயமரியாதையும் மார்க்கத்தைச் சார்ந்திருத்தலும் பின்வரும் இறைவசனத்தில் தெளிவாகவே வெளிப்படுகின்றது :

﴿وَمَنۡ أَحۡسَنُ قَوۡلٗا مِّمَّن دَعَآ إِلَى ٱللَّهِ وَعَمِلَ صَٰلِحٗا وَقَالَ إِنَّنِي مِنَ ٱلۡمُسۡلِمِينَ﴾ فصلت: ٣٣

எவர் அல்லாஹ்வின் பக்கம் (மக்களை) அழைத்து, ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து ""நிச்சயமாக நான் (அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிபட்ட) முஸ்லிம்களில் நின்றும் உள்ளவன் என்று கூறுகின்றாரோ, அவரைவிட சொல்லால் அழகியவர் யார்?"" (இருக்கின்றார்?) (புஸ்ஸிலத் 33). மேற்கண்ட வசனம் ஓர் அழைப்பாளர் இஸ்லாத்தின்பால் சேர்ந்திருப்பதன் மூலம் அவனுடைய பெறுமதியை எடுத்துக் காட்டுகின்றது. அவனுடைய மரியாதை உயர்ந்து ஏனையோரை விட மதிப்புக் கூடியவனாக அவனை எடுத்துக் காட்டுகின்றது. இந்த மதிப்பும் மரியாதையும் அவனுடைய இனத்தையோ நிறத்தையோ வைத்து அவனுக்குக் கிடைக்கவில்லை. மாறாக இத்தூய்மையான மார்க்கத்தின்பால் சொல்லாலும், செயலாலும், நடத்தைகளாலும் சார்ந்திருப்பதனாலேயே. இறைவன் கூறுகின்றான் :

﴿إِنَّ ٱلدِّينَ عِندَ ٱللَّهِ ٱلۡإِسۡلَٰمُ﴾ آل عمران: ١٩

நிச்சயமாக (தீனுல்) இஸ்லாம் தான் அல்லாஹ்விடத்தில் (ஒப்புக்கொள்ளப்பட்ட) மார்க்கமாகும். (ஆல இம்ரான் : 19).

**அழைப்பாளர் கலாச்சாரம் :**

அழைப்பாளர் கலாச்சாரத்திலும் சிந்தனாரீதியாகத் தன்னைத் தயார்படுத்துவதிலும் அழைப்பாளர்கள் கரிசனையெடுப்பது அவர்களுடைய முக்கிய சிறப்பியல்புகளில் உள்ளது. அவர்களின் அறிவுக்கூர்மையின் அடையாளங்களிலுள்ளது. தமது வலிமையான கதாபாத்திரத்தின் அடையாளமாகும். கல்வியறிவில்லாதவர்கள் சமூகத்திற்கு எதனையும் முன்வைக்க முடியாதென்பது அறிவுள்ள அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு விடயமாகும். ஒருவர் சமூகத்தில் படிக்காதவர், கலாச்சாரம் தெரியாதவர் என்று அறியப்பட்டால் அவர் எவ்வாறு தனது சமூகத்திற்குப் பயனளிப்பார்? சமூகத்தை சீர்திருத்துவதிலும் மாற்றியமைப்பதிலும் எவ்வாறு தனது பங்களிப்பை செலுத்துவார்? மக்களுக்குத் தாக்கம் செலுத்த எவ்வாறு சக்தி பெறுவார்? தன்னடம் ஒன்றுமில்லாதவன் பிறருக்குக் கொடுக்க முடியாது.

அழைப்பாளர் தன்னிடம் பின்வரும் கலாச்சார அறிவியல் விடயங்களை வளர்த்துக் கொள்வது சிறந்தது :

1. அல்குர்ஆன், அதன் விளக்கவுரை, ஸுன்னா, நபிவரலாறு, அடிப்படைக் கொள்கை, மார்க்க சட்டக்கலை போன்ற அடிப்படைக் கல்விகளை வளர்த்துக் கொள்ளல்.

2. வரலாற்று நிகழ்வுகள் பற்றிய அறிவு.

3. மொழி, இலக்கய அறிவு. (நல்ல பேச்சுநடை, செயல்திறன், சிறந்த வசனநடை)

4. மனிதவியல் அறிவு. (உளவியல், சமூகக்கல்வி, குணநலங்கள், புவியியல்).

5. பகுத்தறிவியல்.

6. யதார்த்தவாதக் கலாச்சாரம் (இஸ்லாமிய உலகின் நடப்பு, இஸ்லாமிய எதிர்ப்புலகின் யதார்த்த நிலை).

## நவீன தொழில் நுட்பங்களை த.ஃவாப் பணியில் சேர்த்துக்கொள்ளல்

21ம் நூற்றாண்டில் வாழும் நாம் இந்த அழைப்புபணியில் புதிய முறைகளைக் கையாளுதல் காலத்தின் தேவையாகும். நவீன தொழில் நுட்பங்கள் வளர்ந்திருக்கும் இக்காலத்தில் அதனை முடியுமானளவு எங்களுக்குப் பயன்படுத்தலாம்.இந்தத் தொழில் நுட்பங்களில் மிகப்பிரதானமானது இணையத்தளங்களாகும். காற்று, நீர், நெருப்பு போன்று இணையமும் இன்று மனித வாழ்கைக்கு இன்றியமையாத ஒன்றாக மாறிவிட்டது.

இணையத்தளங்கள் என்பதும் அல்லாஹ்வின் ஏனைய படைப்பினங்களைப் போன்றுதான். அதனைப் பயன்படுத்தும் விதத்தில்தான் அதன் மார்க்கத்தீர்ப்பு உள்ளது. வெறுமனே நகைச்சுவைகளுக்கும், கேளிக்கைகளுக்கும், தவறான படங்களைப் பார்ப்பதற்கும் இவ்விணையதளங்களைப் பயன்படுத்தும்போது அவன் அல்லாஹ்விடத்தில் பாவியாகுவதுடன், சமூகத்திலும் அவமதிப்பையே பெறுகின்றான். இதே இணையதளங்களை நாம் மக்களை இஸ்லாத்தின்பால் அழைக்கவும், வழிகெட்ட கொள்கைகளில் இருப்பவர்களை நேர்வழிப்படுத்தவும் பயன்படுத்தலாம். இப்பொழுது இவன் அல்லாஹ்விடத்தில் நல்லடியானாக மாறுவதுடன் சமூகத்தில் ஒரு நல்லவனாகவும் பார்க்கப்படுகிறான்.

**இணையங்களைப் பயன்படுத்தவதிலுள்ள சிறப்பியல்புகள் :**

1. அழைப்புப்பணி உலகமயமாகிவிட்டதால் அழைப்பாளர் முழு உலகிற்கும் அழைப்புவிடுக்கின்றார்.

2. வேகமாக செய்திகளை பரவச் செய்யலாம்.

3. கருத்துச் சுதந்திரம். உண்மையென தெளிவாகப்பட்டதை தைரியமாகப் பதிவு செய்யலாம்.

4. தகவல்களை உறுப்படுத்தவும், தேடிக்கொள்ளவும் இலகுவாக்கப்பட்டுள்ளது.

எனவே அழைப்பாளர் இதனைப் பயன்படுத்த முன் இதுபற்றிய போதிய அறிவைப் பெற்றுக்கொள்ளுதல் அவசியமாகும்.

**அழைப்புப்பணிக்கு சிறந்த இணையங்கள் :**

இன்று பல இணையத்தளங்கள் இருந்தாலும் த.்.வாப்பணி செய்ய சிறந்தது சமூகத்தளங்களே. இதன் மூலம் மக்கள் மத்தியில் இலகுவாக தகவல்களை பகிரலாம். ஏனெனில் தற்காலத்தில் பேஸ்புக், டுவீட்டர், யூடியூப் போன்ற சமூக வளையமைப்புக்களைப் பயன்படுத்துவோரே மக்களில் அதிகமுள்ளனர். ஒவ்வொருவரும் தமது மொழிகளில் இவ்வளையமைப்புக்களினூடாக தமது பங்களிப்புக்களை செலுத்தலாம்.

**பேஸ்புக் (முகப்புத்தகம்) :**

உலகில் அதிக பாவணையாளர்களைக் கொண்ட சமூக இணையம் பேஸ்புக்காகும். இதன்வாயிலாக அழைப்புப்பணியை மேற்கொள்ளும் போது தகவல் அதிக நபர்களைச் சென்றடையக் கூடியதாக இருக்கின்றது. இதனைப் பயன்படுத்த மின்னஞல் முகவரி அவசியமாகும். ஒவ்வொருவரும் தமது மின்னஞல் மூலம் பேஸ்புக்கில் ஒரு கணக்கை ஆரம்பித்து உறுப்புரிமை பெற்றுக்கொள்ளலாம். பின் எங்களுக்குத் தேவையான நண்பர்களை உருவாக்கி அதன் மூலம் அழைப்புப்பணியை மேற்கொள்ளலாம்.

**டுவீட்டர் :**

டுவீட்டரும் அதிக பாவணையாளர்களைக் கொண்ட வளையத்தளமாகும். இதில் உறுப்புரிமை பெற மின்னஞல் முகவரி வேண்டும். இதன்மூலமும் அழைப்புப்பணியை திறன்பட மேற்கொள்ளலாம். எங்களது கணக்கில் இஸ்லாம் பற்றிய தகவல்களை பதிந்து வைத்தால் எங்களது நண்பர்கள் அதனை பார்க்க முடியும்.

**இணையத்தளம் மூலம் த.ஃவாப்பணி செய்யும் போது கவனிக்க வேண்டியது :**

1. பலவீனமான மற்றும் இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களை பிரசுரப்பதைத் தவிர்ந்து கொள்ள வேண்டும். பெரும்பாலும் மார்க்கத்தில் தெளிவில்லாதவர்கள் அல்லது பித்அத்வாதிகளிடமிருந்தே இவ்வாறு நிகழ்கின்றது.

2. உபதேசம் செய்யும் நல்லெண்ணத்தில் ஆதாரமற்ற, நடைமுறைச் சாத்தியமற்ற சம்பவங்கள் கதைகள் போன்றவற்றைத் தவிர்க்க வேண்டும்.

3. ஆட்சியாளர்கள் மற்றும் அறிஞர்களுடைய தவறுகளைப் பகிரங்கப்படுத்துவது சிறந்த நூற்றாண்டில் வாழ்ந்த ஸலபுகளுடைய வழிமுறைக்கு மாற்றமாகும். இது போன்ற தவறுகளை சுட்டிக்காட்டி இணையத்தில் விமர்சிப்பதால் கிடைக்கும் பலனைவிட மாற்றுமதத்தினருக்கு முஸ்லிம்களின் தவறுகளை இணங்காட்டுவதாகவே அமைந்து விடுகின்றது.

4. தனிமனிதர்களுக்கு காபிரென்றோ பித்அத்வாதியென்றோ தீர்ப்பளிப்பதையும், பத்வாக்களை அவசரப்பட்டு இணையத்தில் வழங்குவதையும் முற்றாகத் தவிர்க்க வேண்டும். நன்கு கற்றறிந்த உலமாக்களின் பணியே மார்க்கத்தீர்ப்பு வழங்குதல். அரைகுறையாகப் படித்தவர்களெல்லாம் தம் இஷ்டப்படி தீர்ப்பு வழங்குவதால் சமூகத்தில் பல பிரிவுகள் உருவாகுவதுடன், மாற்று மதத்தவர்கள் இஸ்லாத்தை விமர்சிக்கவும் முற்படுவர்.

5. மார்க்கத்தில் சிறந்த தெளிவு கிடைக்கமுன் வழிகெட்டவர்களுக்கும் மாற்றுமதத்தவர்களுக்கும் மறுப்புக் கொடுக்க முற்படக்கூடாது. சில சந்தர்ப்பங்களில் அவர்கள் முன்வைக்கும் வாதங்களுக்கு எங்களால் பதிலளிக்க முடியாவிட்டால் இஸ்லாத்தை விமர்சிக்கவும் இழிவுபடுத்தவும் முனைவார்கள்.

**அல்லாஹ் மிக்க அறிந்தவன்**